# வீரக்கதைப் பாடல்கள்

## விளக்கவியல்



பேராசிரியர், முனைவர்

திருமலர் எம். எம். மீறான் பிள்ளை

# வீரக்கதைப் பாடல்கள் விளக்கவியல்

(தமிழின் முதல் கதைப் பாடல் ஆய்வு நூல்)

**DESCRIPTIVE STUDIES OF HEROIC BALLADS**




'இலக்கியச் சுடர்', 'தமிழ் மாமணி'
பேராசிரியர், முனைவர்

**திருமலர் எம்.எம்.மீறான் பிள்ளை**

பி.எஸ்சி (விலங்கியல்), சி.ஜி.ற்றி (காந்தியம்), சி.லிங்க்ஸ் (மொழியியல்),
எம்.ஏ (தமிழ்), எம்.ஏ (வரலாறு), எம்.ஏ (அரசியல்), பிஹெச்.டி.,
முன்னாள் முதல்வர், தமிழாய்வுத் துறைத் தலைவர்,
யுஜிசி முதனிலை ஆராய்ச்சியாளர்
திருவனந்தபுரம்.



**சேகர் பதிப்பகம்**

66, பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர். நகர், சென்னை - 600 078

தொலைபேசி : 044 - 6538 3000, 97890 72478

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Veerakkathaip Paadalkal Vilakkaviyal |
| Subject | : | Descriptive Study of Heroic Folk Ballads |
| Author | : | Prof. Dr. Thirumalar Meeran Pillai |
| Edition | : | 2014 |
| Pages | : | 152 |
| Price | : | Rs. 110.00 |
| Typeset | : | Madha Printers, Chennai - 69. |
| Printers | : | Sri Aiyanar Printers<br>Chennai - 94. ✆ 9941163085, 7200063084 |
| Publishers | : | Sekar Pathippagam, Chennai - 78. |
| ISBN | : | |

# இதயக் காணிக்கை

காணும் போதெல்லாம் கண் மலர
கனிந்த முகத்துடன் அரவணைத்து
புன்முறுவல் பூக்க ஆர்வத்துடன்
ஆசீர்வதித்து அன்பு காட்டிய
அறிஞர் பெருந்தகை அனந்தை
பல்கலைக் கழகக் கல்லூரியில்
எனது முன்னோடியும்
முன்மாதிரியுமான முனைவர் பட்ட
ஆய்வுநெறியாளர் பேராசிரியர்
**சி.ஜேசுதாசனார்** அவர்கட்கும்
அதே கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியையும்
தமிழின் தலைசிறந்த நாவலாசிரியையுமான
வாஞ்சைமிகு **ஹெப்ஸிபா ஜேசுதாசனார்**
அவர்கட்கும்
இதயத்தின் ஆழத்திலிருந்து எழும்
அன்பின் காணிக்கையாக
இந்நூலை சமர்ப்பிக்கிறேன்.

- நூலாசிரியர்

# உள்ளுறை

பேராசியர், முனைவர்
**ச.வே.சுப்பிரமணியன்**
முன்னாள் தலைவர், தமிழாய்வுத் துறை,
கேரளப் பல்கலைக்கழகம்.
இயக்குநர் & தலைமைப் பேராசிரியர்,
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்
சென்னை.

# வாழ்த்துரை

பேராசிரியர், திருமலர், மீரான் பிள்ளை எழுதிய 'வீரக் கதைப் பாடல்கள் விளக்கவியல்' என்ற நூலைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. அதற்காக மகிழ்கின்றேன். நாட்டுப்புற இயலில் அமைந்த வீரக்கதைப் பாடல்களில் சிலவற்றை எடுத்துக் கொண்டு அதில் உள்ள அமைப்பையும் நயத் தினையும் நல்ல முறையில் ஆசிரியர் சுட்டியுள்ளார். அதோடு 'படைப்போர்' என்ற இலக்கியம் முஸ்லிம் இலக்கிய வகையைச் சார்ந்தது; கலிங்கத்துப் பரணி போன்ற, போர்க்காட்சிகளைக் கூறுகின்ற நிலை இதில் புதிதாக வந்துள்ளது.

'இரவிக்குட்டிப்பிள்ளைப் போர்' போன்றவை தமிழுக்கு அறிமுகப்படுத்தப்பட வேண்டிய கதைகள். சைத்தூன் கிஸ்ஸா, மலுக்கு முலுக்கு ராஜன் கதை போன்றவை தமிழகத்திற்குப் புதியவை என்று நான் நினைக்கிறேன்; தமிழுக்கு அறிமுக மாகும் வகையில் இந்த நூல் அமைந்துள்ளது. பல கோணங் களில் ஆசிரியர் இந்தக் கதைப்பாடல்களைப் பார்த்துள்ளமை பாராட்டத்தக்கது.

தமிழருக்கு அறிமுகமாகாத இது போன்ற பல நூல்களை அவர் எழுதுமாறு வேண்டுகிறேன். வாழ்த்துகிறேன்.

அன்புள்ள,
**ச.வே. சுப்பிரமணியன்**

பேராசிரியர், முனைவர்
**சி. பாலசுப்பிரமணியன்**
முன்னாள் தலைவர், தமிழாய்வுத் துறை,
சென்னை பல்கலைக்கழகம்.
துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

# அணிந்துரை

இசுலாமியத் தமிழ் இலக்கியத்திலும் நாட்டுப்புற வியலிலும் புலமை பெற்றவர் பேராசிரியர், திருமலர் எம்.எம். மீரான்பிள்ளை. இவர் எழுதிய ஒன்பது கட்டுரை களின் தொகுப்பே 'வீரக்கதைப் பாடல்கள் விளக்கவியல்' நூல்.

புலமை நலம் சான்ற கவிஞர்கள் இலக்கிய நயம் செறிய இயற்றும் நெடுங்கதைப்பாடல்கள் காப்பியம் எனப்படும். சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி, இராமகதை, பெரிய புராணம் முதலியன இத்தகைய அழியாக் காப்பியங்கள். இவை தமிழன்னை பெற்றுள்ள தலையாய அணிகலன்கள். இவை போன்ற இலக்கியங்களே தோன்ற வேண்டும் என்பது கனவுலகக் கற்பனை. இவையும் வேண்டும். இவற்றில் குறைந்தனவும் வேண்டும்.

இலக்கியக் காப்பியங்கள் கற்றவர்க்கே உரியன. இவற்றைக் கல்லார்க்கும் உரியனவாக்க எண்ணியதன் விளைவே கோவலன் கதை, பஞ்சபாண்டவர் கதை, அரிச்சந்திரன் கதை போன்ற நாட்டுப்புற இலக்கியங்கள். நாட்டுப்புற இலக்கியங்களே கற்றவர் பாடிய இலக்கியங் களுக்குக் கருக்கொடுத்தன என்பாரும் உளர்.

நாட்டுப்புற இலக்கிய ஆய்வு, அண்மை காலத்தில் பெருகி வருகின்றது. நாட்டுப்புறப் படைப்பாளர்களைப் புறவினத்தார் எனக் கருதிய காலம், மறைந்துவிட்டது. இப்படைப்புகள், ஒரு

பகுதியின் ஓர் இனத்தின் ஒரு மொழியின் பதிவேடுகள் என ஆய்வாளர்களால் நிறுவப் பெற்று வருகின்றன. நாட்டுப் புறவியல் வல்லுநர்கள், இவ்விலக்கியம் பற்றிய அரிய நூல்களைப் படைத்துத் தந்துள்ளனர். இவ்வரிசையில் 'வீரக் கதைப் பாடல்கள் விளக்கவியல்' நூல் வெளிவருகின்றது.

இந் நூலாசிரியர் முத்துறையில் முதுகலைப் பட்டம் பெற்றவர். இரு துறையில் சான்றிதழ்க் கல்வியர். இந் நூலால் நாட்டுப்புறவியலிலும் தேர்ந்தார் என்பதனை நிறுவியுள்ளார்.

காசீம் படைப்போர் முதலான ஒன்பது கதைப் பாடல்களில் இரவிக்குட்டிப் பிள்ளைப்போர், கான்சாகிபு சண்டை, இராமப் பய்யன் அம்மானை ஆகிய மூன்றும் பலர் அறிந்தன. ஏனைய ஆறும் இலைமறை காயாக இருந்தன. அவை இவ்வாசிரியரால் பலரறிய விளக்கப் பெற்றுள்ளன.

காசீம் படைப்போர், கான்சாகிபு சண்டை, அலியார் படைப்போர், சைத்தூன் கிஸ்ஸா, சக்கூன் படைப்போர், மலுக்கு முலுக்கு ராஜன் கதை என்னும் ஆறும் முஸ்லிம் வீரக்கதைப் பாடல்கள். அவற்றை அச்சமயம் சார்ந்த இவ் வாசிரியர் ஆராய்ந்திருப்பது சாலப்பொருந்தும் முஸ்லிம் தமிழ் ஆய்வாளருக்கு இவை பயன்படுவன.

இசுலாமியர்கள் தமிழுக்கு ஆற்றிய தொண்டு என எழுதுபவர்கள் சீறாப்புராணம், குணங்குடி மஸ்த்தான் சாகிபுப் பாடல்கள் போன்ற இலக்கியங்கள் அளவில் முற்றுப்புள்ளி வைத்து விடுகின்றனர். அதனை அரைப் புள்ளி யாக்கி, இசுலாமியர்கள் நாட்டுப்புறவியலுக்கு ஆற்றிய பங்கினை இந்நூல் தொடர்ந்து காட்டுகின்றது.

இவ் வகையில் இந்நூலாசிரியர் பாராட்டுக்குரியவர்.

**- சி. பாலசுப்பிரமணியன்**

'இறையருட் கவிமணி', பேராசிரியர்,
முனைவர் **கா. அப்துல் கபூர்**
முன்னாள் கல்லூரி முதல்வர்,
இயக்குநர் : முஸ்லிம் தமிழ் ஆய்வகம்,
தக்கலை.

# சிறப்புரை

**அலகிலா அருளும் அளவிலா அன்பும்**
**இலகுமோர் இறையின் இனிய பேர் போற்றி!**

அழகு உணர்வு அனைத்து மானிடர்க்கும் இயல்பானது. படித்துயர்ந்த அறிஞர்க்கும், படித்தறியா பாமரர்க்கும் கண்ணும் காதும் உள்ளன; நெஞ்சும் நாவும் உள்ளன. கண்ணாரக் காணும் காட்சிகளையும் காதாரக் கேட்கும் நிகழ்ச்சிகளையும் நெஞ்சத்திலே பதித்து வாய்மொழியாக வெளியிடுவதற்குப் படித்தோரும் பாமரரும் துடித்து நிற்கின்றனர். புலவர்கள் வெளிப் படுத்தும் சிந்தனைகள் இலக்கியங்களாக இலங்குகின்றன. பாமரர்கள் வெளிப்படுத்துகின்ற உணர்ச்சிகளும், பாமரர் களுக்காக வெளிப்படுத்துகின்ற எண்ணங்களும் 'நாட்டுப்புற இயல்' என்னும் பெயரினைப் பெறுகின்றது.

பாமரர்கள் தொடர்பான இத்தகைய பாடல்கள் பாருலகின் பல பகுதிகளிலும் போற்றிக் காக்கப்பட்டு வந்துள்ளன. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த குடிகளைக் கொண்டு முதுபுகழ் பெற்றது தமிழகம். ஆகவே தமிழ் மண்ணில் பூத்த நறுமலர்களாகிய நாட்டுப்புறப் பாடல்கள் தமிழ் நெஞ்சங் களின் தனித்தன்மையை எடுத்துக் காட்டுகின்றன.

நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படும் கற்பனை உயர்வும், உவமையழகும், ஓசை நயமும், கவிச்சுவையும் உள்ளங்களைக் கொள்ளை கொள்வனவாகும்.

**சும்மா இருக்கிற சிட்டுக் குருவிக்கு**
**சோத்தை வைப்பானேன் - அது**
**கொண்டையைக் கொண்டையை ஆட்டிக் கிட்டுக்**
**கொத்த வருவானேன்!**

இவ்வடிகளில் அமைந்துள்ள சுவை மிகப்பெரியது; ஆழ்ந்த கருத்து நயம்படக் கூறப்பட்டுள்ளது.

**ஆலம் விழுதுபோல அந்தப்புள்ளெ தலைமயிரு**
**தூக்கி முடிஞ்சாலென்ன தூக்கணத்தின் கூடுபோல?**

இத்தொடரில் மங்கையொருத்தியின் கூந்தலழகில் மனதைப் பறிகொடுத்த இளைஞனொருவன் வெளிப் படுத்துகின்ற காதலுணர்வு கவின்பெற அமைந்துள்ளது. நீண்ட கூந்தலுக்கு ஆலம் விழுதும், முடிகின்ற கூந்தலுக்குத் தூக்கணத்தின் கூடும் உவமையாகின்றன. 'அந்தப்புள்ளெ' போன்ற தொடர்கள் ஒவ்வொன்றும் உள்ளத்தின் உணர்ச்சிகளைப் பொருத்தமாகக் காட்டுகின்றன.

காதலில் பிறக்கின்ற இன்பப் பாடல்கள், திருமணத்தின் போது தோன்றுகின்ற கேலிப் பாடல்கள், குழந்தைகளைத் தாலாட்டுகின்ற பாடல்கள், மழலைக் குழவிகள் சாய்ந் தாடுவதற்கும், சப்பாணி கொட்டுவதற்கும், குரவையாடுவ தற்கும் பாடுகின்ற பாடல்கள், உழவிலும் பல்வேறு தொழில் களிலும் அயர்வு காணாதிருக்கப் பாடும் பாடல்கள், ஏற்றத்தில் நீரிறைப்பதற்கும் கடலில் கலஞ் செலுத்துவ தற்கும் பாடும் பாடல்கள் என்றிவ்வாறாக எத்தனையோ வகையான நாட்டுப் பாடல்கள் அருந்தமிழ் மண்ணில் ஆயிரக்கணக்காகக் குவிந்து கிடக்கின்றன. இத்தகைய தனிப் பாடல்கள் மட்டுமின்றி, நீண்ட கதைப் பாடல்களும் பல்கிப் பெருகியுள்ளன.

நல்லதங்காள் கதை, அல்லி அரசாணி கதை, காத்தவராயன் கதை, புலந்திரன் களவு மாலை, பவளக் கொடி மாலை, தேசிங்குராசன் கதை என்பன அவற்றுள் சில.

பேராசிரியர், திருமலர் எம்.எம்.மீரான்பிள்ளை அவர்களின் 'வீரக்கதைப் பாடல்கள் விளக்கவியல்' நூல், கதைப் பாடல்கள் ஒன்பது பற்றிய ஆராய்ச்சியின் தொகுப் பாகும். இவற்றுள் இரவிக்குட்டிப் பிள்ளைப் போர், கான்சாகிபு சண்டை, தம்பிமார் கதை, இராமப்பய்யன் அம்மானை ஆகிய நான்கும் தமிழ் நாட்டில் ஆங்கிலேயர் ஆட்சிக்குப் பின்னாலெழுந்த பின்னணியில் நிகழ்ந்த வீர நிகழ்ச்சிகள் பற்றிய போர்ப்பாடல்கள்.

காசீம் படைப் போர், அலியார் படைப் போர், சைத்தூன் கிஸ்ஸா, சக்கூன் படைப்போர், மலுக்கு முலுக்கு ராஜன் கதை ஆகிய ஐந்தும் முஸ்லிம் பெயர்கள் பூண்ட பாத்திரங்களைக் கொண்ட பின்னணியில் புனையப் பட்ட போர்ப் பாடல்கள். முன்னவை நான்கும் தெளி வான வரலாற்றுத் தொடர்புடையன. பின்னவை ஐந்தும் அவ்வாறன்று.

தமிழ் முஸ்லிம் புலவர்கள், தமிழகத்தில் வழக்கில் இருந்த தமிழ் இலக்கிய வடிவங்களையொட்டி முஸ்லிம் இலக்கியங்களை ஆக்குவதற்குப் பல முயற்சிகளை மேற்கொண்டனர். தமிழகத்தில் வழக்கிலிருந்த நாட்டுப் புறக் கதைப் பாடல்களில் ஈடுபாடு கொள்ளத் தலைப் பட்ட, தமிழ் முஸ்லிம் சமுதாய மக்களுக்காக அதே பாணியில் சில கதைப்பாடல்களைப் புனைவதற்கு முனைந்தனர்.

பாரசீக மொழியில் வெளி வந்திருந்த சில கற்பனைக் கதைகள் அவர்களின் ஆர்வத்தைத் தணிப்பதற்குக் கருவி யாக அமைந்தன. அவற்றின் அடிப்படையில் எழுந்தனவே இந் நூலுள் இடம்பெற்றுள்ள ஐந்து கதைப் பாடல்கள். காசீம் படைப் போர் போன்றவற்றுள் இஸ்லாமிய வரலாற்றுத் தொடர்புடைய சில நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன.

அலியார் படைப் போர், சைத்தூன் கிஸ்ஸா போன்றவை வரலாற்றிலிருந்து நெடுந்தூரம் விலகிச்

சென்றுள்ளன. ஆகவே அவற்றை நாட்டுமக்களின் மனப் போக்கையும் இலக்கிய ஆர்வத்தையும் எடுத்துக் காட்டும் கண்ணாடிகளாகக் கொள்ளலாம். பொதுவாக இந்நூலுள் இடம்பெற்றுள்ள எல்லாக் கதைப்பாடல்களிலும் வீரச் சுவையே விஞ்சி நிற்கின்றன; பிற சுவைகளும் விரவி வருகின்றன.

இந் நூலின் ஆசிரியர் பேராசிரியர், திருமலர் மீரான்பிள்ளை அவர்கள், நல்லியல்புகள் மிக்க நன்னெறி யாளர்; ஆற்றல் மிக்க ஆராய்ச்சியாளர். இலக்கிய மணம் கமழும் தேங்காய்ப்பட்டினம் மண்ணிலே பிறந்தது காரணமாக இளமை முதற்கொண்டே இலக்கியத் துறையில் ஈடுபாடு கொண்டு பாராட்டிற்குரிய பல முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றார். சீரிய நூலாசிரியராகவும் சிறந்த பேராசிரியராகவும், கவின் மிகுந்த கவிஞராகவும் பெயர் பெற்றுள்ளார்.

நூலாசிரியர் அவர்கள் தொடர்ந்து பயனுள்ள பல பணிகளில் ஈடுபடுவதற்கு வாசகர்கள் ஊக்கமூட்டுதல் வேண்டும். அனைத்தும் வல்ல இறைவன் நன்னாட் டங்களை நிறைவேற்றி வைப்பானாக!

தக்கலை. **கா.அப்துல் கபூர்**

# நெஞ்சோடு நெஞ்சம்

முனைவர் பட்டத்திற்காக முஸ்லிம் தமிழ் வீரப் பாடல்களை ஆய்வு செய்யும் தறுவாயில் பல்வேறு நாட்டுப்புறக் கதைப் பாடல்களைச் சுவைக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இவற்றில் இதுவரை தமிழ்கூறும் நல்லுலகம் அறியாததாய் மறைந்து மறந்து கிடந்த அரிய சில இலக்கியச் சுவடிகளும் அடங்கும். இவற்றை அறிமுகம் செய்யவேண்டும் என்னும் என் ஆர்வத்தின் காரணமாக எழுந்ததே இந்நூல்.

இதில் ஆராயப்படும் ஒன்பது கதைப் பாடல்களுள், தென்னிந்திய வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை நான்கு. இஸ்லாமிய வரலாற்று நிகழ்வுகளை மாதிரியாகக் கொண்டு கற்பனையாக அமைந்தவை நான்கு. பிரசித்தி பெற்ற இஸ்லாமிய 'கர்பலா' போரின் நிகழ்ச்சி யொன்றினை அடிப்படையாகக் கொண்டது மற்றொன்று.

மறைவாகக் கிடந்த சில போர்க்கதைப் பாடல்களை அறிமுகம் செய்வதோடு 'முஸ்லிம் தமிழ் நாட்டுப்புற வியல்' பற்றிய முதல் நூலாக மட்டுமின்றி, தமிழின் முதல் கதைப் பாடல் ஆய்வு நூலாகவும் இந்நூல் அமைகிறது.

இந்நூலின் முதல் பதிப்பு 1985ஆம் ஆண்டு மே மாதம் வெளியிடப்பட்டது. இப்போது 2014-இல் திருந்திய இப்பதிப்பு வெளியிடப்படுகிறது.

நாட்டுப்புறவியல் ஆய்வில் பல சாதனைகளை நிகழ்த்தி வரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர், பன்னூலாசிரியர் பேரறிஞர் முனைவர் ச.வே.சுப்பிரமணியனார் இந்நூலுக்கு வாஞ்சை

யுடன் வாழ்த்துரை வழங்கி வளம்பெறச் செய்துள்ளார். நாட்டாரிலக்கிய ஆய்வில் முன்னோடியாக அமையும் தொன்மையான சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் தமிழ்த் துறைத் தலைவரும், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தருமான பேரறிஞர் முனைவர் சி.பாலசுப்பிரமணியனார் இந் நூலுக்கு அகமுவந்து அணிந்துரை அளித்து அழகுறச் செய்துள்ளார்.

என்னுடைய முயற்சிக்கு உறுதுணையாய் அமைந்து உதவியவர் முஸ்லிம் தமிழ்ப் பேரறிஞர் பேராசிரியர் கா.அப்துல் கபூர் சாகிபு அவர்கள் செம்மையுறச் சிறப்புரை செய்துதவியுள்ளார். ஆய்வு வழிகாட்டியாக அமைந்து அவ்வப்போது பயனுள்ள அறிவுரைகளை அளித்தவர் பல்கலைக் கழக மான்யக் குழுவின் முன்னாள் ஆராய்ச்சிப் பேரறிஞர் செ.ஜேசுதாசனார் அவர்கள். நற்றமிழ்ச் சான்றோர் நால்வருக்கும் நேசநெஞ்சின் நிறைவான நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

என்னுடைய நூலை நம்பிக்கையுடன் வெளியிட முன்வந்துள்ளனர் சேகர் பதிப்பகத்தார். இயன்றவரை அழகுற அச்சிட்டுள்ளனர். இவர்களுக்கும் எனது இதயங் கனிந்த நன்றி.

பேரா. முனைவர்,
**திருமலர் எம்.எம்.மீறான்பிள்ளை**
கைபேசி: 94950 11317
E-mail : thirumalarmeeran@yahoo.co.in





# 1. காசீம் படைப்போர்

காசீம் படைப்போர் என்பது முஸ்லிம் நாட்டுப்புற வீரக்கதைப் பாடலாகும். முஸ்லிம் வரலாற்றில் பிரசித்தி பெற்ற கர்பலா போரின் களக்காட்சி யொன்றினைக் கதைப்பொருளாகக் கொண்டமைந்தது இது. பாமரரும் பாடத்தக்க வகையில் மனதை உந்தச் செய்யும் செந்தமிழில் அமைந்த இப்பாடல் நெகிழ்ச்சியான ஈரடிக் கண்ணிகளால் ஆனதாகும்.

காப்பு விருத்தங்கள் மூன்றும் நீங்கலாக இதயங் கவரும் இருநூற்றுப் பதினைந்து ஈரடிக் கண்ணிகள் இக் குறுங்கதைப் பாடலில் உள்ளன.

அறபும் தமிழும் தழுவிய வனப்புமிகு வாய்மொழித் தமிழில் உவமை உருவக அணிகள் வளங்கொழிக்க காசீம் படைப்போர் கதையுரைக்கப்படுவது காணலாம்.

காப்புப் பகுதியில் கதைத் தலைவர் காசீமின் குலமரபு, உரையாசிரியர் பெயர், நூற்பெயர், ஆசிரியர் பணிவு, இறைக்காப்பு முதலியன ஏற்புடைத் தமிழில் எடுத்துரைக்கப் பெறுகின்றன.

மூலநூல் உரை வழங்கியவராக ஷெய்கு மீரான் இபுறாகீம் என்பவர் உரைக்கப் பெறுகின்றார். நூலாசிரியர் பெயரும் காலமும் நூலெங்கணும் காணப்படவில்லை. எனினும், மாசில்லா நெஞ்சத்து கட்டிளங்காளை காசீம்செய் படைப்போரைக் கைவண்ணஞ் சிறக்கக் கதைப் பாட லாக்கித் தந்தவர் அப்துல் காதிர் ராவுத்தர் புலவர் என வேறு சில நூற்கள் கூறுவது ஈங்கு நோக்கத்தக்கது.

ஏக இறைவனும் ஏந்தல் நபிகளும் ஏற்றிப் போற்றப் பெறுவதோடு கதைத் தோற்றுவாய் செய்யப்படுகிறது.

இறுதியில் நாட்டுடன் மக்களும் படித்தோரும் கேட்போரும் நலமுடன் வாழ வாழ்த்தி நூல் முடிவு பெறுகிறது. 'முன்னோர்கள் பாடிய காசீம் படைப்போர்' என நூற்முகப்பில் வரும் குறிப்பு, நாட்டார் நாவில் நிதமும் பயின்று வந்த நாட்டுப்புறவியல் இயல்பினை எடுத்துரைப்பதாக அமைகிறது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் அரேபியாவின் ஆட்சி யாளராக முடிசூட்டிக் கொண்ட எசீதின் எதேச்சதி காரத்தை எதிர்த்து ஹாஷிம் குலப் பெருந்தகை இமாம் ஹுசைனார் போராட்டத்தில் ஈடுபடுகின்றார். யூப்ரடீஸ் நதிக்கரையில் நினோவாவின் அருகிலுள்ள கர்பலா எனுமிடத்தில் தங்கியிருந்த எழுபத்திரண்டு பேர்களைக் கொண்ட நபிகுல நாயகர் ஹுசைனாரின் குழுவினை, நாலாயிரம் படைவீரர்களைக் கொண்ட உமறு இப்னுச ஆதின் தலைமையிலுள்ள எசீதின் படைகள் வலிந்து தாக்கிப் போர் செய்கின்றன.

நெஞ்சை நெக்குருகச் செய்து கண்களைக் கண்ணீர் குளமாக்கும் இந்தப் போரில் ஜனநாயகத்தின் வேர்களைத் தழைக்க வைக்கும் முயற்சியில் நபிவழி வந்த ஹாஷிம் குலவீரர்கள், தோழர்கள் இறுதி மூச்சு வரையிலும் சளைக்காமல் போராடிச் சாய்ந்ததாகச் சரித்திரம் சான்று பகர்கிறது. இவர்களில் இமாம் ஹஸனாரின் இளம் பாலகர் நபிமருகர் அலிப்புலியாரின் அரும்பேரர், நபி வழித் தோன்றல் மாசில்லா இளைஞர் காசீமின் கர்பலா போர் நிகழ்ச்சியைப் பொருளாகக் கொண்ட குறுங்கதைப் பாடலே காசீம் படைப்போர் ஆகும்.

**காரணன் தூதரான**<br>
**ஹபீபுல்லா மருகரான**<br>
**நேரணி யலியார் மைந்தர்**<br>
**நிறைந்த கண்மணியாய் வந்த**<br>
**சீரணி யஸனார் பாலர்**<br>
**செய் படைப்போரைச் சொல்வாம்!**

குல உறவுமரபு கிளத்தல் வழியாக நூற்பெயரை, பொருளை நுவலும் இக்காப்புப் பாடல் வரிகள் இச் செய்தியையே உறுதிப்படுத்தி அமைகின்றன.

உமர்சஅதின் தலைமையிலுள்ள எசீதின் படைகளுடன் இதயஞ் சிறந்த இமாம் ஹுசைனாரின் சிறிய குழுவினர் இறை நம்பிக்கையுடன் போராடிக் கொண்டிருக்கின்றனர். முடியாட்சியை வேரறுக்கும் வேந்தர் நபிகள் பேரர் ஏந்தல் ஹுசைனாரின் வீரப் போராட்டத்தில் அவர்கள் தோழரெல்லாரும் ஒருவர் பின் ஒருவராக வீரசுவர்க்கம் எய்துகின்றனர். தொடர்ந்து நபிவழித் தோன்றல்களில் முதன்முதலாக ஹுசைனாரின் மூத்த மகன் அலியக்பர் போர்க் களஞ் சாடுகிறார்.

கொடியவன் ஒருவனின் வெட்டுப்பட்டுச் சகோதரர் சாயும் நெஞ்சை உருக்கும் காட்சியைக் கண்ட இளவல் காசீம் எழுச்சியும் உணர்ச்சியுங் கொண்டு போர்க்களம் புக ஆவல் கொண்டு சிறிய தந்தை, தாயாரிடம் விடை வேண்டுகிறார். தம் மகளைக் காசீம் மணம் முடிக்க வேண்டுமென்ற காசீமின் அருமைத் தந்தையாரின் இறுதி விருப்பத்தை ஹுசைனார் காசீமிடம் எடுத்துரைக்க, திருமணம் இனிது நடைபெறுகிறது. மணக் கோலம் மாறும்முன்னே களக் கோலம் பூண்டு கர்பலாவில் குதிக்கிறார் இளைஞர் காசீம்.

எசீது படையைச் சார்ந்த பெரும்வீரர் அசறக்கையும் அவரது புதல்வர் நால்வரையும் போரிட்டு வீழ்த்தவும் செய்கிறார். தொடர்ந்து தளபதி உமறுசஅதுடன் வீறு கொண்டெழுந்து போர் செய்து தாகங்கொண்டு தளர்ச்சி யுறும் வேளையில் வெட்டுப்பட்டு இறக்கிறார். சிறிய தந்தையார் இமாம் ஹுசைனார், தாயார், சுற்றத்தார் அவலமுற அவரது உடல் அடக்கஞ் செய்யப்படுகிறது. இதுவே இமைகளில் கண்ணீரைத் துளிர்க்கச் செய்யும் காசீம் படைப்போரின் கதைச் சுருக்கமாகும்.

காசீம் படைப்போரில் தலைமைப் பாத்திரமாகக் காசீம் திகழ்கிறார். காசீமின் சிறிய தந்தை ஹுசைனார்,

மனைவியார் கதீஜா, தாயார் ஆகியோர் பிற முக்கியப் பாத்திரங்களாவார். எதிர்பாத்திரப் படைப்பில் எசீதின் அமைச்சர் உமறுசாதும் தளபதி அசறக்கும் முக்கிய இடம் பெற்றுள்ளனர். எதிர்த் தலைவனாகக் கருதப்படுகின்ற எசீது கதை நிகழ்ச்சிகளில் பங்கு பெறாதது குறிப்பிடத் தக்கது. அலியக்பரும் அசறக்கின் நான்கு புதல்வரும் கணநேர நிகழ்ச்சிகளில் பங்குபெறும் பாத்திரங்களாகக் காட்டப் பெறுகின்றனர். அண்ணல் முகமது நபிகள், அலிப்புலியார், ஹஸரத் ஹஸனார், பீவிபாத்திமா முதலியோர் குறிப்பிடப்பெறும் பாத்திரங்களாக மட்டும் அமைகின்றனர்.

அநீதியை எதிர்த்துப் போராடி நீதியை நிலை நாட்டும் களவேள்வியில் களங்கமில்லா கட்டிளங் காளையான அப்துல் காசீம் கலங்காது வெந்திறல் வீரம் விளைவிக்கிறார். நாட்டாரிலக்கியத்தில் தனி நபர் வீரம் ஏற்றிப் போற்றி எடுத்துரைப்பது இயல்பு. இங்குத் தனிப்பெரும் வீரரான தகைமை காசீம் அடைத் தொடர் மொழிகளால் விளக்கப்பெறுவது காணலாம். பாலரப்துல் காசீம், நீதரப்துல் காசீம், சோதியப்துல் காசீம், சுந்தரப்துல் காசீம், ஹாஷிம் குலத்தளிர், சிங்கத்தின் குட்டி, ஆண்புலிச் சிங்கம் போன்ற இயல்பு விளக்க அடைகள் நாட்டுப் புறவியல் மரபிற்கேற்ப, தனிப்பெரும் வீரத்தலைவரைத் துலக்கியமைகின்றன.

வரலாற்று நோக்கில் கர்பலா களத்தின் நாயகராக விளங்கும் ஹஸ்ரத் ஹுசைனாரும் இயல்பு விளக்கக் குலமரபு மொழிகளால் அறிமுகப்படுத்தப்படும் பாங்கும் காணக் கிடக்கின்றது. சிங்கப்புலியலியார் தம்து செல்வ ருஸையினார், கத்தனறுஷுப் புலியலியார் கருணை மகனார் போன்ற கவிதை வரிகள் ஹுசைனாரின் பாத்திர இயல்பை விளக்குவன. இவை வீர நாட்டுப்புறப் பாடல் களின் விளக்க நிலைக்குச் சான்றாக அமைவனவாகும்.

நாட்டார் நெஞ்சில் எதிர்த்தலைவனைப் பற்றிய கணிப்பினைக் கதைப்பாடல் காட்டி நிற்பது' இயல்பு.

அநீதிக்கு அடங்கிக் கிடக்கும் கதைமாந்தரின் மன இயல்பைக் காட்டும் வகையில் பாத்திர அடை மொழிகள் அமைகின்றன. வண்டன் எசீது, வஞ்சன் எசீது, மாயன் எசீது, பங்கன் எசீது, தோசி எசீது, ஈனன் எசீது என கதைப் பாடலைச் சூழ்ந்து நின்று ரசித்துக் கேட்கும் மக்கள் மனப்பாங்கில் காசீம் படைப்போர் ஆசிரியர் எதிர்த் தலைவனை எடுத்துக் காட்டுகிறார்.

எசீதின் அமைச்சரும் தலைமைத் தளபதியுமான உமறுசாதும், மட்டியுமறு, பங்கனுமறு, துட்டனுமறு, தோசியுமறு, மாயனுமறு என அதே நிலையிலேயே சித்திரிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. கதைத் தலைவரின் குணஇயல்பினை மெருகூட்டவும், போராட்டத்தினை நியாயமூட்டவும் இவ்வகைச் சித்திரிப்புகள் துணை நிற்கின்றன எனலாம்.

கேட்போர் காதுகள் இனிக்கும் சந்த இயைபுடன் கதைப் பாடல் வரிகளைப் பாடுவது வாய்மொழி இலக்கிய மரபாகும். எதுகை, மோனை, இயைபு ஓசை நலம் சிறக்கும் வண்ணம் காசீம் படைப்போர் அமைந்துள்ளது.

எண்ணாது மெண்ணுறதே – மகனே
என் நெஞ்சங் கலங்கிறதே
உண்ணாலும் பாலமிர்தம் எனக்கு
உபயோகமில்லை கண்ணே!

ஒரே வகை எழுத்துக்கள் இரட்டையாகி வந்து நலம் பயக்கும் நிலையும் ஏகார ஓசை சுவை பயக்கும் நிலையும் இங்குக் காணக் கிடக்கின்றன. இந்நிலை காட்சி, கருத்து விளக்கத்திற்கும் உணர்ச்சிப் பெருக்கிற்கும் துணை புரிகின்றன.

கச்சுக் குதிரையின் மேல்
பச்சை ரத்தின முத்தின் துறாவும் வைத்து
வச்சிரத்தா லிழைத்த முகப்பட்டை வைத்து!

இதுபோன்று இரண்டு வரிக் கண்ணிகளில் பல இடங்களில் சந்த நயம் வந்து உள்ளம் உந்த சிந்து பாடிச் செல்வதையும் காணலாம்.

நாட்டுப்புறக் கதைப்பாடலில் வரிகளும் தொடர்களும் திரும்பத் திரும்ப வந்து செல்வது ஒரு முக்கிய இயல்பாகும். சந்த இயைபு நலத்திற்கும் கூறும் செய்திக் கருத்தின் அழுத்தத்திற்கும் வகை செய்யும் இத்தகைய இயல்புகள் காசீம் படைப்போரில் மலிந்துள்ளன.

**நீதர் அப்துல் காசீம் கூடப்போக**
**நித்தனே உதவி செய்வாய்!**

**மன்னவர் தன்னுடனே கூடப்போக**
**வல்லோன் உதவி செய்வாய்!**

**மாண்டவர் கூடப்போக**
**வல்லோனே உதவி செய்வாய்!**

கர்பலா களத்தில் உயிர்விட்ட தியாகி காசீம் பின் ஹஸனின் மனைவி இறைவனிடத்தில் இறைஞ்சும் இந்த வரிகள் தொடர்ந்து வரும் தொடரியல்புக்குத் தக்க சான்றுகளாகும். ஒரு நிகழ்ச்சியை முடித்துச் சொல்லும் இறுதித் தொடர் அடுத்த கண்ணியில் முதலில் திரும்பவும் வந்து செல்லும் அந்தாதி நிலையும் சில இடங்களில் காணப்படுகிறது. கண்ணிகளின் இறுதித் தொடர்புகள் சில இயைந்து மடக்கி வருதலையும் காண முடிகிறது.

நாட்டார் நாவில் நிலைநிற்கும் நாட்டுப்புறப் பாடல்களில் அவர்களின் மொழி மணமும் பண்பாட்டு ஒலியும் இணைந்து அமைவது இயல்பு. சாதாரணப் பேச்சு வழக்கிலுள்ள சொற்கள் பல வந்து வந்து இலக்கிய மொழியினை மீறிய யதார்த்த இயல்பைச் சுட்டிச் செல்வதும் காணலாம். தோசி, நொந்து, சுறுக்காய், கெற்பம், செண்டு, கொப்பு, பர்த்தா, விசனம் போன்ற வழக்குச் சொற்களை காசீம் படைப்போரில் காண முடிகிறது. ஜவாது, ஜோடி, நிஜார், சரூபத், துறா,

கமர்பந்து, சப்ரமஞ்சம் போன்ற பலமொழி வழக்கியலும் அமைந்துள்ளது.

முஸ்லிம்கள் பேச்சு வழக்கில் பயின்று வரும் அறபுச் சொற்கள் பலவும் ஆங்காங்கே மலிந்துள்ளன. ஸமது, தீன், ரஹ்மான், ஆலம், ஷஹீது, ஓசியத்து, நிக்காஹ், துஆ, அறுஷு, பாத்திஹா, துனியா, அதபு, மஹ்ஸர், ஆமீன், ஆகிறம், ஹக்கன், ஜென்னத், மவுத்து, ஷுக்று, கபன், சபூர், கியாமத் முதலிய அறபுச் சொற்கள் முஸ்லிம்களின் வீட்டு மொழியைக் காட்டி நிற்கின்றன.

வாய்மொழி பாட்டமைப்பு நாட்டுப்புற இலக்கியத்தின் தலைமைப் பாங்காகும். இதனால் நாட்டுப் புறப் பாடல்களில் உரைநிலைத் தாக்கம் மிகுந்து காணப் படுகிறது. காசீம் படைப்போரில் சில இடங்களில் உரை நடைத் தாக்கம் பதிந்துள்ளது.

அந்த சமயத்தில்...
அந்த மொழி கேட்டு...
சொன்ன மொழி கேட்டு...
வார்த்தை மொழி கேட்டு...
என்ற மொழி கேட்டு...
இந்தப் படி யுரைக்க...
இப்படியே மொழிய...
அங்கே இருக்கையிலே...

கதை கூறும் பாங்கில் இயல்பாய் வாய்மொழி யளவில் வந்தமையும் இந்த உரைத் தொடர்கள் காசீம் படைப்போரின் நாநவில் உரைநிலையை உணர்த்தி செல்கின்றன எனலாம்.

உவமை உருவக அணி நலன்களை அள்ளித் தருவதிலும் நாட்டாரிலக்கியம் நாட்டுப்புற முத்திரை பதித்துச் செல்வதைக் காணலாம். கருத்திற்கும் காட்சிக்கும் பொருந்தும் வகையிலான உவமை உருவகங்களைக் காசீம்

படைப்போர் அணிந்து வரும் பாங்கு காணக் கிடக்கிறது. எதிர்ப்படைக் கூட்டத்தில் காசீம் செல்லும் இயல்பை எடுத்துரைக்கும் ஆசிரியர்,

> சிங்கத்தின் குட்டியது
> யானைத் திரளில் நுழைந்தது போல்...
> ஆனைப் பரித் திரளில்
> சிங்கம் அலறியே பாய்ந்தது போல்...
> கொக்குத் தளந்தனில்
> விசையாம் ராஜாளி பாய்ந்தது போல்...

போன்ற உவமைகளைக் கையாள்கின்றார். வீர நாட்டுப் புறப் பாடலின் இயல்பிற்கேற்ப உவமைகளும் வீர உணர் விலேயே மூழ்கியெழுந்தவையாக அமைவது இயல்பே யாம். சிங்கப்புலி யலியார், ஆண்பிள்ளைச் சிங்கம், ஆண் புலிச் சிங்கம், பங்கய மாமுகம், குலக்கொழுந்து, வண்ணத் தாமரைதாள், மின்னல் விழி, பொன் கரும்பு மொழி, மின்னலிளங்கொடி, பெண்கட்கரசி போன்ற உருவகத் தொடர்கள் ஆற்றல்சான்ற இலக்கிய வழக்கினை இதயங் கவர எடுத்துரைக்கின்றன எனலாம்.

நாட்டுப்புற இலக்கியத்தில் கையறு நிலைக் காட்சிகள் மிகுந்தமைவது காணலாம். ஒப்பாரிப் பாடல்களும், புலம்பல்களும் நாட்டாரிலக்கியத்தை வளப்படுத்தும் வகைகளாகும். காசீம் படைப் போரில் வீரவுணர்வை மிஞ்சிய அவல உணர்வுக்கு இத்தகைய ஒப்பாரிகளும் புலம்பல்களும் வழிவகுத்துச் செல்கின்றன.

கட்டிளங் காளையா காசிம் பின்ஹஸன் நெஞ்சு நிமிர்த்திப் போராடிக் களத்தில் வெட்டுப்பட்டு வீழ்ந்திறந்த நிலைகண்டு சிறிய தந்தையார், தாயார், மனைவியார் அழுது அரற்றும் வரிகள் நெஞ்சை யுருக்கும் நிலையில் அமைவன.

> எங்கள் குடிக்கரசே மகனே
> இருப்பாய் என்றெண்ணியிருந்தேன்

**தங்க மகனாரே எங்கள்**
**தலைவிதியிதுவோ!**

சிறிய தந்தையார் ஹஸ்ரத் ஹுசைனார் மகனை மடியில் கிடத்திச் சிந்தை மதிமயங்கிப் பொங்கி வந்த துயரத்தினை அடக்கமுடியாமல் கூறிய வரிகள் இவை.

மணக்கோலத்தில் மனம் பதறாது களம்கண்ட காசீம் உடலைக் கண்டு துணைவியார் கலங்கிக் கதறும் காட்சி கல்நெஞ்சையும் கசியச் செய்திடும்.

**கூந்தலவிழ்க்கலையே**
**தங்கக் காப்பு கழட்டவில்லை**
**கொண்டு மணமுடித்த மலர்மாலை**
**செண்பகம் வாடலையே!**

ஒப்பாரியும் புலம்பலும் இஸ்லாமிய மரபிற்கு ஒவ்வாதன. எனினும் தமிழிலக்கிய நாட்டுப்புற மரபினைத் தழுவி இத்தகைய அவலக் காட்சிகளை காசீம் படைப் போர் ஆசிரியர் அமைத்துள்ளார்.

மீமானிடவியல் காட்சிகள் நாட்டார் காவியங் களிலும் ஓவியங்களாகி வியப்பையும் விறுவிறுப்பையும் ஊட்டி நிற்பனவாகும். மந்திர தந்திர காட்சிகளுக்கு ஒப்பான இப்பாவியக் காட்சிகள் நாட்டார் வாழ்விலும் நம்பிக்கையிலும் தொடர்பு கொண்டவையாகும். காசீம் படைப் போரில் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட சில தெய்வீக நிகழ்ச்சிகள் சுட்டப்படுகின்றன.

போருக்குப் புறப்படுமுன் காசீமை வானவர் வாழ்த்துதல், வெற்றி நிலைகண்டு வானோர் பூமாரி பொழிதல், காசீமின் முதல் வெற்றிச் செய்தியை மனைவியிடத்தில் வானவர் அறிவித்தல், களத்தில் வீழ்ந்த காசீமின் தலையைக் கொய்தெடுக்க எதிரிகள் முயல, குதிரை ஆவேசத்தில் தடுத்தல், காசீமின் இறப்பு கேட்டுச் சொர்க்க மாதர்களும், வானவர்களும் துயரமுறல்

போன்றவை தெய்வீக ஆற்றலைக் காட்டும் நிகழ்ச்சிகளாகச் சித்திரிக்கப் பெறுவது காணலாம். இப்பகுதிகள் தனிப் பெரும் வீரனின் தகைமையை உயர்த்தும் நாட்டார் பாடல் நிலைக்கு உதவுமாறு அமைகின்றன.

குலமரபு கிளத்தல் காப்பியங்களிலும் பரணிகளிலும் காணப்பெறும் ஓர் இயல்பாகும். நாட்டுப்புறவியல் வடிவங்களிலும் இது இடம் பெறுவதுண்டு. இந்நிலை காசீம் படைப் போரில் மிகுந்த தாக்கம் செலுத்தியுள்ளது. பெரும்பாலும் கதைமாந்தர்களின் குலஉறவுமுறை பாடல் வரிகளில் சுட்டப்படும் நிலை காணப்படுகிறது.

**ஆதியருள் தூதர் மருகர்**
**அலிப்புலி பேரர்...**
**அலியார் கருணை மகனாரே...**
**எந்தன் தகப்பனுடன் பிறந்த**
**எழிலுறு தந்தையரே...**
**ஹுசைனாரீன்ற குலக் குடியே...**
**ஹஸனாரீன்ற தவப் பொருளே...**
**மாவியா தன் மகனாய் பிறந்த வஞ்சனெசீது...**
**ஹாஷீம் கிளையி லிவ ருதித்த**
**ஆண்பிள்ளை சிங்கமென்றார்...**

பரம்பரை வம்சத்தைப் பற்றிய இத்தகவல் குறிப்புகள் குலப்பெருமை கிளத்தலுக்கு மட்டுமின்றிக் கதைமாந்தர் விளக்க அடைகளாகவும் அமைகின்றன. முந்தைய பரம்பரையைச் சுட்டும் வழி அவர்கள் பண்புநிலை வெளிப்படுத்தப்படுகின்றது. தவிர, அராபியர் மரபுவழி தந்தை பெயர் சுட்டி மகனைக் குறிப்பிடும் நிலையும் இங்குத் தெளிவாகின்றது.

நாட்டுப்புறப் பாடல்கள் வழி பண்பாட்டுக் குறிப்பு களும் பழக்க வழக்கங்களும் வெளிப்படுவது இயல்பு. இஸ்லாமிய சமய மரபின்பாற்பட்ட செய்திகளுடன்

பண்பாட்டுக் கலப்பினக் கருத்துக்களும் காசீம் படைப் போரில் காணப்படுகின்றன. இறைவனைப் புகழ்தல், நபிகள் நாதரை வாழ்த்துதல், இறைவனிடத்து இறைஞ் சுதல், இறைநாட்டப்படி எல்லாச் செயல்களும் நடக்கும் என நம்பிக்கை கொள்ளுதல், பாதகர்க்ள் மறுமை நாளில் துன்பமுறுவர் என நம்புதல் முதலியவை முஸ்லிம் சமய மரபினைத் துலக்கி அமைவன.

காலில் விழுந்து பணிதல், கட்டிய தாலியை அவிழ்த்தல், ஆலத்தி எடுத்தல், தரையில் விழுந்து அழுது புலம்பி ஒப்பாரி வைத்தல் முதலியவை இஸ்லாமிய மரபிற்கு ஒவ்வாத பண்பாட்டுக் குறிப்புக்களாகும். எனினும் இவை இணைந்து வாழும் இந்து - முஸ்லிம் சமுதாயப் பண்பாட்டுக் கலப்பால் விளைந்தவை எனலாம். சமய மரபினை மீறி இலக்கியங்கள் பொதுவான சமுதாயப் பண்பாட்டுச் சங்கமத்தைச் சுட்டிச் செல்லும் என்பதற்கு எடுத்துக்காட்டுகளாகவும் இவை அமைகின்றன.

அறபுத்தமிழ் மொழி முஸ்லிம்களின் சமய வழக்கு மொழியாக அமையத் தொடங்கியதும் பல கிஸ்ஸா கதைப் பாடல்கள் எழுந்தன. இவை பாடுவதற்கேற்ற வகையில் இனிமையும் எளிமையும் கலந்தமைந்ததால் வீடுகள் தோறும் பயிலவும் படிக்கவும் செய்யப்பட்டன. இவ்வடிவங்கள் பிற்காலத்தில் பொருளமைப்பிற்கேற்பப் பற்பல பெயர்களைப் பெற்றன.

அநீதியை எதிர்த்தெழுந்த வீர தீர சாகசப் போர்க் கதைகள் ‘படைப்போர்’ எனும் பெயரில் வரிவடிவம் பெற்றன. இவற்றில் வரலாற்றடிப்படையிலும் கற்பனை மிகுந்தும் அமைந்த வடிவங்களுண்டு. காசீம் படைப் போர் இஸ்லாமிய வரலாற்றினடிப்படையில் எழுந்த நெஞ்சை நெகிழச் செய்யும் - ஒரு சிறந்த - வீரநாட்டுப்புற குறுங்கதைப் பாடலாகத் திகழ்கின்றது எனலாம்.





# உ. இரவிக்குட்டிப்பிள்ளைப்போர்

மலையாளத்தில் வடக்கன் பாட்டுகள், தெக்கன் பாட்டுகள் என்ற இருவகை வீரக்கதைப் பாடல்கள் உண்டு. வடக்கன் பாட்டுகள் கேரளத்தின் வடக்குப் பகுதியில் வாழ்ந்த சில குறுநிலத் தலைவர்களின் வீரவாழ்வை சித்திரிப்பனவாகும். தச்சோளி ஒதேனன், ஆரோமல் சேவகர், கண்ணப்பன், குடமலக் கொங்கி, ஆரோமலுண்ணி பற்றிய நாட்டார் பாடல்கள் இவ்வகையைச் சார்ந்தவை.

கேரளத்தின் தெற்குப் பகுதியில் திருவிதாங்கூர் பிரதேசத்தில் நடந்த போர்களைப் பற்றிய நாட்டுப்புறக் கதைப் பாடல்களே தெக்கன் பாட்டுகள். இவை தாம். இரவிக்குட்டிப்பிள்ளை போர், வெங்களராசன் கதை, திவான் வெற்றி, பெருங்குளம் போர், தம்பிமார் கதை, புருஷ தேவியம்மா பாட்டு, ஒட்டன் கதை, உலகுடை பெருமாள் பாட்டு, கேரள வர்மா கதை, எட்டுக்கூட்டத் தம்புரான் கதை ஆகியனவாகும்.

நாஞ்சில் நாட்டினை உள்ளடக்கிய வேணாட்டு வேந்தர்களோடு தொடர்புடையதாதலின் இவ்வகைப் பாட்டுகள் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கப் படுகின்றன. இப்போர்ப் பாட்டுகளில் இரவிக்குட்டிப் பிள்ளை போர் குறிப்பிடத்தக்கதோர் நாட்டுப்புறக் கதைப் பாடலாகத் திகழ்கின்றது.

இரவிக்குட்டிப்பிள்ளை போர் என்பது எளிமையும் இனிமையும் கொண்ட ஐந்நூற்றி ஐந்துப் பாடல்களைக் கொண்டது. வில்லுப்பாட்டு வடிவத்தில் அமைந்தது. சிந்து, கும்மி, விருத்த ஓசை நயம் கலந்தமைவது. மலையாளம், தமிழ் வடிவங்கள் இரண்டும் பெரும்பாலும் ஒரே மாதிரியாகவே அமைந்துள்ளன.

தமிழில் மலையாளச் சொற்களும் மலையாளத்தில் தமிழ்ச் சொற்களும் விரவியுள்ளன. மலையாளத்தில் இதற்குக் 'கணியாங்குளம் போர்' என்ற பெயரும் உண்டு. வாய்மொழிப்பாட்டாய் வளர்ச்சி பெற்றதாதலின் எழுத்துக்களும் தொடர்களும் சிதைந்தும் மருவியும் அமைந்துள்ளன. எனினும் கதைப்பொருளை அவல வீரஉணர்வுகள் கொப்பளிக்கச் சித்திரிக்கும் போர்ப் பாவியமாகப் பறைசாற்றி நிற்கின்றது.

இரவிக்குட்டிப்பிள்ளைப்போர், மதுரை நாயக்க மன்னருக்கும் திருவிதாங்கூர் அரசருக்கும் இடையே நடைபெற்ற கணியாங்குளம் போரை - பாடுபொருளாகக் கொண்டதாகும். பல் பெரும்வளம் பொருந்திய நாஞ்சில் நாட்டைச் சோழ பாண்டிய விஜயநகர நாயக்க மன்னர்கள் படையெடுத்து முற்றுகையிட்ட பல சம்பவங்கள் உண்டு. மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்த பிரசித்தி பெற்ற நாயக்க மன்னரான திருமலை நாயக்கரும் திருவிதாங்கூர் மீது படையெடுத்துள்ளார். இப்படை யெடுப்பு நாஞ்சில் நாட்டு வழியே நடைபெற்றுள்ளதை வரலாறுகள் எடுத்துரைக்கின்றன.

கி.பி. 1635-இல் நடைபெற்ற திருமலை நாயக்கரின் திருவிதாங்கூர் படையெடுப்பிற்கு தலைமைத் தளபதியாக அமைந்தவர் நாயக்க அமைச்சரான இராமப்ப அய்யன். வேணாட்டு வேந்தரின் சார்பில் தளபதியாகச் செயல் பட்டவர் இரவிக்குட்டிப்பிள்ளை.

மலையாளம் உள்ளதெல்லாம்
வாகாய் மிக வறுத்து
தலையறுத்து தன் பொதியில் தான்
பிடித்தவன் காண்!

என்பது இப்போரைப் பற்றிய இராமப்ப அய்யன் அம்மானைக் குறிப்பாகும். "உடையவன் மனதுவரவே துயரமான மலையாளமுங் கொள்ளை கொண்டனன்" என்று திருச்செங்கோட்டுத் திருப்பணி மாலையும்

எடுத்துரைக்கின்றது. இவை தவிர, முதலியார் ஓலைச் சுவடி, திருவிதாங்கூர் ஸ்ட்டேட் மானுவல் முதலியனவும் இப்போரைக் குறிப்பிடுகின்றன.

இரவிக்குட்டிப்பிள்ளைப் போர் என்பது தென் திருவிதாங்கூரின் குறிப்பிட்ட ஒரு காலக்கட்டத்தின் வரலாற்றை எடுத்துரைக்கின்றது. சேர நாட்டின் தெற்குப் பகுதியாக அமைந்தது திருவிதாங்கூர். இதனை வேணாடு என வரலாறுகள் குறிப்பிடுகின்றன. கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் (1611 - 1663) நாஞ்சில் நாட்டைச் சார்ந்த கற்குளத்தைத் தலைநகராகக் கொண்டு ரவி வர்மா எனும் மன்னர் வேணாட்டை ஆண்டு வந்தார்.

இதே காலகட்டத்தில் (1623 - 1669) மதுரையை ஆண்டு வந்தவர் திருமலை நாயக்கர். தொடக்கத்தில் குறுநில மன்னராக இருந்த திருமலை நாயக்கர், தமது தனிப்பெரும் ஆற்றலாலும் தளவாய் இராமப்ப அய்யனின் படைத் திறத்தாலும் பெரும் வெற்றிகளைப் பெற்று முடியரசராக விளங்கினார்.

1633-இல் நடைபெற்ற மைசூர்ப் போரில் அவர் பெரும் வெற்றி பெற்றதும் அவரது அடுத்த நோக்கம் திருவிதாங்கூர் மீது படையெடுத்துப் பணிய வைப்பதாக இருந்தது. வேணாட்டு வேந்தரை வெற்றி கொண்டு திறைப்பொருள் கொணருமாறு வேலய்யன் தளபதிக்குக் கட்டளையிட்டார் நாயக்கர். படை நடத்தி நாஞ்சில் நாட்டை நோக்கி வந்து கொண்டிருந்த வேலய்யன் தளபதியை வேணாட்டு அமைச்சர்கள் சூழ்ச்சியால் கொலை செய்துவிடுகின்றனர்.

செய்யுந் திறல் வீரன் படை வேலய்யனும்
திட்டெனவே வெட்டுப்பட்டு போனான்
பய்ய படை வாங்கிப் பணகுடியில்
பாளையங்கள் நன்றாய் சேகரித்தார்!

என இச்செய்தியைக் கதைப்பாடல் எடுத்துரைக்கின்றது.

செய்தியறிந்த திருமலை நாயக்கர் பழிவாங்கும் எண்ணத்தில் தமது படைத் தளபதி இராமப்ப அய்யன் தலைமையில் ஒரு பெரும்படையை அனுப்பி வைத்தார். பணகுடியில் பாளையமிட்டிருந்த முந்தைய படையும் இத்துடன் சேர்ந்துகொண்டு நாஞ்சில் நாட்டின் செல்வக் களஞ்சியமான நாகர்கோவிலிலுள்ள நிலபுல விளைச்சல் களைக் கொள்ளையிடவும் பாழாக்கவும் செய்தன.

தலைநகர் பத்மநாபபுரத்திலிருந்த மன்னர் ரவிவர்மா மந்திரிகளையும் சேனாதிபதியையும் அழைத்து உடனே படை திரட்டி எதிர்க்குமாறு உத்தரவிட்டார்.

இரவிக்குட்டிப்பிள்ளை மீது முன்னரே பகையும் வெறுப்பும் கொண்டிருந்த மந்திரிகள் எழுவரும் நெற்றிப்படைத் தலைமைக்குரிய ஆற்றல் எங்களுக்கில்லை என்றும் இரு பக்கமும் துணைக்குத் தயார் என்றும் பதிலிறுத்தனர். முதன்மந்திரி இரவிக்குட்டி உடனே துணிந்து படைத் தலைமையேற்க முன்வந்தார்.

**நாணயத்தா லிடங்கை வலங்கைக்கு**
**நாமள் செல்லுவோம் நெற்றிக் கைக்கு ஆளில்லை**
**என்று மந்திரிமார்கள் உரைத்திட**
**இரவிப் பிள்ளையுந் தானேது சொல்வார்**
**சொன்ன நெற்றிக்கை தன்னிலே நான்போறேன்**
**துங்க வஞ்சிக் கரசேயெனச் சொன்னார்!**

என அரசர் - மந்திரிகள் - முதன்மந்திரி உரையாடலைக் கதைப்பாடல் காட்சியாக்குகின்றது.

இரவிக்குட்டிப்பிள்ளையை எவ்வாறேனும் வீழ்ச்சி பெறச் செய்ய வேண்டும் என எண்ணியிருந்த அமைச்சர் களுக்கு இராமப்ப அய்யனின் படையெடுப்பு வாய்ப்பாக அமைந்தது. தலைமையேற்றுப் படை நடத்திச் செல்லும் இரவிக்குட்டிப்பிள்ளை இராமப்ப அய்யனோடு போர் செய்யும் வேளையில் பக்கபடையுடன் அமைச்சர்கள் திடீரென்று விலகி இராமப்ப அய்யன் இரவியைக்

கொல்ல வாய்ப்பளிப்பதென்று முடிவெடுத்து அந்த திட்டத்தை இரகசியமாக நாயக்கர் தளபதிக்குத் தெரியப் படுத்தவும் செய்தனர். வஞ்சக நெஞ்சகங்களின் இந்தச் சூழ்ச்சித் திட்டத்தை,

**வல்லவன் இரவிக்குட்டிப் பிள்ளையை**
**மாற்றான் போரில் இறக்கி கொடுப்போமே**
**நில்லாமல் பின்னணி விட்டு வாங்கியே**
**நிற்கும்போது குதிரைப்படை வந்து**
**சல்லியமாக வளைத்து கொண்டே பிள்ளை**
**தலையையும் கொண்டு போனால் படையில்லை**

எனக் கதைப்பாடல் காட்டுகின்றது.

மதுரை நாயக்கர் படையை எதிர்த்து நாயர் படைத் தலைமையேற்றுச் செல்லத் துணிந்த இரவிக்குட்டிப் பிள்ளையை, தாயார் தடுத்து நிறுத்த முயலுகின்றாள். தான் கண்ட தீக்கனாக்களையும் எடுத்துரைக்கிறாள்.

**திரளானை கூட்டமிட்டு**
**சிங்கம் பற்றிக் கொல்லக் கண்டேன்**
**ஒரு புலியை ஆட்டுத்திரள்**
**ஒதுங்கிப்பற்றிக் கொல்லக் கண்டேன்!**

கடமையில் தவறாத தகைமை நெஞ்சத்தைத் தாயாரால் தடுத்து நிறுத்த முடியவில்லை. தனது வார்த்தைகள் பயனற்றுப் போக விளைவுகளையும் காரணங்களையும் எடுத்துக்கூறி, தேவியைத் தூண்டி விடுகிறாள்.

தான் கண்ட தீக்கனாக்களைக் கூறி மனைவியும் கணவனை போருக்குச் செல்ல வேண்டாமென்று முறையிடுகிறாள்.

**என்னுடைய மாங்கலியம்**
**இழை பெருகி விழவுங் கண்டேன்**
**தன்னிட்டமாய் நீர் களத்தில்**
**தடுமாறி நிற்கக் கண்டேன்**

உடை வாளும் புரிசையுமாய்
உக்கடத்தில் சாகக் கண்டேன்
மந்திரிமார் வளையக் கண்டேன்
மறவர் வெட்டிக் கொல்லக் கண்டேன்!

மனைவியின் முறையீட்டையும் மறுத்துக் கூறும் இரவிக்குட்டிப்பிள்ளை "இன்று படை போகாவிட்டால் இரவிக்குலத்திற்கிழுக்கல்லவோ" எனத் தன்மானமிகு தானை மறவனாகப் பதிலிறுக்கவுஞ் செய்கிறார்.

தாயும் தேவியும் தெய்வங்களை வேண்டி நிற்க, இரவி தளபதிக்குரிய அணிகளையும் ஆயுதங்களையும் தரித்தார். தன்னிலை பதறாது தேவியின் கரம் பற்றினார். தாயின் திருவடிகளில் அடிபணிந்தார். அரசரும் அவைப் பெருமக்களும் வாழ்த்தி வீர விடை நல்கினர். ஊர்ப் பெண்கள் கும்மியடிக்கத் தொடங்கினர்.

மன்னர்க்கு மன்னர் அருளாகி எங்கள்
மந்திரி வாற சிங்காரத்தைப் பார்
சின்னப் புரவி நடத்தி வருகிற
செய்தியைக் கேளடி தோழிப் பெண்ணே!
காரிய வீரன் ஒய்யாரனடி இவர்
கையில் உடைவாள் பிடித்தழகும்
வீரியவான் இரவி வாறதைக் கண்டு
வித்தாரக் கும்மி யடிப்போமடி!

குமரிகள் கும்மியடிக்க, படைமுரசு, பறைகள் ஒலி முழக்க நாயர் படையின் போர்ப்பயணம் தொடங்கிற்று. நெற்றிப்படையின் முன் நெஞ்சு நிமிர்த்திச் செல்லும் இரவி வடுகர் படையை வேரறுக்கக் கணியாங்குளத்தை வந்தடைந்தார்.

நாயர் படையும் நாயக்கர் படையும் கி.பி. 1645 ஜூலை 18-இல் கணியாங்குளத்தில் எதிர்த்தன. விண்ணதிர வீரப்போர் நடந்தது. இரும்பென இதயங்கொண்ட

இரவி எதிரிகளை வெட்டி வீழ்த்தினார். நாயக்கரோடு பக்கப்படையாக நின்ற அமைச்சர்களும் வியப்புற்றனர்.

திடீரென்று இடங்கை வலங்கை துணைப்படைத் தளபதியாயிருந்த அமைச்சர்கள் மலைச்சரிவில் ஓடி மறைந்தனர். துணைப்படை சிதறிய போதும் பதறாது, தன் திறம் வெளிப்பட விரைந்து விறல் போர் செய்தார் இரவி. பகைப்படை திடீரென இரவியை வளைத்துக் கொள்கிறது. உடனிருந்த துணைவீரன், மலையேறித் தப்பிச் செல்ல இரவியிடம் கெஞ்சுகிறான்.

**மந்திரியாய் பிறந்தாலும் நாமெல்லாம்**
**மாற்றானைக் கண்டோடுவது ஆண்மையோ?**

புறங்காட்டாத திறமிகு மானங்கொண்ட இரவிக் குட்டிப்பிள்ளையின் பதில் இது. இறுதிவரைப் போர் செய்து மானமுடன் களத்தில் வீழ்வது என்பது அவர்தம் எண்ணமோ என்னவோ!

எல்லோரும் அவரை விட்டுச் சென்றும், இறந்து பட்டும் அவர் மட்டும் துணிந்து தனித்து மறப்போராற்றித் திறங்காட்டி நின்றார்.

இரவியின் புரவி எதிர்ப்படைகளால் வெட்டி வீழ்த்தப்பட்டது. தனித்து நின்று வாள்போர் வீரங் காட்டிய இரவியின் கழுத்தில் எதிரியின் வெட்டு விழுகிறது. சூழ்ச்சியும் பகைமையும் வென்றன.

இறுதி மூச்சுவரை கடமையுணர்வுடன் பணியாற்றிய இரவிக் குட்டிப்பிள்ளை இறந்துபடும் காட்சியைக் கதைப்பாடல் காட்டுகின்றது.

**வெட்டினார் இரவிக்குட்டிப் பிள்ளையை குதிரைக்காரர்**
**மெய்தனில் விழுகிற வாள்; அய்யய்யோ! எனை விலகா**
**கஷ்ட காலமோ எனக்கு எந்தனுடை வாளினாலே**
**காளி பத்திர காளியம்மை**
**கைவிட்டென்னை தள்ளினாளோ?**

இரவிக்குட்டிப்பிள்ளையின் வளர்ப்பு மகன் காளிநாயர் இராமப்ப அய்யனிடம் சென்று தனித்து நின்று தன்மான மொழி பேசித் தலையைக் கேட்கிறான். நாயக்கத் தளவாயும் இரவியின் தியாகத்தையும் காளிநாயரின் தன்மான வீரத்தையும் மதித்து மெச்சி, தலையையும் உடலையும் ஒப்படைக்கிறான். திருவிதாங்கூர் அரசரும் மக்களும் அந்த தன்மானத் தானை மறவனுக்கு அஞ்சலி செலுத்த இறுதிக்கடன் நடைபெறுகிறது. ஒரு வீரப் பெருமகனின் வரலாறு இவ்வாறு நாட்டார் நாவில் நின்று நினைவிலமர்ந்து நித்ய முடிவு பெறுகிறது.

இரவிக்குட்டிப்பிள்ளைப் போரில் நாட்டாரிலக்கிய இயல்புகள் பலவும் நடம் புரிகின்றன. பாமரர்களால் பாடுவதற்கேற்ற பாங்கில் ஓசைநயம் அமைந்துள்ளது. கதையோட்டத்தில் தடை ஏற்படாது செல்லுமளவுக்கு நடை அமைந்துள்ளது.

**கிஞ்சுகத்தின் சிலம்பு கொஞ்ச**
**கொஞ்சு சிலம்பொலி நடையாள்**

இதுபோன்ற எதுகை மோனை சிறக்கும் தொடர்கள் பல ஒலி நயத்தை மிகுவிக்கின்றன. எண்ணியெண்ணி, பக்கநாளும் பகைநாளும், முன்னணி பின்னணி, இடங்கை வலங்கை போன்ற அடுக்குத் தொடர்களும் ஆங்காங்கே அமைந்துள்ளன.

காரிய வீரன் ஒய்யாரன், கிஞ்சுகமே குயில் சஞ்சுகமே, திட்டெனவே வெட்டுப்பட்டு போன்ற சந்தத் தொடர்கள் இனிமையும் செவ்வியும் தொடரத் துணை புரிகின்றன.

**... அணியக் கண்டேன்**
**... முடியக் கண்டேன்**
**... எழும்பக் கண்டேன்**
**... விழவுங் கண்டேன்**
**... நிற்கக் கண்டேன்**

... சாடக் கண்டேன்
... கொல்லக் கண்டேன்

இப்பகுதிகள் மீண்டும் மீண்டும் வருகின்ற இறுதி இயைபுக்குச் சான்றாக அமைகின்றன. சில இடங்களில் ஒரு வரியே திரும்பத் திரும்ப வருவதையும் காண முடிகிறது. படிப்போர்க்கும் கேட்போர்க்கும் ஒருசேர கேள்வியின்பம் நல்கும் ஒலிநயம் மிகுந்த நடை நயம் இரவிக்குட்டிப் பிள்ளைப் போரை அணைத்துக் கொண்டுள்ளது எனலாம்.

மக்கள் இலக்கியங்களில் அவர் தம் பேச்சு வழக்கியல் தாக்கங்கொள்வது இயல்பு. பாமர நேயர்களின் ரசனைக்கு இது விருந்தாக அமைவதோடு யதார்த்த சித்திரிப்பிற்கும் வழிவகுக்கின்றது. இரவிக்குட்டிப்பிள்ளைப் போரில் தமிழ், மலையாள வழக்குச் சொற்கள் இயல்பாக வந்து நிறைந் துள்ளன. பய்ய, சல்லியம், சமுசாரம், தம்மானம், விசேழம், முறண்டு, நாமள், பாரப்பட்ட, மலங்கி, தலகாணி, எங்கில், கடுப்பதம், முந்தி, ஏனம், செறுக்கன், உக்கடம், விசர்ப்பு போன்ற மருவிய சிதைந்த வழக்குச் சொற்கள் இரவிக்குட்டிப்பிள்ளைப் போரை நாட்டார் மொழியிலெழுந்த ஒரு கதைப் பாவியமாகக் காட்டி நிற்கின்றன.

பாமரர் இலக்கியங்களில் நாட்டார் நம்பிக்கைகள் தடயம் பதித்துச் செல்வது பொதுப் பண்பாகும். சமுதாய வாழ்வின் கண்ணாடியாக அமையும் வரலாற்று கதைப் பாடல்களிலும் இவை அமையும். இரவியின் தாயும் தேவியும் கெட்ட உற்பாதங்களிலும் தீக்கனாக்களிலும் நம்பிக்கையுடையவர்கள். ஆதலின் வரும் நிலைக்கு அஞ்சி இரவியிடம் கெஞ்சி, போருக்குச் செல்ல வேண்டாமெனத் தடுக்கின்றனர்.

முறையீட்டை மறுத்து முறைமைகாக்கத் துணிந்து நிற்கும் தானை மறவரான தன் மகனுக்காக, தாய் நீராடி வந்து குலதெய்வத்தை வேண்டுகிறாள். அப்போது வலது தோளில் பல்லி விழுகிறது.

பாரப்பட்ட மரத்தில் இருந்தல்லோ
பல்லி வந்து வலத் தோளில் விழ
கஷ்ட்ட காலம் இங்ஙன யல்லவோ?
கண்டதெல்லாம் பிழையென்று!

சோகமுற்றுத் தயார் மீண்டும் நீராடி உண்ணுதற்காக இருக்கிறாள். இரவிக்குப் பரிமாறிய உணவில் நரை தலைமயிர் காண, தயக்கமும் கலக்கமும் கொண்டு மகனிடம் மீண்டும் மீண்டும் கெட்ட சகுனங்களை எடுத்துக் கூறி, "காரியமொன்றும் நலமில்லை காண்; படைக்கின்று போகாதே" என்கிறாள். மறுத்துச் செல்லும் மகனுக்காக அழுது அரற்றித் தெய்வங்களிடம் காப்பும் வேண்டுகிறாள்.

இரவி கெட்ட சகுனங்களைவிட, தீக்கனாக்களைவிட கடமைக்கும் பொறுப்புணர்ச்சிக்கும் முக்கியத்துவம் அளிக்கிறார். இறை விதியையும் பெரிதும் நம்புகிறார்.

எழுகடலுக் கப்புறத்தே
இரும் பறைக்குள் ளிருந்தாலும்
எமதூதருடன் ஆள் வந்தால்
இலையென்றால் போவாரோ?

போர் புறப்பாட்டை எடுத்துரைக்கும் தாய்தேவி யரிடம் இரவியின் மறுப்புரை வினா இது. "விதித்த விதிக்கினி மதிகளுண்டோ" என்ற கருத்தும் நூல்வழி உணர்த்தப்படுகிறது.

கனவுகள் கதைப் பாடலில் வருபொருளை உணர்த்தும் வகையில் வருவனவாகும். இயற்கை இகந்த சக்தியாக அமையும் கனவுகள் பாமரர் பாட்டுக்களில் பெரும்பாலும் வந்தமையும் கூறாகும். கருவூலப் பொருட்களை எதிரிகள் கொள்ளையடிப்பதாகவும், பொன்னிற மெத்தையில் தீ பிடிப்பதாகவும், மாளிகை முன்வாயில் முத்து உதிர்ந்ததாகவும், எதிர்படை வீரர் களால் கணவன் உடல் குருதிக்கறை படிவதாகவும் கனவு

காண்கிறாள் இரவியின் தேவி. கனவில் நம்பிக்கை கொண்ட அவள், கணவனைத் தடுத்தும் கடமை வீரனின் காதுகளில் அவை பயனற்றுப் போயின.

வீரப்பாடல்களில் அவல உணர்ச்சி ஓங்கியமைவது இயல்பு. போர்க்கள வேள்வியில் ஏற்படும் விளைவுகளாக இழப்பின் துயரமிகுதி அமையும். அடுகளத்தின் படுகொலைப் பயங்கரம் ஒப்பாரியையும் புலம்பலையும் தோற்றுவிக்கிறது. கணியாங்குளம் போரில் தலை கொய்யப்பட்ட தளபதி இரவிக்குட்டிப்பிள்ளையின் உடல் கண்டு தாயாரும் மனைவியும் அழுது புலம்பும் காட்சிகள் நெஞ்சை நெக்குருகச் செய்வன.

**ஆறுவனோ நானுமினி**
**அருங்கனலில் மாளுவனோ?**
**தேறுவனோ நானுமினி**
**தீக்கனலில் விழுமளவும்?**

பெற்ற வயிறு பேதலித்துப் பாடும் ஒப்பாரி வரிகள் சோகத்தின் சிகரத்தில் சிந்தையைச் செலுத்துகின்றன.

வருபொருள் முன்னுரைத்தும் முறையீட்டினை மறுத்துச் சென்று இறந்து பட்ட மகனின் திருவுடல் முன் தேம்பி நிற்கும் தாயைக் கதைப் பாடல் சோக ஓவியமாகவே சித்திரிக்கின்றது.

**நித்திரையில் தேடுவனோ?**
**நீரிறந்த போதே நான்**
**வாசமில்லாப் பூவானேன்**
**மண்ணிழந்த மரமானேன்!**

கணவனை இழந்த காரிகையின் இதய ஓலத்தின் எதிரொலிகள் இவை. ‘கணவனை இழந்தவர்க்குக் காட்டுவது இல்’ ஆதலின் சந்தனப் பொட்டிழந்து அஞ்சனக் குறியிழந்து வேரறுந்த மரமாக வீழ்ந்து மனைவி அல்லலுற்று அரற்றும் நிலை, கண்ணகியை நமக்குக் காட்டுகின்றது.

திருமலைநாயக்கரின் திருவிதாங்கூர் போரின் வரலாற்றடிப்படையில் எழுந்த கதைப்பாடல், தோற்ற கேரள ரவிவர்மாவின் படைத்தளபதி இரவியின் பெயரில் அமைந்துள்ளது குறிக்கத்தக்கது. இப்போரில் வேணாட்டு முதலமைச்சரின் ·தன்னிகரற்ற போர் ஆற்றல், கடமை நெஞ்சம், மானவுணர்வு முதலிய தலைமை இயல்புகள் தகைமை பெற்றுத் திகழ்ந்தன. போரில் இக்கட்டான நிலை ஏற்பட்டபோதும் புறமுதுகு காட்டாது தனித்து நின்று இறுதிவரை போர் செய்தவர் இரவிக்குட்டிப்பிள்ளை.

நேரடியாகப் போரிட்டு அவரை வீழ்த்த முடியா தாகையால் உடன் பணியாற்றிய அமைச்சர்கள் எழுவர் எதிரியுடன் இணைந்து வஞ்சகச் சூழ்ச்சியால் அவரை வீழ்த்துகின்றனர்.

கதைப் பாட்டில் நாயக்கத் தளவாய் இராமப்ப அய்யன் தலைமைத் தகுதியில், குறிக்கப் பெற்றாலும் போர் வினையாற்றலில் பங்குபெறவில்லை.

நாஞ்சில் நாட்டு வீரரின் தனிப்பெரும் வீரம் பற்றி நாஞ்சிலார் நாவில் எழுந்த வாய்மொழி வில்லுப்பாட்டுக் காவியம் இது.

இதனால் நிகழ்வுகளில் தன் முனைப்பாற்றல் மிக்குத் திகழும் இரவிக்குட்டிப்பிள்ளையின் பெயரையே கதைப்பாட்டு பெற்றுள்ளது சாலப் பொருந்தும்.





# 3. கான்சாகிபு சண்டை

கான் சாகிபு சண்டை 18-ஆம் நூற்றாண்டைய வரலாற்றடிப்படையில் எழுந்த ஒரு நாட்டுப்புற வீரக் கதைப் பாடலாகும்.

ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் தமிழகத்தில் வாழ்ந்த கட்டபொம்மன், மருது சகோதரர்கள் போன்று ஆங்கிலேயர்களுக்கு எதிராகப் போராடிய தளபதி யூசுப்கானின் அரசியல் சமூக வாழ்வை இப்பாடல் சித்திரிக்கின்றது.

வாய்மொழி இலக்கிய நெறிக்குட்பட்டு நெகிழ்ச்சி யான யாப்பு வரிகளைக் கொண்ட கான்சாகிபு சண்டை, வில்லுப்பாட்டாகப் பாடுவதற்கேற்ற வடிவ அமைப்பினைப் பெற்றதாகும்.

காப்பு விருத்தத்துடன் தொடங்கி, 'தாம் தன தந்த தான' எனும் ஓசையமைப்பில் செல்லும் நெடிய கதைப்பாட்டாகும். பாடல் வடிவம் வழங்கியவர் பெயர் அறியா இந்நூல், நாட்டுப்புற மரபுவழி வையகம் தழைக்க, கடவுளர்கள் வரம் வேண்டி வாழ்த்தி முடிகின்றது. பாமரர் நாவில் பெருமிதப் பாட்டாகப் பன்முறைப் பயிலப் பட்டதால் கான்சாகிபு சண்டை வழக்கியல் நடையில் எளிமையிலும் இனிமையிலும் இசைமையிலும் ஏற்றமிக்க தோர் நாட்டார் வீரக் கதைப்பாடலாகத் திகழ்கின்றது.

தமிழகத்தின் தெற்குப் பகுதிகளை உள்ளடக்கிய மதுரை மண்டலத்தின் தன்னிகரற்ற தளபதியாகத் திகழ்ந்த கமாண்டர் கான்சாகிபின் ஏழரை வருட ஆட்சிக் காலத்தைக் (1757 - 1764) கதைப் பொருளாகக் கொண்டது கான்சாகிபு சண்டை.

ஆற்காடு நவாபு பதவிக்கு முகம்மதலி, சந்தா சாகிபு எனும் இருவர்களிடையே பலத்த போட்டி உருவாகிறது. ஆங்கிலேயர் உதவியுடன் முகம்மதலி திருச்சிக் கோட்டையில் திடீரென்று நவாபாகப் பதவியேற்கிறார். செய்தியறிந்த சந்தா சாகிபு ஆத்திரங் கொண்டு பிரஞ்சுப் படைகளின் துணையுடன் பேராம்பூர் பறங்கிமலைப் பகுதியில் படையெடுக்கின்றார். ஆங்கிலத் தளபதி பிரிட்டனும் நவாபும் கலந்தாலோசித்து சுபேதார் கான் சாகிபினை படையெதிர்க்கப் பணிக்கின்றனர்.

இப்போரில் பெரும் வெற்றி பெற்ற கான்சாகிபுக்கு வாக்குறுதிக்கேற்ப மதுரைப் பகுதியின் ஆட்சிப் பொறுப்பினைக் கொண்ட கமாண்டர் பதவி வழங்கப் படுகின்றது. இதுவே கதையின் முகவுரையாக அமையும் முற்பகுதி.

கமாண்டர் கான்சாகிபின் ஆட்சியில் தமிழகத்தின் தென்பகுதி அரசியலில் அமைதி ஏற்படுகிறது. கொள்ளை, கொலை, கலகக்காரர்களின் கொட்டம் அடக்கப் படுகின்றது. எல்லாப் பாளையங்களும் கான்சாகிபால் நவாபின் ஆட்சிக்குக் கொண்டு வரப்படுகின்றன.

சிவகங்கை பாளையக்காரன் மட்டும் மீண்டும் மீண்டும் வலியுறுத்தியும் வரி செலுத்தாமல் இருப்பது கண்ட கான்சாகிபு கோபம் கொண்டு, வரி பார்க்கிக்காக 'திருப்புவனம்' எனும் ஊரை முற்றுகையிட்டு மதுரை யுடன் சேர்த்துக்கொள்ளப் போவதாக அறிவிக்கின்றார். கான்சாகிபிற்கும், மனைவி மாஷாவிற்கும் கடிதங்கள் எழுதியும் ஏராளமான பரிசுப் பொருட்களை அனுப்பி வைத்தும் படையெடுப்பைத் தடுக்க, சிவகங்கைத் தளவாய் தாண்டவராயன் முயற்சி செய்கிறான்.

தனது சூழ்ச்சிகள் பயனற்றுப் போகவே இராமநாதபுரம் தளவாய் தாமோதரம் பிள்ளையுடன் திருச்சிக்குச் சென்று நவாபினிடத்தில் பல்வேறு விதமான

குற்றச்சாட்டுகளைக் கான் மீது சுமத்திக் கூறுகின்றான். இறுதியில் ஆங்கிலேய, நவாபு, பாளையப் படைகள் இணைந்து கானை எதிர்த்துப் போரிடுகின்றன. போரில் தாக்குப்பிடிக்க முடியா தாண்டவராயன், மதுரைத் தளவாய் சீனிவாசராவுக்குப் பெரும் பதவி, பணப் பரிசுகள் ஆசை காட்டிக் கானை வஞ்சகமாகச் சிறை பிடிக்கச் செய்கின்றான்.

அஞ்சா நெஞ்சனான கான் இறுதி நேரத்திலும் ஆங்கிலேய அரசுக்கும் நவாபுக்கும் பணியாமல் போகவே, கி.பி. 1764-ல் தூக்கிலிடப்படுகின்றார். இதுவே கான்சாகிபு சண்டையின் கதைப்பொருள்.

நாட்டுப்புற மக்களின் நெஞ்சங் கவர்ந்த வீரதீரப் பாத்திரங்களே கதைப் பாடல்களில் தலைமை பெற முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைபவன் மாவீரன் கான்சாகிபு. கதைப்பாடலின் ஆசிரியர் நெஞ்சிலும் நாவிலும் கான்சாகிபின் வீர வாழ்வின் நினைவே நிலைபெற்றிருந்ததன் எதிரொலியை நூல் முழுவதும் காணமுடிகின்றது. காப்பு விருத்தத்தினைத் தொடர்ந்து வரும் பதினாறு வரி வாழ்த்துப் பகுதியில் நான்கிடங்களில் 'கானுகதை' என நூல்பெயரை வீறு அடைமொழிகளுடன் நினைவுகூர்கின்றார் ஆசிரியர்.

**மதயானை கானு துரை சாயபு**
**திறமிகு கான் சாயபு நீலன்**
**வீரன் கான்சாயபு நீலன்**
**துடி நகுலன் கான்சாயபு**
**அதி வீரன் கான்சாயபு**
**முனை வீரன் கான்சாயபு**

தன்மானமிகு தானை மறவனாகத் திகழும் தலைமைப் பாத்திரத்தை விளக்கி நிற்கும் அடைமொழிகள் இவை.

கான்சாகிபின் பிறப்பு, வளர்ப்பு, ஆட்சி, போர்கள், வீரமரணம் பற்றிய வாழ்வுச் செய்திகளை விளக்கும்

ஆசிரியர், நவாபு முகம்மதலி, ஜெனரல் பிரிட்டன், தளவாய் தாண்டவராயன், சிவகங்கை பாளையக்காரன் முத்துவடுகன், தளவாய் தாமோதரம் பிள்ளை, பூலுத் தேவன் போன்ற பாத்திரங்களுக்கு அளிக்காத தனிச் சிறப்பைக் கானுக்கு வழங்கியுள்ளதைக் கற்பார் உணர முடியும்.

கான்சாகிபு சண்டையில் பாத்திர அமைப்பில் கான்சாகிபு ஒரு சுயாட்சி பெற்ற மன்னனாகவே சித்திரிக்கப்படுகிறான். 'சீர்வளர் மதுரை தன்னிற் சிறக்கவே செங்கோலோச்சிய கார்வளர் பிரபுடீக கான்சாயபு கதையைப் பாட' காப்பு வேண்டுகிறார் ஆசிரியர்.

கதை நிகழ்விலும் கான் எல்லா பாளையக்காரர்களை அடக்கியும், வரி வசூலித்தும், கோயில்களுக்கும், மசூதி களுக்கும் நில நிதியுதவி வழங்கியும் ஆட்சி செய்கிறான். அவனது படை வீரர்கள் கொரில்லா முறைப் பயிற்சியும் பீரங்கிக் குண்டு போன்ற நவீன ஆயுதங்களையும் கொண்டிருந்தனர்.

**வருகையிலோ கும்தானென்று வந்தான்**
**மதுரைக்கு வந்தபின்பு ராசாவுமானான்!**

எனும் கருத்துத் தொடர்கள் நான்கிடங்களில் குறிப்பிடப் பெறுகின்றன. 'கானு ராசாதிபதி' என்ற குறிப்பும் இடம் பெறுகின்றது.

நவாபு, ஆங்கிலேய, பாளையப்படைகளைத் தனித் தெதிர்க்கும் வலுவைப் பெற்றவனாகக் கான்சாகிபு கதைப் பாடலில் விளக்கப் பெறுகிறான். முத்துவடுகன், தாண்டவ ராயனிடம் கூறும்போது, "மேலும் அவனுடனே பகை யாதே மேற்கொண்டவனுடன் எதிர்க்க முடியாது. எந்தச் சீமை கேட்டாலும் இல்லையென்று மாத்திரஞ் சொல் லாதே" என்கிறான்.

தாமோதரம் பிள்ளையிடம் கூறும் தாண்டவராயன், "அவன் கருமருந்துக் காரனடா தம்பி. கானனுடன் சண்டை ஜெயிக்க முடியாது" என்று எதிர்ப்பிலும் தனது

உள்ள இயல்பை வெளிக்காட்டி விடுகிறான். இன்னபிற காரணங்களால் கான்சாகிபினையே கதைத் தலைவனாகக் கொள்ளலாம்.

கான்சாயபு பிறவி முஸ்லிம் என்பதற்கான சான்றுகள் கதைப் பாடலில் காணப்படவில்லை. வரலாற்று நூற்களில் இஸ்லாம் தழுவிய இந்துவாகவே கூறப்படுகின்றான். பனையூரில் வேளாளர் குலத்தில் பிறந்த மருதநாயகம் பிள்ளை, முசலாலி எனும் பிரஞ்சுக்காரனால் வளர்க்கப் படுகின்றான். ஆங்கிலத் தளபதி பிரிட்டனிடம் பணி யமர்த்தப்படுகிறான். தொடர்ந்து நவாபு முகம்மதலியின் அங்கச் சேவகனாகிறான். இக்காலக்கட்டத்திலேயே முஸ்லிமாக மாறியிருக்க வேண்டும்.

நவாபு முகம்மதலியின் நம்பிக்கைக்குரிய முஸ்லிமான தால் படிப்படியாக, சிப்பாய், நாயக், ஆர்டர்லி, அவுல்தார், சமேதார், சுபேதார் எனப் பதவிகளில் உயர்த்தப்பெற்று இறுதியில் 'கும்மந்தான்' எனும் கமாண்டர் பதவி பெறுகிறான். கான்சாகிபின் இயற்பெயர் முகம்மது யூசுப் கான் என்பதாகும். இப்பெயர் நூலில் எங்கும் குறிப்பிடப் பெறவில்லை. கான்சாகிபு, கானன், நகுலன், நீலன் என்ற பெயர்களே காணக் கிடக்கின்றன.

முஸ்லிம் என்ற காரணத்தால் மட்டுமன்றிப் பிரஞ்சுக் காரனால், ஆங்கிலேயனால் வளர்க்கப்பட்டதாலும் 'சாகிபு' எனும் அடைமொழி அமைந்தது எனலாம்.

கான்சாகிபின் மனைவி மாசா போர்த்துக்கீசிய கிறித்தவப் பெண்ணாக வரலாற்றில் குறிப்பிடப் பெறு கின்றாள். ஆனால் கதைப் பாடலில் அவள் ஒரு இந்து தலித் பெண்ணாகவே அமைகின்றாள்.

"மல்லூரு ஆற்காடு தன்னில் பறைச்சி மாசாவை கண்ணாலே கண்டானே கானன்" என்பது நூல் சான்று. "சாதியிலே புலைச்சி நான்" - மாசாவின் வாய்மொழியாக அமைந்தது.

மதுரை மீனாட்சியை மாசா வணங்கவும் வழிபடவும் நினைக்கவும் செய்கின்ற செய்திகளும் நூலில் உள்ளன. கான்சாகிபின் முஸ்லிம் மனைவியாக மாசா வாழ்ந்ததாக நூலில் எந்தக் குறிப்பும் இடம்பெறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

கான்சாயபு சண்டை தளவாய் தாண்டவராயனைத் தந்திரமும் சூழ்ச்சித் திறனுமிக்கதோர் பாத்திரமாகச் சித்திரிக்கின்றது. நேருக்கு நேர் எதிர்ப்பதை விட மறைமுகமாகச் செயல்படுவதையே தாண்டவராயன் விரும்புகிறான். தென்பகுதி பாளையக்காரர்களை அடக்கிக் கட்டுப்பாடுடனும் கண்டிப்புடனும் ஆட்சி செய்யும் கான்சாகிபு தாண்டவராயனுக்குப் பெரும் சவாலாக அமைகிறான்.

வரிபாக்கிக்காக, கான் சிவகங்கை பாளையத்தைச் சார்ந்த திருப்புவனத்தை மதுரையுடன் இணைக்கப் போவதாக அறிந்ததும் பெருங் கவலை கொள்கிறான். எனினும் தனது சொல்லாற்றலால் கடிதம்வழி கானின் கவனத்தைத் திருப்ப முயற்சி செய்கிறான்.

கான்சாகிபின் மனைவிக்கு உறவு கொண்டாடிக் கடிதம் எழுதுகிறான். ஏராளமான பரிசுக் குவியல்களையும் அனுப்புகிறான். எனினும் கானின் எண்ணத்தை மாற்ற முடியாததால் ராமநாதபுரம் தளவாயுடன் இணைந்து நவாபைக் காணத் திருச்சி செல்கிறான்.

நவாபிடம் கானைப் பற்றிப் பல்வேறு குற்றச் சாட்டுகளைத் தாண்டவராயன் புனைந்துரைக்கிறான். இறுதியில் நவாபின் படைகளும் ஆங்கிலேயப் படைகளும் பாளையக்காரர் படைகளும் இணைந்து கான்சாகிபினை எதிர்த்துப் போரிடுகின்றன. போரில் தொடர்ந்து கானே வெற்றி வாகை சூட, அதிர்ச்சியடைந்த தாண்டவராயன் வஞ்சகத்தால் கானை வீழ்த்த திட்டமிடுகிறான். கானின் தளவாய் சீனிவாச ராவிற்குப் பெரும் பரிசும் பணமும் உயர்பதவியும் ஆசை காட்டி, சூழ்ச்சியால் கானைச் சிறை பிடிக்கச் செய்கிறான். இவ்வாறு சொல்லாற்றல் மிக்க

சூழ்ச்சித்திறமிக்க ஒரு எதிர்த் தலைவனாகவே தாண்டவ ராயன் அமைகிறான் எனலாம்.

நாட்டுப்புறக் கதைப் பாடல்களில் பாமர மக்களிடையே வழங்கப்படும் பேச்சு வழக்குச் சொற்கள் மிகுந்து காணப்படுவது இயல்பு.

கான்சாயபு சண்டையில் தமிழ், மலையாள, அறபு, உருது, ஆங்கிலச் சொற்களின் சிதைந்த வழக்கியல் வடிவங்கள் பல இடம் பெற்றுள்ளன. கம்சல் (கவுன்சில்), சோல்தார் (சோல்ஜர்), நாய்க்கர் (நாயக்), ஆடுதலி (ஆர்டர்லி), ஜன்னல் (ஜெனரல்), முசுப்பர் (முசாபர்), கும்தார் (கமாண்டர்), லாட்டு (லார்ட்), சல்லா (முசல்லா), கும்பினி (கம்பெனி), பிஸ்த்தோல் (பிஸ்ட்டல்) போன்றவை பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதும் நாட்டுப் புறவியல் இயல்பினை எடுத்துக் காட்டுகின்றன.

நாட்டுப்புறத்தார் நாவில் பயிலப்பெறும் கொச்சை வழக்குச் சொற்களும் கான்சாகிபு சண்டையில் இயல் பாகவே இடம்பெற்றுள்ள நிலையையும் காணலாம். டீக்காக, முசியா, வழிசாரி, சம்பிரதாயம், பளித்தா, வயணம், திர்த்தூளி, லவுண்டி, பயல், துரிசா, சத்ராதி, திஷ்ட்டி, ஹவுடா, பாரா, சணம், நகரா, சோடு, காயிதம், சன்னி, லேஞ்சு, வளப்பம், நிருபம், சலாம், கெலித்தல் போன்ற சொற்கள் பாமர வழக்கின் பன்மொழி பண்பினை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன.

நாட்டார் பாடல்கள் பாடுவதற்கேற்ற பண்பினைப் பெற்றவையாதலின் ஓசைநயம் இன்றியமையாததாகின்றது. ஓசைநயம் சிறக்க எதுகை மோனை சந்தங்களும் தொடர் இயைபுகளும் மடக்கி வருதலும் துணை புரிகின்றன. இத்தகைய கூறுகள் கான்சாகிபு சண்டையில் நிறைந் துள்ளன.

எடுத்த துவுந் தளகர்த்த மோதிரமுமல்ல
பிடித்தது மெழுத் தாணியல்ல
போட்டதுவுந் தீவாசுக் கம்பளியுமல்ல!

எதுகை மோனை இயைபுகள் ஒன்றிவரும் இயல்புக்கு எடுத்துக்காட்டாக அமைந்த பகுதி இது. "அழகான யானை அடிக்கிறாப் போலே; குதிரைதனை யடிக்கிறாப் போலே" எனும் அமைப்பில் வரும் பகுதிகள் இடை இறுதி இயைபினைக் காட்டுவனவாகும். சொற் களோ தொடர்களோ தொடர்ந்து ஒவ்வொரு வரியிலும் வரும் பாங்கினையும் காண முடியும்.

**சுபேதார் போன வழி காணோம்**
**சோல்ஜர்கள் பட்டாளம் போன வழி காணோம்!**

தாண்டி, திரும்ப, வணங்க, தாரேன் போன்ற சொற்கள் சில இடங்களில் தொடர்ந்து பல வரிகளில் மடக்கி வருகின்றன. பாணி பாணி, பஞ்சு பஞ்சா, தீன் தீன், பட பட, போ போ போன்ற சொல்லடுக்கு நிலைகளும் இடம் பெற்றுள்ளன.

கான்சாகிபு சண்டையில் தொடர் பெயர் குறிப்புக்கள் பல இடங்களில் அமைந்துள்ளன. படை வழிப் பயணத்தில் தாண்டிச் செல்லும் ஊர் பெயர்களும், படைவகையின் எண்ணிக்கையும் இவ்வாறு தொடர்ந்து பல வரிகளில் அமைவதைக் காணலாம்.

**திருச்சினாபள்ளி கோட்டை தாண்டி**
**சையனாமங்கலம் விராலி மலை தாண்டி**
**வரிசையாய் மணப்பாறை கடந்து!**

"பதினாயிரம் பட்டாளமிருக்க; குதிரையொரு நூறுமே யிருக்க; கோடான கோடியிருக்குதடா" போன்று பல இடங்களில் எண் பெயர்கள் பல தொடர்ந்து வந்து செல்கின்றன. கான்சாகிபிடம் வந்து பணிந்த பாளையக் காரர்களை வரிசைப்படுத்தும் ஆசிரியர்,

**இரட்டப்ப நாயக்கன் வணங்க**
**இரிசப்ப நாய்க்கனூங்கு கண்டு சந்திக்க**
**கட்டப்பொம்ம நாய்க்கனும் வணங்க**
**களக்காட்டூர் வன்னியன் சந்திக்க!**

என்று இருபத்திரண்டு பேர்களைத் தொடர்ந்து பல வரிகளில் குறிப்பிட்டுச் செல்கிறார். இத்தன்மைத்த தொடர்ப்பெயர் வரிசைகள் கதை நீட்சிக்கு வழி வகுப்பதோடு புள்ளி விபரங்களுடன் வரலாற்றை வலியுறுத்தும் நோக்கத்திற்கும் துணை புரிகின்றன.

அடைத் தொடர்களும் கருத்துத் தொடர்களும் நாட்டார் பாடல்களில் காணப்படுவதுண்டு. தளவாய் தாண்டவராயன் பல இடங்களில் முல்லை மணிபார்பன், காராளன் எனக் குறிக்கப்பெறுவது காணலாம். திசை மதுரைக் கோட்டை, மணிமதுரைக் கோட்டை, நல்ல மதுரைக் கோட்டை எனும் தொடர்களும் வருகின்றன. கான்சாகிபு வீரஅடைத் தொடர்களால் பல இடங்களில் சித்திரிக்கப் பெறுவதும் நினைவுகூரத் தக்கது.

பழமொழிகளும், உவமைகளும் நாட்டுப்புற இலக்கிய மரபின் தாக்கம் பெற்றவையாகக் கருதப்படுவன வாகும்.

நாட்டார் நாவில் நாள்தோறும் பன்முறை வழங்கப் படும் இவையே கதைப் பாடல்களிலும் பயன்படுத்தப் படுவது உண்டு. பெரும் கருத்து விளக்கங்களின் குறிப்புக் குறுக்கங்களாக அமையும் இவை கான்சாகிபு சண்டை யிலும் விரவியுள்ளன. மாஷா, தாண்டவராயனுக்குக் கடிதம் எழுதும்போது, "வெள்ளம் வருமுன்னே அணை கோலிக் கொள்" என்று குறிப்பிட்டு, கான்சாகிபின் படையெடுப்பைத் தவிர்க்க இயலாத நிலையையும் தடுப்பு நடவடிக்கையெடுக்கவும் சூசகமாக உணர்த்துகிறாள். தான் வளர்த்த கான் தனக்கே எதிராகச் செயல்படுவதறிந்த ஜெனரல் பிரிட்டன், "வேலிக்கு நான் வைத்த முள்ளு, காலுக்குப் பகையாக வந்ததென்று" குறிப்பிடுவதையும் காணலாம்.

கானை எதிர்ப்பதற்கான முறைமையைத் தளவாய் தாமோதரனுக்குக் கடிதம்வழி தெரியப்படுத்தும் தாண்டவ ராயன் சமயோசிதமாக,

**வளஞ் சிறந்து வரப்பறிந்து போனால்**
**வாய்க்காலும் நிற்குமே அல்லிகுல மன்னா!**

என்ற பழமொழியைப் பயன்படுத்துவதும் நோக்கத்தக்கது. மதுரைக்குத் தளபதியாகச் செல்லும் கான் முழங்கிய பீரங்கி அதிர் வேட்டுகள் "கோடை காலத்திடிகள் போல்" முழங்குவதாக உவமைப் பொருள் நயஞ்சிறக்க குறிக்கப் பெறுகிறது. நவாபு முகம்மதலியின் தோற்றம் "தேவேந்திரன் கொலு போலே" அமைகிறது. 'புலிபோலே' போர் செய்யும் கானன் "கத்தரிக் காயறுத்தெறிந்தாப் போலே" வீரர்களை வெட்ட "பனங்காய் போல்" சிப்பாய்கள் தலை உருளுவதும் சித்திரிக்கப்படுகிறது.

நாட்டுப்புற மக்கள் சமயச் சடங்குகளிலும் மரபு களிலும் மிகுந்த நம்பிக்கை கொண்டவராகத் திகழ்வர். இந்நிலை அவரால் பாடப்பெறும், அவர்களிடையே வழங்கப்பெறும் இலக்கியங்களிலும் தாக்கம் பெறுவது இயல்பே.

கதைத்தலைவனான கான்சாகிபும் முக்கிய பாத்திரமான நவாபு முகம்மதலியும் இஸ்லாமியர்கள் ஆதலின் சில முஸ்லிம் சமய மரபுகள் சுட்டப் படுகின்றன. கான்சாகிபு போர் செய்யும்போது 'தீன் தீனென்று' முழங்குவதாகக் குறிப்பிடப்படுகிறது. நவாபு முப்பது நோன்பு கடைபிடிப்பவராகவும் காட்டப் பெற் றுள்ளார். அல்லாஹ்வை நினைக்கிற குறிப்புக்களும் உள்ளன. சிக்கந்தர் சாய்பு எனும் இறைநேசச்செல்வர் பற்றி இரு இடங்களில் சுட்டப்பெறுவதும் நோக்கத் தக்கது.

மதுரை, ராமநாதபுரம் நகர்கள் கதைக் களன்களாக அமைவதால் மீனாட்சி, ராமலிங்கம், கடவுளர்கள் பற்றிய சில செய்திகள் நூலில் இடம் பெறுகின்றன. மீனாட்சிக்குச் சிறப்பு செய்து சகுனம் கேட்கிறாள் மாஷா. முருகனை வணங்கி கெவுளி பார்க்கிறான் தாண்டவராயன். புதையல் பெற பலி கொடுப்பதாகவும் செய்தி வருகிறது. கெவுளி பார்த்தல், சகுனம் பார்த்தல், சாஸ்த்திரம் கேட்டல், பூசை

செய்தல், அர்ச்சனை செய்தல், பலியிடுதல், சத்தியம் செய்தல் போன்றவை நாட்டுப்புறவியல் நம்பிக்கை களாகவும் மரபுகளாகவும் அமைந்தவை.

அதீத ஆற்றல்மிக்க நிகழ்வுகள் நாட்டுப்புறவியல் இலக்கியத்தில் இடம்பெற்று மக்களுக்கு மிகு ஆர்வமும் சுவையும் நல்குவது காணலாம். தெய்வ சக்தியோடு நிகழ்வதாகக் கருதப்படும் இத்தகைத்த மீமானிட ஆற்றல் மிகு செயல்கள் கதைத் தலைவனைத் தெய்வப் பிறவியாகவும், வீரதீர சாகசப் பாத்திரமாகவும் கருதத் தூண்டுகிறது.

கான்சாகிபு சண்டையில் மதுரை மீனாட்சி பார்ப்பனி உருவில் இரு தடவை கனவில் கான்சாகிபிடம் வந்து சூழ்ச்சி, போர் நிகழ்ச்சிகளைக் கூறி எச்சரிப்ப தாகவும் அறிவுறுத்துவதாகவும் அமைகிறது. இக்கனவு நிகழ்ச்சிகளை வருபொருள் உரைத்தல் உத்தியாகவும் கருதலாம்.

தூக்கிலிடப்பட்ட மூன்றாம் நாள் சிப்பாய்கள் கனவில் கான் வந்து பேசுவதாக அமையும் பகுதி கான்சாகிபினை தெய்வீக ஆற்றல்மிக்க வீரனாகக் கருதும் ஆசிரியரின் எண்ணத்தைப் புலப்படுத்துகிறது.

கற்பனை நயமிக்க வருணனைகள் கதைப்பாடல் நேயர்களுக்குச் சலிப்பையகற்றி உற்சாகமூட்டுவனவாக அமையும். வீரதீரக் கதைப்பாடலான கான்சாகிபு சண்டையில் போர் நிகழ்வுகள் அணிநலன்கள் சிறக்க வருணித்துச் சொல்லப்படுகின்ற நிலை மிகுந்து காணப் படுகிறது.

முனை கத்தி வீசினான் கானன் அப்போ
முந்நூறு பேருடைய தலையறுந்து வீழ
வீசினான் பொல்லாத கானன் அப்போ
விழுகுதே சிப்பாய் தலைகள் பனங்காய் போலே!

மூலக்கரைப் போரில் கானின் வெந்திறல் வீரம் வருணிக்கப்படும் பகுதியிது. பறங்கிமலை, வண்டியூர், திருப்புவனம் போர்களும் இத்தகைய வருணனைகளால் சித்திரிக்கப்படுவதும் காணலாம். படையொலி முழக்கம், படை புறப்பாடு, ப்டைப் பயணம், வஞ்சினம் பற்றிய செய்தி விளக்கங்கள் வீர இயல்பையும், உணர்வையும் மிகுவிக்கும் பாங்கில் அமைந்துள்ளதும் நினைக்கத்தக்கது.

வாய்மொழி மரபு மிகுந்த கதைப் பாடல்களில் புராண இதிகாசச் செய்திகளும் குறிப்புகளும் இயல் பாக வந்து இடம் பெறுவதுண்டு. மகாபாரதமும் இராமாயணமும் நாட்டார் சமூகத்தில் மிகப் பிரசித்தி பெற்றவையாதலின் பெரும்பாலான கதைப்பாடல்களில் இவை குறிக்கப்பெறுவது காணலாம்.

கற்புமிகு தேவி சீதா பிராட்டியினால் பத்து தலைகளையுடைய இராவணன் அழிந்து பட்ட வரலாற்றைக் கானுக்கு எடுத்துக் கூறி, மறவர் பாளையப் படையெடுப்பைத் தடுக்க நினைக்கிறாள் மாஷா. இராமேஸ்வரம் பெயர்க் காரணமும் குறிக்கப் பெறுகிறது. சிவன், முருகன், பார்வதி, கிருஷ்ணன், துரியோதனன், தருமன், கீசகன், பீமன் பற்றிய புராண இதிகாசச் செய்திகளும் இடம் பெறுவது காணலாம்.

இலக்கியச் சுவைக்காகவும், கதை நீட்சிக்காகவும் கதைப் பாடல்களில் வரலாற்றை மீறிய புனைந்துரைகளும் அமைவதுண்டு. அதீத கற்பனைகளும் வருணனைகளும் மிகுந்தமையும் நாட்டார் பாடல்களும் உள. இந்நிலை தவிர்க்க முடியாததாகின்றது. கான்சாகிபு சண்டையில் வரலாற்றை மீறிய ஒரு சில குறிப்புக்களே உள்ளன. அவையும் பெரிய முரண்பாடுகளை விளைவிக்கும் வகையில் அமைய வில்லை.

கான்சாகிபிடம் பணிந்த பாளையக்காரர்களைக் குறிப் பிடும் ஆசிரியர் வரலாற்றுச் சான்றிற்கு அப்பாற்பட்ட சில பெயர்களைக் குறிப்பிடுகிறார். ஆங்கிலேயர்களையும்,

நவாபினையும் எதிர்த்து நின்ற பூலுத்தேவன் பிற்பகுதியில் நவாபுக்கு ஆதரவாகக் காட்டப்படுவதும் வரலாற்று நோக்கில் ஆராயத்தக்கதாகும்.

நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் பல்கலைப் பேழை யாக அமைபவை. இலக்கியம், வரலாறு மட்டுமன்றி அவற்றில் அரசியல், சமூகவியல், இனவியல், மொழி யியல் கூறுகளும் இடம் பெறுவதுண்டு.

கான்சாகிபு சண்டை ஆங்கிலேய, நவாபு, கான், பாளையத்தாரின் ஆட்சியியலை எடுத்துரைக்கின்றது. அக்கால சமூகத்தாரின் வாழ்வு நம்பிக்கைகளையும் வழக்காறுகளையும் குறிப்பிடுகின்றது. நாட்டுப்புறத்தாரின் பேச்சு வழக்கியலையும் மொழி மாறுபாடுகளையும் சுட்டிச் செல்கின்றது.

மொத்தத்தில் கான்சாகிபு சண்டையைத் தமிழகத்தின் ஒரு காலக்கட்டத்தின் அரசியல் சமயச் சமூக வரலாற்றுச் சுவடுகளை மக்கள் மொழியில் எடுத்துரைக்கும் இலக்கியப் பெட்டகம் எனலாம்.





# 4. அலியார் படைப்போர்

அலியார் படைப்போர் ஒரு முஸ்லிம் நாட்டுப்புறக் கதைப் பாடலாகும். தனித்தனியாக அமைந்த ஐந்து போர் பற்றிய கதைப் பாடல்களின் இணைவாதலின் ஐந்து படைப்போர் என்ற பெயரும் உண்டு. முஸ்லிம் படைத் தளபதி ஹஸ்ரத் அலியாரை எதிர்த்துப் போர் செய்த ஐந்து எதிர் அரசர்களின் செய்திகளை இது எடுத்துரைக்கின்றது.

ஐந்து போராவன:- இபுனியன் படைப்போர், உச்சி படைப்போர், வடோச்சி படைப்போர், தாகி படைப் போர், இந்திராயன் படைப்போர் எனவாகும். அராபிய பாரசீகக் கற்பனைக் கதைகளின் செவ்வியும் சுவையும் மிளிர இப் பெருங்கதைப் பாடல் விளங்கு கின்றது. நாட்டாரிலக்கியத்தின் நலன்களும் அழகும் மலிந்துள்ள அலியார் படைப்போர் வீர தீரவுணர்வு விஞ்சி நிற்கும் வீரப்பாவியமாகவும் வாசகர் நெஞ்சைக் கவர்கின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நெல்லை மாவட்டத்தில் எழுந்தது அலியார் படைப் போர். இதனை நூல் வடிவத்தில் யாத்துப் படித்து அரங்கேற்றியவர் நெல்லை தென்பூவை மாநகரத்தைச் சார்ந்த .ஹஸனலி என்பவராவர். சுமார் இருநூற்று எண்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு கி.பி. 1737-இல் செவ்விய வடிவம் பெற்ற இந்தப் படைப்போர் வில்லுப் பாட்டாகப் பாடுவதற்கேற்ற அமைப்பினைப் பெற்றுள்ளது நோக்கத்தக்கது.

கதையால் தொடர்பு பெற்றிருந்தாலும் ஒவ்வொரு பகுதியும் தனித்தனி காப்பு வெண்பாக்களைக் கொண்டுள்ளது. எனினும் ஏனைய முகப்புப் பகுதிகள் யாவும் முதல் படைப்போரிலிருந்து முறையாகவே தொடங்குகிறது. ஐந்து காப்பு வெண்பாக்கள் நீங்கலாக

இப்பாட்டில் இரண்டாயிரத்து எழுநூற்று ஐம்பத்திரண்டு வீர ஈரடி அம்மானைப் பாடல்கள் உள்ளன.

ஆங்கில வீறு ஈரடிப் பாக்களுக்கு இணையான ஓசை நயமிகு உயர்வீர ஈரடிக் கண்ணிகள் இவை எனல் பொருந்துமாறு அமையும்.

ஐந்து படைப்போரின் தோற்றுவாய், வாழ்த்தியல், இறுவாய் முதலியனவற்றின் அமைப்பு, கதையை ஒரு பெருங்கதையாகவும் நூலினை ஒரு தனிப்பெரும் நூலாகவும் காட்டுகின்றது. ஆனால் ஒவ்வொரு பகுதி யிலும் அமைந்துள்ள காப்பு வெண்பாவும், தனிக்கதைத் தொடக்கமும் ஐந்து தனித்தனிப் படைப்போர்களின் தொகுதியாகவும் நூலைக் கருதத் தூண்டுகிறது.

**அல்ஹம்துலில்லாஹி**
**அனைத்தும் படைத்தவனே**
**குல்லும் நிறைந்த**
**குதாயே நற்கோமானே!**

என இறைத் துதியுடன் தொடங்குகிறது நூல்.

அண்ணல் நபிகளார், ஆட்சியாளர் நால்வர், இறைநேசச் செல்வர்களை வாழ்த்திச் செல்கின்றது நூல். மூலநூல் உரையாசிரியர், கொடை நாயகர், அவை யடக்கம், அரங்கேற்றிய காலம் முதலிய குறிப்புக்களும் நூலில் உள்ளன. கதை தொடங்குவதற்கு முன் மீண்டும் வாழ்த்தும் ஆசிரியர்,

**ஐந்து படைப் போரை அழகாய் படித்தோரும்**
**சிந்தையுற்று கேட்போருஞ் சிறப்பாகவே வாழி**

என்றுரைத்துக் கதையைத் தொடக்கம் செய்கிறார்.

நபிகள் நாயகத்தைக் காட்சியாக்கிக் கதையைத் தோற்றுவாய் செய்து இடையே நபிகளாரை மீண்டும் கதைமாந்தராகத் தலைமை பூணச் செய்து இறுதியில் நபிகளாரையே முன்னிறுத்திக் கதையை முடிக்கவுஞ் செய்கிறார். இறுதியில் கற்றவர், கேட்போர், பிறர்

யாவருக்கும் வாழ்த்துரைத்து நூலை முடிக்கும் பண்பில் பண்பாளராகிறார் அந்தப் பைந்தமிழ் புலவர்.

அலியார் படைப்போரின் தொடர்கதை இபுனியன் படைப்போரிலிருந்து தொடர்கிறது. குராசானியைக் கொடுங்கோலாட்சி செய்து வரும் பழிபாவம் நீங்காத பஞ்சமாப் பாதகன் இபுனியனுக்கு உடனே நல்வழி நாடுமாறு நபிகள் நாயகம் தூதனுப்பினார்.

இருண்டுபோன இதயங்கொண்ட இபுனியன் நபிகளாரின் தூதர் காலித் கூறிய நன்மொழிக்கு நயமில்லா நாற்ற மொழிகளைப் பதிலாகப் பழித்துரைத்துப் படையெடுத்து அழிப்பதாக வஞ்சினமும் உரைக்கின்றான்.

எண்ணற்ற படைகளுடன் இபுனியன் மதீனாவில் படையெடுத்துவர நபிகளாரும் நாற்பெரும் தோழர்களான ஹஸ்ரத் அபூபக்கர், உமர், உதுமான், அலியார் ஆகியோரும் பெருங்கவலையுற்று விரைவாக முஸ்லிம் படைகளைத் திரட்டத் தொடங்குகிறார்கள்.

களச் சந்திப்பிற்கு முன்பு மீண்டும் நபிகளார் தூதர் ஒருவரை இபுனியனிடம் அனுப்பித் தீய மார்க்கம் விட்டகன்று நல்மார்க்கம் காண வேண்டுமென்றார். எனினும் கசடன் இபுனியன் சமாதானத்தைச் சிறிதள வேனும் விரும்பாது 'அடர் செய்து அழிப்பேன்' என ஆத்திர மொழிகளை வீசுகிறான். ஹஸ்ரத் அலிகளாரின் தலைமையில் அண்ணல் நபி படை, இபுனியனை எதிர்த்துப் போரிடுகிறது.

**அம்பு தொட்ட கைகள்**
**அறுந்து கிடப்பாரும்**
**கும்பிட்ட கையோடு**
**குடற்சரிந்து கிடப்பாரும்**
**தலையின் விதியென்றே**
**தான் மொழிந்து வீழ்வாரும்**
**மலைபோற் புறமறுந்து**
**மாண்டு கிடப்பாரும்!**

ஆக இரு பக்கத்திலும் ஏராளமானவர்கள் களத்தில் உயிர் சிந்த, கலங்கிய அலியார், கடைசி நேரத்திலும் இபுனியனிடம் மனந்திருந்தி நல்வாழ்வு கொள்ள நயமாகக் கூற, மறுத்து விடுகிறான் இபுனியன்.

ஈன இரக்கமற்ற ஈனனான இபுனியனின் வஞ்சின மொழிகளும் பழிப்புரைகளும் நல்லார் நபிகயின் படைத் தளபதி ஹஸ்ரத் அலியாரை அதிரச் செய்யவில்லை. மனிதாபிமானத்தை மதிக்காமல் போர் செய்தே தீருவேன் என வலிந்து செயல்படும் இபுனியனிடமிருந்து முஸ்லிம் படைகளையும் மதினா மாநகரையும் காப்ப தற்காக ஆவேசத்துடன் போர்க்களத்தில் வினையாற்றத் தொடங்குகிறார். இபுனியனின் படைகள் வீழ்ச்சி பெறத் தொடங்க இறுதியாக மீண்டும் அலியார் இபுனியனுக்கு சமாதானத் தூது விடுகிறார். அந்த நேரத்திலும் அவன் மாசுரை கூறிடவே களத்திலே அவனை வெட்டி வீழ்த்து கின்றார்.

எஞ்சிய படைகள் பணிய, அவர்களுக்கு நல்வழி யுரைத்து விடுதலை செய்து விடுகிறார். இபுனியனின் இறப்பினைக் கேட்டறிந்த தேவி, தன் மகனுடன் திருநபியிடம் வந்து அழுது புலம்பி முறையிடுகிறாள். அலியாரிடம் தனது ஆற்றாமையை எடுத்துரைக்கிறாள்.

**எத்தனையோ புத்தியுனக்**
**கேற்ற மண வாளனுக்கு**
**உத்தமமாய்ச் சொன்னேனதில்**
**ஒன்றேனுங் கேட்டாரில்லை!**

என்று தேவியிடம் கூறும் அலியார், அவளுக்கு நல்லுரைகள் கூறி நன்மார்க்க வழிப்படுத்தி நாடாளப் பணிக்கிறார். நாட்டுக்குத் திரும்பிய தேவி, நபி மாட்சியையும் இஸ்லாமிய ஆட்சியையும் போற்றி மக்களாட்சி செய் கிறாள். அண்டை நாட்டரசன் இந்திராயனுக்கு நடந்த சம்பவங்களைக் கடிதம்வழி அறிவிக்கவும் செய்கிறாள். இத்துடன் முதல் படைப்போரான இபுனியன் படைப் போர் முற்றுப்பெறுகிறது.

முலுத்தானை மூர்க்கமுள்ள மூடராஜன் இந்திராயன் என்பவன் ஆளுகிறான். அவனுக்கு அழகு மகள்கள் இருவர். மூத்தவளை தாகிமன்னன் கொண்டுள்ளான். இளையவள் பனிமதிக்கு இணையான வரனைத் தேர்வு செய்ய எல்லா நாட்டு மன்னர்களையும் அழைத்து சுயம்வரம் நடத்துகிறான். அந்தத் தருணத்தில் இபுனியன் தேவியின் ஓலை வந்து சேர்கிறது. விபரம் அறிந்த இந்திராயன் கையை நிலத்தடித்து, கைகொட்டி மூக்கில் வைத்து "வேதமது தானேது வேந்தர்நபி தானேது" எனக் கோபம் கொப்பளிக்க அலறுகிறான்.

**அலிதலைக் கொண்டு வந்தோர்**
**அக்கணமே மெய்மகளை**
**தாலிகட்டி வாழ்ந்திடலாம்**
**தாராத பேர்களெல்லாம்**
**பீலிகட்டி சேலைகட்டி**
**பேசும்புறவூர்க்கேகி**
**கூலிநெல்லு குத்தி**
**கொண்டு குறைதீர்க்கலாமினி!**

அரங்கத்திலுள்ள அரசர்களை நோக்கி அரசன் அறிவித்த செய்தியிது. உடனே உச்சி என்பவன் அலி தலையை வேகமாகச் சென்று வெட்டி வருகிறேன் என வஞ்சின முரைத்துச் செல்கிறான். ஏனைய மன்னர்களும் அவனுடன் சேர்ந்து அலியை வெல்ல அணிவகுக்கின்றனர்.

சுயம்வரத்திற்கு வந்த அரசர்கள் எல்லோரும் சிரம் வரத்திற்காகச் சிறிது கணத்தில் அவைக்களத்திலிருந்து போர்க்களத்திற்குச் செல்லும் காட்சி சிந்தித்து இன்புறத் தக்கது. அலி தலையைக் காட்சி வைத்தால் பனிமதி வாழ்வில் மாட்சி தருவாள் என்ற ஆசையில் அளவு கடந்த ஆவலோடு படைப் புறப்பாட்டில் எல்லோரும் நபிநகர் நோக்கி நடைதிறங் கொண்டனர். அளவில் பெரிய படைகள் வந்ததையறிந்த அண்ணலார், தாமே படை நடத்திச் செல்லத் துணிந்தார்.

உடனே நபித் தோழர்கள் அபூபக்கர், உமர், உதுமான் போன்றோர் முந்திக் கொண்டு தங்களுக்கு அனுமதியளிக்க வேண்டினர். சுத்த வீரர் கத்தனலியார் என்தலை பொருட்டு நாடிவந்த படையாதலின் நானே செல்வன் எனக் கூற, நபிகளாரும் அனுமதியளிக்கின்றார்.

சிங்கத்தை ஆட்டினங்கள்
சேர வளைந்தன போல்
பக்கத்தில் சூழ்ந்தார்கள்
பயஹறாம்பர் சேனைகளை
காற்றும் மழையுங்
கனபுயலு மொன்றாய்
கற்று குணம் பாய்ந்தது போல்
நின்று பொருதனரே!

இருபெரும் படைகளும் இடைவெளியின்றிப் பொருது நிற்கின்றனர். போர்க்களத்தில் அலியார் எதிரியென நோக்காது உச்சிக்கு அன்பால் அழைப்பு விடுகிறார். அழைப்பு விடுத்த அலியாரை அவன் ஆத்திரங் கொண்டு வாளால் தாக்க முயல, அவர் தமது ஆற்றலை யெல்லாம் ஒன்றுதிரட்டி வெட்டி வீழ்த்துகிறார். எஞ்சி யோர் அஞ்சியொடுங்கிப் புறமுதுகு காட்டி ஓடுகின்றனர். இதுவே இரண்டாவது படைப்போரின் கதைச் சுருக்கம்.

வட்டமண்டல மன்னன் வடோச்சி பெரும் படைப் பரிவாரங்களுடன் இந்திராயனைக் காண வருகிறான். அவனிடம் இபுனியனுக்கும் உச்சிக்கும் ஏற்பட்ட அவல நிலையைக் கூறி அலி தலையை அறுத்து வந்தால் பனிமதியைப் பாங்காய் மணமுடித்துத் தருவதாக ஆசைமொழி அளிக்கிறான் இந்திராயன். அரண்மனை மேல்மாடத்தில் உலவிய பனிமதியின் அழகு சித்திரம் அவனை வியப்பிலாழ்த்துகிறது.

முருக்கம்பூ போலிதழும்
மோகமுற்ற பல்லழகும்

கருக்கெழுதும் கண்ணழகும்
கழறுகின்ற கைவீச்சும்
கிஞ்சுகம் போல் மொழியும்
கீற்றுப் பிறை நுதலும்
மஞ்சுதவழ் குழலும்
மாமதிபோல் முகமும்

கொண்ட பனிமதியோ வடோச்சியின் தூதனுக்கு அறிவுரை பகர்ந்தனுப்புகிறாள். கத்தியின்றி ரத்தமின்றி, கத்தனலியார் முன், காசீம் நபி முன், சென்று பணிந்து துன்மார்க்கம் விட்டு சன்மார்க்கங் கொண்டு இன்மணத்தில் இதயம் பூரிப்போம் என வடோச்சியிடம் அறிவுறுத்த, சொல்லி அனுப்புகிறாள். எனினும் வாய்நெறியைத் தவிர்த்து வாள்நெறியைப் போற்றும் வடோச்சி அலியை எதிர்த்து படையெடுத்துச் செல்லவே துணிவதாக நூலுரைக்கின்றது.

வலிந்து படையெடுத்து வந்த வடோச்சியர் கோனை வள்ளல் நபி வன்மார்க்கத்திலிருந்து நன்மார்க்கத்திற்கு வர, தூது அனுப்புகிறார். ஏவிய தூதரைப் பாவியவன் கூவிப் பழித்தனுப்ப, அலியார் படைக்காலங்களேதுமின்றிப் படை நடத்தி அவனை எதிர்க்கிறார். அந்நேரத்திலும் மனித நேயத்தால் மன்னனை அன்புடன் கூவி, கொல்லறம் விட்டு நல்லறம் நாட வேண்டுகோள் விடுக்கிறார். அவனோ கத்திதனை உருவிக் கத்தனலி தலையை வெட்ட நெருங்க, அலியார் தன்வலி முழுவதையும் திரட்டி அவனைத் தேரோடு சரிந்து விழச் செய்கின்றார். பொறுமைக்குப் பெயர் போன பயஹாம்பரின் மருகர் அலிப்புலியார் மீண்டும் அவனை அல்லறம்விட அழைப்பு விடுகிறார்.

உடனே வடோச்சி, 'நான் நல்வழி பெறும் பொருட்டு நீவிர் எனக்கு உமது தலையைத் தருக' எனக் கூற அன்புக்குப் பணிந்த அலியார் மனமுவந்து அவ் வண்ணமே உம் எண்ணம் நிறைவேறட்டும் என்கிறார்.

பலவாறாக வெட்டியும் சிரசு காயம் படாத மாயங்கண்ட மன்னன் வெட்கித்துத் தலைகுனிந்து, சாந்தி

வழியே சாந்தவழியெனப் பணிந்து நிற்கிறான். தனிநகரை தறிகெட்ட நெறியில் ஆண்டு வரும் பாவி தாகியை நல்வழிப்படுத்த நாம் தூது செல்வோம். மறுத்தால் தங்கள் தலை போல் வடிவமொத்த தாகித் தலையை எடுத்து இந்திராயனிடம் அளித்து அவன் மகளை மணமுடிக்க நீங்கள் உதவ வேண்டும் என்று ஹஸ்ரத் அலியாரிடம் வடோச்சி வேண்டி நிற்கிறான்.

பெண்ணாசையால் கண்கள் மறைக்க எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணுகின்ற அவனுக்கு இறை நாட்டமே உயர்நாட்டம் எனக் கூறி, தாகியைத் தகும்வழிப்படுத்தச் செல்வோம் என்கிறார்.

அலியார் நடந்த நிகழ்வுகளையெல்லாம் நபிகள் நாயகத்திற்குக் கடிதம்வழி தெரியப்படுத்தவும் மறக்க வில்லை. மூன்றாவது படைப்போரின் கதைப்போர் இப்படி முற்றுப் பெறுகின்றது.

தகாத வழியில் தனிநகரை ஆளும் தாகியின் தேசமடைந்த தேசுபுகழ் தாஹா நபியின் படைகள் அறநெறி காத்துப் புறநகரில் பொறுமையாய் ஒதுங்கி யிருந்தனர். தானைமறவன் தாஹா நபி மருகர் அலியார் அறநெறி காத்துப் புறநெறி களைந்து புதுவாழ்வு பெற தாகிக்குத் தூதனுப்புகிறார். தாகியோ தூதனைத் தகாதுரைத்து,

**வேகமிகவாகிமேனி**
**யெல்லாந் தீக்கொளுத்தி**
**ஏகமாய் பூமிதனில்**
**எனக்கெதிரி யாரெனவே?**

கொக்கரித்துக் கொட்டுகிறான். நல்லறங்காத்து நிற்குமாறு நயமாக வடோச்சியர் கோனும் வேண்டி நிற்க ஆத்திரத்தால், அடர்செய்து அலிப்புலியை அழிப்பேன் என வஞ்சினமுரைக்கிறான் தாகி. தொடர்ந்து இரு படை களும் பொருதத் தொடங்குகின்றன. படைக்கலன்கள் ஏதுமின்றிப் போர்க்களத்தில் செயலாற்றி நிற்கும் அலியார்

அந்த நேரத்திலும் தாகிக்கு அன்பான அழைப்பு விடுத்துப் பார்க்கிறார். அன்பும் பணிவும் பயனற்றுப் போக, போர் தவிர்க்க முடியாததாகின்றது.

நிராயுதபாணியாய் நின்ற நீதர் அலிப்புலியை வாள் நீட்டி வெட்ட தாகி முயன்றிட அலியார் அவனை வேகத்தில் வீழ்த்துகிறார். வடோச்சி வேகத்தில் வந்து தலைதனைக் கொய்கிறான். ஏகனிறைவனிடம் அலியார் இரந்து வேண்ட, தாகி தலை அலியார் தலையாய் வடிவங் கொள்கிறது. எஞ்சிய படையோரை நல்வழிப்படுத்தி விடுதலை செய்தலும் நடைபெறுகிறது. தலையைக் கொண்டு போய் பனிமதியை மணமுடிக்கவும், தடையேதும் வரின் இம்முரசை ஒலிக்கவும் பணித்து முரசொன்றினையளித்து அலியார் திரும்புகிறார். கண்கண்ட கணவன் தலையை வடோச்சி வாளாலறுத்த செய்தி கேட்ட தாகி மனைவி தடுமாறி விழுகிறாள்.

விழுந்தா ளெழுந்தாள்
வெற்றி மன்னே யென்றழுதாள்
கொழுந்தே யெனைப் பிரியக்
கூடுமோ யென்றழுதாள்?
மூட்டி வைத்த தீ முனையில்
மூளுகின்ற வாட்போலும்
ஆட்டிவிட்ட பம்பரம் போல்
ஆயிழையாள் தானழுதாள்!

போர்க் களத்தில் உடல் கிடக்க, தலையுடன் வரும் வடோச்சி பற்றி உடனே தந்தைக்குச் செய்தியனுப்புகிறாள் தாகி மனைவி. வடோச்சியோ எல்லையில்லா இன்பத்தில் மூழ்கித் திளைத்துப் பனிமதியை மணக்க முலுத்தான் நகர் நோக்கி விரைந்து செல்கிறான். நான்காவது படைப் போரின் நயமான கதைச்சுருக்கம் இது.

மக்கமா நபியை வென்று அலிப்புலித் தலைகொண்டு வடோச்சி வந்த செய்தி முலுத்தான் மன்னனுக்கு அறிவிக்கப்பட, அவன் அளவு கடந்த மகிழ்ச்சியால்

ஆனந்த நடம் புரியத் தொடங்குகிறான். வடோச்சியின் மாட்சியை மெச்சிப் புகழ்ந்து வரவேற்றுரைத்த வேந்தன் பனிமதிக்கும் வடோச்சிக்கும் திருமணம் நடத்த ஏற்பாடுகளை விரைவாகச் செய்ய உத்தரவிடுகிறான். பனிமதியோ பார்போற்றும் பண்பாளர், படைத் தளபதி அலியார் தலையை எவர்தான் வெட்டுவர் என்று கூறி நகைத்து நிற்கிறாள். இந் நிலையில் தாகியின் மனைவியின் கடிதம் வந்து சேருகிறது.

**சத்தி கெட்ட பாவியென்று**
**தான் வந்தே யென்னிடத்தில்**
**புத்திகெட்டிங் கென் மருகன்**
**போந்த தலை கொண்டு வந்தான்!**

என்று கூறி, ஆத்திரமும் ஆவேசமுங் கொண்ட இந்திராயன், படைகளை நோக்கி வடோச்சியை வெட்டி வீழ்த்திட கட்டளையிடுகிறான். வடோச்சியும் தன் படைகள் உதவியுடன், வீறுடன் வாட் போர் ஆற்றி நிற்கிறான். இந்நிலை கண்ட மன்னன் மகள் பனிமதி நீதி நபியை நெஞ்சில் நினைத்து வடோச்சி வெற்றி பெற இறையவனை வேண்டுகிறாள். அளவிடதற்கரிய ஆற்றலுடன் இந்திராயன் படைகள் முரட்டுத்தனமாக போராற்ற, குறுகிய அளவிலான படைகளைக் கொண்ட கொற்றவன் வடோச்சி நெஞ்சங் கலங்குகிறான். துணை யின்றித் துடிக்கும் அவன்நிலை இரங்கத்தக்கதாக அமைந்தது.

இடர்வரும் வேளையில் ஓங்கியறைந்திட அலியார் கொடுத்த முரசினை முயன்றெடுத்து இறைவனை நினைத் தேற்றி முழக்கத் தொடங்குகிறான் வடோச்சி. பல காத தூரமதில் மக்காவில் இருந்த மாநபி மருகர் காதில் வடோச்சியின் முரசொலி உதவி கோரி ஒலி முழக்க, ஒரே பாய்ச்சலில் வாயுவை வெல்லும் வேகத்தில் முலுத்தானில் வடோச்சியின் அருகில் வந்தடைகிறார் அலியார். படைக் கலன்களின்றிப் போர் செய்ய வந்த அலியாரை நினைத்து மனம் பதைபதைத்து இறைஞ்சி நிற்கிறாள் பனிமதி.

பரிப் படைகள் பல பக்கமுமாய் அலியாரைச் சூழ ஆங்கு மக்காவிலிருந்த மனைவி மாநபி மகளார் பாத்திமுத்து நாச்சியார் படைக்கலன்களின்றிப் போர் செய்த கணவரை, கணக்கற்ற யானை பரிப்படைகள் சூழ்ந்து நிற்பதைக் கனவில் கண்டு கலங்கிப் படைக்கலன்களை அளிக்க ஏகனிடம் இரந்து இறைஞ்சுகிறார்.

துல்தலதனைக் கண்டார்
துல்புக்கறா வாள் கண்டார்
வல்ல வீர பட்டமுமே
வரமாக வந்ததுவே!

இறையருளால் படைக் கலன்களைப் பெற்ற அலிப்புலியார் சலியாது பெரும் படையை எதிர்த்துச் சிதற அடிக்கிறார். எண்ணற்ற இந்திராயன் படைகள்முன் அளவில் சிறிய அலியார் படை விந்தையுடன் போராற்றத் தொடங்கியது.

களத்தில் சென்ற படைத் தலைவரை யெல்லாம் மடையுடைத்த வெள்ளமாய்த் தடையுடைத்து வென்று நின்ற அலியார் படைகண்டு, அதிர்ச்சியடைந்த இந்திராயன் தாமே சென்று தலைமையேற்றுத் திறங்காட்டிட, தேவி யிடம் விடை வேண்ட அவள் தடுத்து நிற்கிறாள்.

போகாதீ ரலியிடமே
போர் வேங்கையது
நோகாதே யிங்கிரும்நீ
நுஞ்சேனை யனுப்பும்
எண்ணொணாச் சேனைகள் தாம்
இரணக்களத்தில் மாய்ந்ததுவே
நன்றோநீர் போறது தான்
நாடாளும் மன்னவரே?

நல்வழிநெஞ்சின் நங்கையாள் பனிமதியும் தாதி யொருவளை அழைத்து, "அலியுடன் போராற்றி மடிய வேண்டாம். நல்வழி சென்று பல்வளம் பெறுவோம்" என

தந்தைக்குச் செய்தி விடுக்கின்றாள். தொடர்ந்து நடக்கின்ற போரில் அலியாரும் இந்திராயனும் வஞ்சின முரைத்து வீறுகொண்டெழுந்து வாட்போராற்றுகின்றனர். இந்நேரத்திலும் அலியாரின் அன்பான சமாதானத் தூது இந்திராயனுக்குச் செல்லத் தவறவில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

இந்திராயன் படைகளில் உள்ள தளபதிகள் பலர் வீழ்ச்சியடைகின்றனர். களத்தில் இறங்கிய மன்னர் பலரும் வாழ்வில் காணா அனுபவத்தைக் கண்டு நிற்கின்றனர். அளவிடற்கரிய போர் வீரர்களுடன் எண்ணிறந்த யானை, குதிரைகளும் இறந்து படுகின்றன. முன்னரே இபுனியன், உச்சி, தாகிக்கு ஏற்பட்ட முடிவும் இந்திராயன் நினைவில் கிலி யூட்டுகின்றது. பண்பான அலியின் அன்பான அழைப்பும் ஆவலூட்டுகின்றது. இறுதியில் இந்திராயன் மனந்திருந்தி சன்மார்க்க வழியைப் பின்பற்றுகிறான். நாடும் ஆட்சியும் திருப்பி அளிக்கப்படுகிறது. வடோச்சிக்கும் பனிமதிக்கும் பாங்காகத் திருமணம் நடைபெறுகிறது.

எல்லோரும் மக்கமா நகர் சென்று மாநபிகளாரைக் கண்டு மகிழ்கின்றனர். நபிகளாரும் மன்னருக்குப் பரிசுகள் பல அளித்து நாட்டுக்கு அனுப்பி வைக்கிறார். இவ்வாறு இந்திராயன் படைப் போர் இறுவாய் பெறுகின்றது.

அலியார் படைப் போரில் வாய்மொழி யாப்பின் புனைதிறம் ஓங்க, சந்தத் தொடர்கள் அடிக்கடி வந்து செல்வது காணலாம். இசை நயமிக்க பகுதிகள் பல இடங்களில் தொடர்ந்து வந்து நாவோடு செவிக்கும் தேனாய் இன்பம் சுரக்கச்செய்வது மலிந்துள்ளது எனலாம்.

**காலிகண்ட வெம்புலிபோற்**
**கன்னெஞ்சு தானுழன்று**
**வாலிபத்தார் கேட்பவர்கள்**
**வன்னெஞ்ச ராகினரே!**

எதுகை, மோனை இயைந்து உலாவரும் இதுபோன்ற பல பகுதிகள் கதைப் பாடலில் காணப்படுகின்றன. ஓசை நயத்தை மிகுவிக்கும் வித்தகநிலை எங்கும் பரவி இசை

யாட்சி நடத்துகின்றது. ஊரோடு, பாரோடு, ஆயிரம், பாயிரம், இருநூறு, ஒருநூறு, வெட்டி, முட்டி, வாடா நீ, போடா நீ, நகைத்தார், பகைத்தார், மட்டந்தெரியாத, திட்டந் தெரியாத, வென்று வராதிருக்கிற், கொன்று வராதிருக்கிற், பெண்ணாசை, கண்ணாசை போன்ற இணைத் தொடர்கள் முதல், இரண்டாவது வரிகளில் வந்து ஓசையூட்டி நிற்கின்ற நிலை மிகுந்துள்ளது.

**கண்டம் ரண்டு துண்டாக**
**கண்டம் கண்ட மாயினனே**
**பின்வைக்க மாட்டாதே**
**பின்வைத்தே தெனலே**
**நல்லார்க்கு நல்லார்க்கு**
**நல்லவராம் நானிலமெல்லாம்.**

ஒரே வரியிலேயே பல இணைத்தொடர்கள் வந்து ஒலிநயத்தை மிகுவிக்கும் நிலைக்குச் சான்றாய் அமைபவை இவை. முதலில் இடையில் இறுதியில் வந்தமையும் இயைபுத் தொடர்களும் இடம்பெற்றுள்ளன.

நாட்டாரிலக்கியத்தில் திரும்பத் திரும்ப வருகின்ற தொடர்கள் சில இடம் பெறுவதுண்டு. இவை மரபுத் தொடர் வாய்ப்பாடுகளாகவும், அடைபுணர் பெயர் களாகவும் அமைவன. அலியார் படைப் போரில் மீண்டும் வரும் இந்த இலக்கிய இயல்பு மிகப் பல இடங்களில் அமைந்துள்ளன. வாய்மொழிப் பாடலின் வனப்பை மிகுவிக்கும் இந்நிலையால் கதைப்பாடல் நீண்டு போகவும் ஏதுவாகிறது. தவிர, வருணனை விளக்கங்களில் இவை கேட்போருக்குச் சுவையூட்டத் துணை செய்யும் வகை யிலும் அமைவது காணலாம். இபுனியனின் கோட் டையை வருணித்துச் செல்லும் கதைப்பாடல்,

**... தேர்நிற்கும் பந்திகளும்**
**... பரவி நிற்கும் பந்திகளும்**
**... குதிரை நிற்கும் பந்திகளும்**
**... உலாவி நிற்கும் பந்திகளும்**

... வளைந்திருக்கும் பந்திகளும்
... தளங்கள் நிற்கும் பந்திகளும்

எனத் தொடர்ந்து கூறிக்கொண்டே செல்கின்றது. இது போன்ற அமைப்பில் சந்தடியும், வீழ்வாரும், கிடப்பாரும், பொருதார், துல்துல், இல்லாவிடில், கூட்டமென்றார், என்றழுதாள், என்று முடியும் தொடர்கள் பன்முறை மீண்டும் மீண்டும் வந்து வாய்மொழியிலக்கிய மரபை நினைவுறுத்துகின்றன. ஒரே வரியில் ஒரு தொடர் மீண்டும் மீண்டும் வரும் நிலையும் உண்டு.

வேற்காரர் தம்முடனே
வேற்காரர் தாம் பொருதார்
மாற்காரர் தம்முடனே
மாற்காரர் தாம் பொருதார்!

ஈரடிகளில் ஒரு தொடர் மீண்டும் வருவதைக் காட்டும் இத்தகைத்த இயல்பும் சில இடங்களில் காணத் தக்கது. பெரும்பாலும் போர் வருணனைகளில் திரும்பத் திரும்ப வரும் தொடர்களைத் தொடர்ந்து காண முடிகிறது. ஒரு வரியில் முடியும் சொல் அடுத்த வரியில் தொடக்கச் சொல்லாக அமையும் அந்தாதி பாங்கும் உள்ளது.

தோன்ற வரும் வெள்ளானை
வெள்ளானை மேற் பவனி...

ஜெய ஜெயா, தீன்தீன் போன்று அடுக்கிவரும் ஒலிக் குறிப்புச் சொற்களும் சிலவுள. இந்நிலை இசையுணர் வினையூட்டி இதயத்திற்கு இன்பம் பகரும் தன்மையாகும்.

பழமொழிகள் பாமர இலக்கியத்தின்பாற்பட்ட பாங்கான ஒரு வகையாகும். இவை இலக்கியத்தில் இடம் பெறும்போது எடுத்துக் கூறும் கருத்துக்கள் அழுத்தம் பெறும். நாட்டார் நாவில் பயிலப்பெறும் பழமொழிகள் பல அலியார் படைப்போரில் அமைந்து சிந்தனைக்கு விருந்தாகின்றன.

'கேடு வரும் பின்னே மதிகெட்டு வரும் முன்னே' யென்று இபுனியன் நிலையை நபித்தூதர் காலிது கூற, நமக்கு இபுனியனின் இதயநிலை தெளிவாகின்றது. எருக்கம்பூ மணம் பெறுமா? கல்லெல்லாம் மாணிக்க கல்லாகுமா? சிறு உளிதான் பெருங்கல்லைப் பிளந்திடும், நெருப்பில் விழுந்த புழு நிற்குமோ? போன்ற பழமொழித் தாக்கம் பெற்ற தொடர்களும் உள்ளன. பொருள் நிலை விளக்கத்தோடு இலக்கியச் செவ்வியையும் இதயமுணர இவை இடந்தருகின்றன எனலாம்.

வருணித்துச் செல்லும் பாங்கிற்கு உவமைகள் உற்ற துணையாவதோடு உயர்சுவையும் நல்குவன.

அலியார் படைப்போரில் போர் வருணனை மிகும் இடங்களில் உவமைகள் தனித்தும் தொடர்ந்தும் வருவது காணலாம். பழமொழிகள் போன்று நாட்டாரிலக்கியத்தில் உவமைகளும் காட்சிக் கருத்துப்பொருள் விளக்கத்திற்கும் அழுத்தத்திற்கும் வழி வகுக்குமாறு அமைகின்றன.

தாரட் விடை நெய்யானாள்
தாயை விட்ட கன்றானாள்
கூரைவிட்ட தூணானாள்
சுடுமணலிற் பாம்பானாள்!

தாகியின் தலைவி அழுது புலம்பி அரற்றும் காட்சியை சோகச் சித்திரமாக்கும் பாடல் ஒன்றின் பின் ஒன்றாகப் பதினைந்து உவமைகளை அணிவகுத்துச் செலுத்தும் காட்சி படித்துணரத் தக்கது.

பனிமதியின் அழகினை வடோச்சியின் நெஞ்சம் புனைந்து காட்டும்போது, என்றென்றும் நினைந்து காட்டும் வகையில் பதினேழு உவமை உருகங்களை ஆசிரியர் அடுக்கிச் செல்லும் மாண்பும் போற்றற்குரியது.

இபுனியனின் தோற்றம் பாரமலைக்கு ஒப்புவமை யாகிறது. குன்றுபோல களத்திலே பிணங்கள் குவிகின்றன. மகரக் கடலில் வனசுறா பாய்ந்ததுபோல் அரிவாள் பாய்கிறது. ஆடித் துரும்பு போல் வடோச்சி போர்க்

களத்தில் அலைய, மக்காவிலிருந்து அலியார் பாய்ந்து வரும் புலியாக நில்லாது நீந்திவரும் வீரற்போல் வந்து உதவுவது வாடும் பயிருக்கு மழை வந்தது போல், தேடும் பொருள் வலியக் காலில் சிக்கியது போல், பிள்ளையில்லா தள்ளைக்குப் பிள்ளை வந்ததுபோல் அமைந்ததாக ஒரே காட்சியிலேயே பல உவமைகளைக் கொட்டிக் காட்சியை உயிர்ப்பித்து நிற்கும் உயர்நிலையும் இப் படைப்போரில் மலிந்துள்ளது.

கதைமாந்தர்களின் ஆற்றலைப் போற்றியுரைப்ப தற்கும் வருபொருளைக் கோடிட்டுக் காட்டுவதற்கும் இயற்கை இகந்த நிகழ்வுகள் துணைபுரிவது இயல்பு. கனவுகள், அதிசயங்கள், தெய்வீகச் செயல்கள் முதலியவை இப்படைப் போரில் இயற்கை இகந்த செய்திகளாக இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. இவை கதைப்பாடலைக் கேட்போர் காதுகளில் ஆர்வத்தையும் எதிர்பார்ப்பையும் ஏற்படுத்துகின்றன. வானவர் ஜிபுரீல் இறைத் தூதரிடம் வந்து இபுனியனுக்கு நல்தூது அனுப்ப ஆண்டவன் பணித்ததாக அறிவித்துச் செல்வது ஒரு மீமானிடச் செய்தியாகிறது.

அமாவாசை நாளில் அண்ணல் நபிகளார் சந்திரனை அழைப்பித்து இரண்டாகப் பிளந்தது, தசைப் பிண்டத்தைப் பெண்ணுருப் பெறச் செய்தது, அறுந்து விழுந்த கரத்தை ஒட்டச் செய்தது, மலையைப் பெயர்த்து வந்து காட்டாற்று வெள்ளத்தைக் கத்தனலியார் தடுத்தது போன்ற கிளைக் கதைச் செய்திகளும் இயற்கை இகந்தவைகளுக்குக் காட்டாக அமைவனவாகும்.

தாகியுடைய தலையை இறைஞ்சி, தன் தலைபோல் அலியார் மாற்றுவதும், வடோச்சி முரசொலிக்க மக்கா விலிருந்து காற்று வேகத்தில் கணநேரத்தில் அலியார் வந்து சேருவதும், அலியாருடைய படைக்கலன்கள் திரும்ப வருவதும் கதைப்போக்கில் அமையும் தெய்வீக ஆற்றல் மிக்க அதிசய நிகழ்ச்சிகளாகும்.

வடோச்சிக்கு உதவி செய்யச் சென்ற ஹஸ்ரத் அலியாரை எதிர்ப்படைகள் சூழ்ந்து பயமுறுத்தும்

நிகழ்வினைக் கனவில் கண்டு, இறைவனிடம், இழந்த படைக்கலன்களை மீண்டும் அளிக்க இரங்கி இறைஞ்சுகிறார் அலியார் மனைவி நபிமகளார் நல்பாத்திமுத்து பீவியார். இதுவும் ஒரு அதீத நிகழ்வாக அமைந்து கதைப்பாடலுக்கு வளஞ்சேர்க்கின்றது.

அலியார் படைப் போரில் அமையும் எண்குறிப்புத் தொடர்கள் கதைப்போக்கில் ஒரு புதுமை நிகழ்வாகும். கற்பனையாற்றலில் கதையுரைக்கும் ஆசிரியர் அளவிறந்த அளவில் எண் குறிப்புகளை எடுத்தோதுவது காணலாம். இவை சிலவிடங்களில் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர் வதையும் அடுக்கு அணிவகுத்துச் செல்வதையும் அறியலாம்.

பால்களொரு நூறுகுடம்
பண்பாகவே வார்த்து
மால்கள் தேனூறு குடம்
மதிப்பாகவே வார்த்து
நெய்களொடு நூறுகுடம்
நேராகவே வார்த்து
தெய்யுந் தயிர்க்குடங்கள்
சேர்வில் முந்நூறு குடம்!

இபுனியன் உணவில் அமையும் உணவுப் பொருட்களின் அளவினைக் காட்டும் ஆசிரியர் எண்குறிப்புகளை எண்ணமில்லாது காட்டும் பகுதியிது. இது போன்று நூறு, ஆயிரம், லட்சம், கோடி என அளவின்றிக் கையாளப்படுவது காணத்தக்கது. குழுப்பாத்திரங்களை, தனித்தனியாக அறிமுகஞ் செய்யும்போது ஒவ்வொருவராக அடைபுணர் பெயர்களால் அமைத்துச் செல்லும் நிலையும் சுவை பகருவதாகும்.

நம்பிக்கைகளும் மரபுகளும் பாமர மக்களின் நோக்கிலேயே கதைப்பாடலிலும் அமையும். குறி பார்த்தல், சகுனம் பார்த்தல், உறவு மரபுரைத்தல், இறைவனை ஏற்றுதல், இறைஞ்சுதல், வீரசுவர்க்கம் புகுதல் போன்றவை அலியார் படைப்போரில் நம்பிக்கைகளாகவும் சமய மரபுகளாகவும் காட்டப்பெறுகின்றன.

இபுனியனும் இந்திராயனும் போருக்குச் செல்லு முன்னே வேதியரையும், குறிகாரர்களையும் அவையில் வரவழைத்து நிலை ஆராய, அவர்கள் வருபொருள் எடுத்துரைக்கிறார்கள். கடவுட் பூசை செய்து நல்ல முகூர்த்தம் நோக்கி இந்திராயன் களத்தில் செல்வது சகுனம் பார்க்கும் நம்பிக்கையை நினைவுறுத்துகிறது.

அலியார், படை புறப்பாடு நடத்துவதற்கு முன் தேவியாரிடம் விடைபெறல், ஏக இறைவனிடம் காப்பு இரத்தல் முதலியவை சமய மரபினைக் காட்டுகின்றன. போர்க்களத்தில் தங்கள் திறம் ஆற்றி உயிர் விடுவோர் சொர்க்கம் புகுவர் என்ற கருத்தும் சில இடங்களில் குறிக்கப் பெறுகிறது.

**ஹாஷீம் கிளையிலபீத்**
**தாலிப் புத்திரன் யான்**
**காசீம் முகம்மதுக்கு**
**கண்ணான நல் மருகன்**

என இபுனியனுக்கு விடையாகத் தமது குலஉறவுமரபு உரைக்கிறார் முஸ்லிம் படைத்தளபதி அலிப்புலியார். குலஉறவு மரபு உரைத்து இதே பாங்கில் வஞ்சினம் உரைக்கும் அலியார் உச்சிப் படைப் போரிலும் காட்சி தருகிறார்.

அலியார் படைப்போரில் நாட்டாரிலக்கிய நலன்கள் பலவும் பதிந்துக் கிடக்கின்றன. தாகி, இபுனியன் மனைவியாரின் ஒப்பாரியும் ஓலமும் அவலச்சுவையை மிகுவிக்கின்றன. போர் புறப்பாடு, போர்க் காட்சிகள், களநிலை முதலிய பகுதிகள் வீரமெய்ப்பாட்டைக் காட்டுவன. இந்திராயன் - அலியார் கேள்வி பதிலில் இறையியல்பு, ஒன்றே குலம், வாழ்வு நிலையாமை, மூட நம்பிக்கை மறுப்பு போன்ற விழுமியக் கருத்துகள் அறிவுறுத்தப்படுவதும் அறியத்தக்கது. கிளைக்கதைகளாக, நபிவாழ்வில் நடந்த சில நிகழ்வுகள் நினைவுறுத்தப் படுவதும் காணலாம். புராண இதிகாசக் குறிப்புகளும் சில இடம் பெற்றுள்ளன.

அநீதியை எதிர்த்து குரலெழுப்புதல், சமாதானத் தூது விடல், அறநெறி காத்தல் போன்ற கருத்துக்கள் சுட்டப்பெறுகின்றன. நல்லறத்தை நிலைநாட்டுதலே பாவிகமாய் அமைந்து படிப்போர் சிந்தையைக் கவர்ந்து நிற்கிறது.

ஐந்துபடைப்போர் கதைப் பாடல் ஐவர் ராசாக்கள் கதையுடனும் பஞ்சபாண்டியர் கதையுடனும் ஒப்புரைக்கத் தக்கதாகும். கதையால் ஒருமையுடைய பஞ்ச பாண்டியர் கதையும் ஐவர்ராசாக்கள் கதையும் ஐந்து மன்னர்கள் கன்னட மன்னனை எதிர்த்த வரலாறு கூறுவது போல் ஐந்து படைப் போர் கதையும் அமைவது நோக்கத்தக்கது. ஐவர் ராசாக்கள் கதையில் பாண்டிய இளவரசனுக்குக் கன்னடிய இளவரசியை மணமுடிக்கச் செய்யும் குறிப்பு வருவது பனிமதியின் திருமண நிகழ்வுடன் ஒத்தமைகிறது. இந்நூல்கள் மூன்றும் போரையே முக்கிய கருவாகக் கொண்டுள்ளதும் கவனிக்கத்தக்கது.

அலியார் படைப்போரில் போர் நிகழ்வது மண், பொன், பெண் காரணமாகவல்ல எனலாம். தவிர்க்க முடியாத சூழ்நிலையில் பெரும் படையெடுப்பினின்று தற்காத்துக் கொள்ளவே அலியார் போர் செய்கிறார். அநீதியைத் தடுக்கும் முகத்தான் அறிவுறுத்தப்படும் தூதும் மொழியும் மறுக்கப்பட்டு ஒருசாராரிடத்தில் வலிந்து போர் திணிக்கப்படும்போது மட்டுந்தான் தற்காப்புப் போர் தேவை ஏற்படுகிறது. போரில் அறங்களும் மரபுகளும் பெரிதும் பேணப்படுகின்றன. தோற்றவர்களுக்குத் திருந்த வாய்ப்பளிப்பதோடு அவர்க்குரிய தேசமும் திருப்பியளிக்கப்படுகிறது. அநீதியைப் போக்கி தர்மத்தைக் காப்பதே கதைப்பாட்லின் தலையாய நோக்கமாகக் காட்டப்பெறுவது குறிப்பிடத்தக்கது.





# 5. சைத்தூன் கிஸ்ஸா

கிஸ்ஸா, நாமா, முனாஜாத், மசலா படைப்போர் என்பவை அரபு, பாரசீக, உருது மொழிகளைத் தழுவி முஸ்லிம் தமிழில் எழுந்த இலக்கிய வடிவங்களாகும். 'கஸஸ்' எனும் அரபுச் சொல்லிலிருந்து பிறந்ததே 'கிஸ்ஸா' எனும் பெயர்.

'கஸஸ்' எனின் 'கதையுரைத்தல்' எனப் பொருள்படும். அறபு, பாரசீக இலக்கியங்களிலிருந்து எடுத்தாளப்பட்ட முஸ்லிம் கதைகள் 'கிஸ்ஸா' எனப்பட்டன. இவை இஸ்லாமிய மார்க்கக் கருத்துக்களையும், வரலாற்று நிகழ்வுகளையும் கற்பனைச் சுவை கலந்து எடுத்துரைப்பன.

தொடக்கக் காலத்தில் ஏராளமான கிஸ்ஸாக்கள் முஸ்லிம்களிடையே பொழுது போக்கு இலக்கியங்களாக வழங்கப்பட்டு வந்தன. வாய்மொழியளவில் வழங்கப்பட்ட இந்தக் கதைகள் நாளடைவில் அறபுத் தமிழிலும், தமிழிலும் வரிவடிவம் பெறத் தொடங்கின. முஸ்லிம் களிடையே வழங்கப்பட்ட வாய்மொழிக் கதைகளைப் புலவர் சிலர் அதன் அரபு, பார்சி மூலகதைகளுக்கேற்ப வகுத்துத் தொகுத்து எழுதினர்.

கிஸ்ஸாக்கள் முழுவதும் செய்யுளில் அமையவில்லை. சில வடிவங்கள் இடையிடையே உரையுடனமைந்தன. சில உரைநடையில் மட்டும் எழுந்தன. இந்நிலை கிஸ்ஸா வடிவத்திற்குரிய தனிச் சிறப்பு நிலையாகக் கருதத்தக்க தாகும்.

கிஸ்ஸா கதைப்பாடல்களில் பல போர்களைக் கதைப் பொருளாகக் கொண்டு அமைவனவாகும். இவற்றில் சைத்தூன் கிஸ்ஸா, முகம்மதனிபு கிஸ்ஸா, அலியார் கிஸ்ஸா, அபூஷஹ்மா கிஸ்ஸா முதலியன குறிப்பிடத் தக்கனவாகும்.

சைத்தூன் கிஸ்ஸாவும், முகம்மதனிபு கிஸ்ஸாவும் ஒப்புமையுடைய கதைப் பாடல்களாகும். வீர கிஸ்ஸாக்கள் பெரும்பாலும் முஸ்லிம் வீரப்படைத் தளபதி ஹஸ்ரத் அலிப்புலியாரையும், அவரது மகனாரையும் பற்றி எழுந்தவை எனலாம்.

போரினைக் கதைப் பொருளாகக் கொண்ட கிஸ்ஸா பாடல்களில் சைத்தூன் கிஸ்ஸா பிரசித்திபெற்றதாகும்.

சைத்தூன் கிஸ்ஸா என்ற பெயரில் இரு கதைப் பாடல்கள் உள்ளன. ஒரே கதையை இரு புலவர்கள் வரிவடிவில் யாக்கும் இயல்புக்கு எடுத்துக்காட்டாக இந்நிலை அமைந்துள்ளது.

முதலாவது சேக்லெப்பை சாகிபு என்பவரால் யாக்கப்பெற்றது. காலம் கி.பி. 1874. இது முழுமையாகச் செய்யுட்களால் அமைந்தது. மற்றொன்று, வாலை அப்துல் காதிர் சாகிப் அவர்களால் பாடப்பெற்றது. இது இடை யிடையே உரையும் கவிதையும் விரவி அமைவதாகும்.

கவிதைக் கதையுடன் உரைக்கதையும் இரண்டறக் கலந்த சைத்தூன் கிஸ்ஸா இலக்கிய உலகில் புதுமை நல்குவதாகும். நூலின் முன்னுரைக் குறிப்பில், "இந்தி, பார்சி வாசிக்கத் தெரியாதவர்கள் எளிதில் அறிந்து மகிழ்வு கொள்ளும்படி தமிழில் வெள்ளை மொழியாகக் கொஞ்சம் வசனமாகவும் கொஞ்சம் கவியாகவும் சகல பேரும் வாசிக்கும்படி இன்புற்று பேட்டை ஆமூரில் இருக்கும் வாலை பாவா சாகிபு அவர்கள் குமாரர் அப்துல் காதர் சாகிபு அருளிச் செய்தது" என்ற செய்தியுரைக்கப் படுவது காணலாம்.

நெகிழ்ச்சியான யாப்பில் அமைந்த பாடற் பகுதி யினுள் எவ்விடத்தும் யாத்தவர் பெயரோ, காலமோ, பிற தகவல்களோ இடம்பெறவில்லை. இறைவாழ்த்தும் எங்கணும் இல்லை.

கதைப்பாடல் ஈரடிக் கண்ணிகளால் ஆக்கப் பட்டுள்ளது.

கவிதைக் கதை முடியுந்தருவாயிலிருந்து திரும்பவும் தொடங்கும் வரையிலும் வசன கதை நிகழ்வுரைக்கின்றது.

வசன கதைப் பகுதிகள் பத்தும் செய்யுட் பகுதிகள் பதினொன்றும் அடங்கியுள்ளன. செய்யுளில் கதை தொடங்கி உரை நடையில் முற்றுப்பெறுவதும் நோக்கத் தக்கது.

சைத்தூன் கிஸ்ஸாவின் கதைப்பொருள் இஸ்லாமிய வரலாறு எனும் வகையில் அமைந்தாலும் இந்நிகழ்ச்சிகளுக்கு வரலாற்றுச் சான்றுகள் எதுவும் கூறமுடியாது. முஸ்லிம் படைத் தளபதியார் ஹஸ்ரத் அலியாரின் மைந்தர் முஹம்மதனிபு, இறைமறுப்பாளரும் தீயவருமான மன்னர்கள் சிலரைப் போரில் வென்று சைத்தூனை மணமுடித்ததாகக் கதை கூறுவது கற்பனைச் சுவைக்கு மெருகூட்டுவதாகும். இஸ்லாமிய நெறிக்குட்பட்ட அறநெறிப் போரையும், மரபையும் மக்களுக்குச் சுவை கலந்து அறிவுறுத்த கற்பனை நிகழ்வுகளின் அடிப்படையில் எழுந்தது சைத்தூன் கிஸ்ஸா எனலாம்.

அரபகத்தை அண்ணல் நபியின் அருமைத் தோழர் ஹஸ்ரத் உமறு கத்தாபு மாட்சியுடன் ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறார். ஒரு நாள் ஹஸ்ரத் அலியாரின் மைந்தர் முஹம்மதனிபும், அபூபக்கர் சித்தீக் அவர்களின் இரு செல்வர்களும், ஆட்சியாளர் உமறுகத்தாவின் இரு செல்வர்களுமாக தூரேயுள்ள ஒரு பெருங்காட்டில் வேட்டைக்குச் செல்கிறார்கள்.

வேட்டையாடிக் கொண்டிருக்கும் வேளையில் இறம்ராஜனின் மகள் சைத்தூன் தனது தோழியர் நாற்பது பேர்களுடன் குதிரைகளில் வந்து, தனது காட்டில் அத்துமீறி நுழைந்து வேட்டையாடிய குற்றத்திற்காக நால்வரையும் வலுக்கட்டாயமாகச் சிறைப்பிடிக்கிறாள். முஹம்மதனிபு சைத்தூனின் ஈட்டியால் காயம்பட்டு நிலத்தில் பேச்சு மூச்சின்றி விழுந்துகிடக்க, இறந்து விட்டார் என நினைத்து, தந்தையிடம் வந்து நடந்ததைக் கூறுகிறாள்.

"ஆண்சிங்கம் அலியாரின் மகன் முஹம்மதனிபாவை வெல்ல பூமியில் யாருண்டு; சைத்தூன் கூறுவது பொய்" என அமைச்சர்கள் அரசனிடத்து எடுத்துரைக்கின்றனர்.

ஆத்திரமுற்ற சைத்தூன் "மதீனா போய் புலியலி யோடு வல்ல சண்டை செய்து வென்று வருவேன்" என்று வஞ்சினம் உரைத்து நிற்கிறாள்.

மயக்கந் தெளிந்த மாவீரன் முஹம்மதனிபு நடந்த நிகழ்ச்சியை நினைந்து வாடிய முகத்துடன் வீட்டுக்குச் செல்ல, தாயறிந்து "பெண்ணின் கையால் பேயடிப்பட்டும் திரும்பி வந்ததேன்?" என வினவுகிறார்.

தன்மானம் தலைதூக்க கண்களிரண்டும் படபடக்க, பல்லை நறநற வென்று கடிக்க, "இறம் சென்று சைத்தூனை வென்று தோழர் நால்வரையும் சிறை மீட்பேன்; இலையேல் திரும்பி வரேன்" என்று உறுதி யுரைத்துச் செல்லும் காட்சி இதோ.

**செந்தூள் பறந்திட விட்டார் குதிரை**<br>
**சைத்தூன் தனைநாடி**<br>
**பூமியடர்ந்திட விட்டார் குதிரை**<br>
**பூவை தனைநாடி**<br>
**கருந்தூள் பறந்திட விட்டார் குதிரை**<br>
**காரிகை தனைநாடி!**

போருக்குத் தனியே சென்ற மகனை நினைத்து ஏங்கி, தாயார் தேடிப் புறப்பட அந்த அம்மையாரையும் சைத்தூன் தந்திரக் கயிற்றால் சிறை பிடித்திட, அங்கே வேகமாக வந்த முகம்மதனிபு அவரை விடுவிக்கிறார்.

சைத்தூனுக்கும் முகம்மதனிபுக்குமிடையே நடக்கும் போரில் சைத்தூன் தோல்வியைத் தழுவ, என்னைப் போரில் வெல்லும் வீரரையே நான் மணப்பேன் என்ற தனது விரதத்தை முகம்மதனிபிடம் கூறுவதோடு உடனே சன்மார்க்கத்தில் இணையவும் செய்கிறாள்.

தாயாரையும் சைத்தூனையும் தோழியரையும் மதீனாவுக்குச் செல்லப் பணித்துவிட்டு அலிமகனார் வீரவுறுதியை நிறைவேற்ற இறம் நேசத்திற்குச் செல்கிறார். காட்டரசன் ஒருவன் அனீபாவின் தாயாரையும் சைத்தூனையும் தோழியரையும் தடுத்து நிறுத்தி, தாயாரை தாக்கினான். அம்மையார் இறைவனிடம் இறைஞ்சி காப்பு தேட, வானவர் ஒருவரால் அவர் காப்பாற்றப் பெறுகிறார்.

சைத்தூனையும் தோழியரையும் சிறைப்பிடித்த அரசன் சைத்தூனிடம் காதல் கொண்டு நெருங்க அவள் ஆத்திரத்தால் சீறி வீரமுரைக்கிறாள்.

சூனியக்காரி ஒருத்தியை அழைத்து அவளை அடைவதற்குரிய வழிதேட, சூனியக்கிழவியோ தான் கண்ட கனவின் விளைவுகளை நினைந்து சைத்தூனைக் காப்பாற்றுவதோடு நல்மார்க்கம் அடையவும் செய்கிறாள். சைத்தூன் அந்த ராஜனை வென்று மீண்டும் தோழி யருடன் மதீனா பயணமாகிறாள்.

முகம்மதனிபு இறம் செல்லும் பாதையில் செண்டூல ராஜனின் காய்கனிச் சோலையில் புகுந்து வயிறார உண்டு ஓய்வெடுக்கிறார். இதனையறிந்த அரசன் ஆத்திரங் கொண்டு போர் தொடுக்கிறான். போரில் பெருந் திறலாற்றல் காட்டி வெல்ல, அரசன் நன்மார்க்கத்தில் இணைகிறான். செண்டூல ராஜனும் இறம் நாட்டை வெல்ல உதவிக்கு வர ஆவல் கொள்ள தனித்துச் செல்லும் உறுதிமொழியைக் கூறி அவனைத் தடுத்துக் கூறிவிட்டுச் செல்கிறார்.

செல்லும் பாதையில் அக்கா - தங்கையாரான கொடுங்கோல் அரசிகள் இருவரை வென்று அவரால் சிறைபிடிக்கப்பட்டுப் பாழுங்கிணற்றில் இடப்பட்டிருந்த இம்ரானை மீட்கிறார்.

இம்ரானின் எதிரிகளான அமைச்சர்கள் எழுவரையும் வென்று நன்மார்க்கத்தில் இணையச் செய்கிறார். இம்ரானையும், அமைச்சர்களையும் அன்பில் பிணைத்து

அமைதியாக ஆட்சி நடத்த அறிவுரை தந்தபின் இறமை அடைகிறார்.

இறம் பாதுஷாவின் படைகளுடன் முகம்மதனிபு போரிடுகிறார். தம்படைகள் தோல்வி அடைந்துவிடுமோ எனப் பயந்த அரசன் சூழ்ச்சியால் முகம்மதனிபை வீழ்ச்சி யடையச் செய்யத் திட்டமிடுகிறான். களத்தில் பெரும் அகழிகள் தோண்டப்படுகின்றன. மறுநாள் போர்த் தொடங்க அகழ்கிணறு ஒன்றில் அனிபா வீழ்ந்து விடுகிறார். தேடி வந்த சைத்தூன் அவரைக் காப்பாற்றி சிகிட்சைக்காக இம்ரானின் நாட்டில் அழைத்து வருகிறார். அங்கு இம்ரானை எதிர்த்துப் போர்செய்து சிறை பிடித் திருந்த மக்லூர் எனும் கொடுங்கோலனை சைத்தூன் வென்று இம்ரானைக் காப்பாற்றுகிறாள்.

கைகால் முறிந்து பழுதுற்ற முகம்மதனிபு வலி பொறுக்க முடியாமல் குரலெழுப்ப அவர்மீது காதல் கொண்டிருந்த சமுத்திர ராஜனின் மகள் மந்திரசக்தியுள்ள காரியாபரி அவரைத் தன் நாட்டிற்கு ரகசியமாக தூக்கிச் சென்று விடுகிறாள். இதையறியாத சைத்தூனும் தோழியரும் அனீபைக் காணாது பெருங் கவலையடைந்து விபரத்தை மதீனாவுக்குத் தெரிவிக்கிறார்கள். அலியார், நபிகள் நாயகத்தின் அடக்கத் தலத்தில் நின்று மனமுருகி வேண்ட, முகம்மதனிபு சமுத்திர ராஜன் ஷாபரியின் மாளிகையில் இருப்பதாகவும் பெரும் ஆபரண அணிக் குவியலுடன் சைத்தூன் தலைதிறந்தவாறு அவன் முன்னே சென்றால் கணவனை மீட்கலாம் என்ற செய்தி அறிவிக்கப் படுகிறது.

முஸ்லிம் படைகளும் சைத்தூனும் சமுத்திரராஜனின் நாட்டிற்குப் பயணமாகிறார்கள். செல்லும் வழியில் மீஆது ராஜனுடன் போர் செய்ய வேண்டிய நிலை ஏற்படுகிறது.

**வெங்கலம் போல் சரீரமுள்ளவன்**
**மீஆது ராஜன்**
**சிங்கம் போல ஆணவமுள்ளவன்**
**மீஆது ராஜன்!**

எனினும் போரில் மீஆது தோற்க இறுதியில் இறை நம்பிக்கை கொள்கிறான். அவனது வேண்டுகோளுக் கிணங்கி அட்டூழியக்காரனான தேராஜனையும் போரிட்டு வெல்ல நேரிடுகிறது. அவனும் நாட்டாரும் நல்வழியை மனமுவந்து ஏற்கிறார்கள். அவனது கோரிக்கைக்கிணங்க சுஹர்பாது மன்னனுடனும் போரிட நேரிடுகிறது.

**பேரிகை முழக்கத்தோடே யெழுந்தார்**

**பெரிய சண்டை செய்ய**

**பம்பைகள் தாரைகள் முழக்கியே வந்தார்**

**பார சண்டை செய்ய!**

எனினும் சண்டையில் சுஹர்பாது தோல்வியைத் தழுவ, பணிந்து இறை நம்பிக்கை கொள்கிறான். தேராஜன், மீஆதுராஜன், சுஹர்பாது ராஜன் மேற்பார்வையில் கப்பல் தயார் செய்யப்படுகிறது. மன்னர் மூவரிடம் விடை பெற்றபின் முஸ்லிம் படைகள் மீண்டும் சமுத்திர ராஜன் ஷாபரியின் மாளிகை நோக்கிப் பயணஞ் செல்லத் தொடங்குகின்றன.

கப்பல் செல்லும் திசையில் ஒரு மாமலை தென் பட்டது. அதில் சமுத்திர ராஜனின் காவலர்கள் எழுவர் தென்பட்டனர். அவர்களுடன் போரிட்டு அவர்களை நன்மார்க்கத்தில் இணையச் செய்த சைத்தூன் அவர்கள் உதவியுடன் பயணத்தைத் தொடர்கிறாள்.

சமுத்திர ராஜனின் அரண்மனையின் அருகில் சென்ற எல்லோரையும் அமைச்சர், அரசன் ஷாபரி முன் அழைத்துச் செல்கிறான். தலையில் மறைவின்றி அரசன் முன்னே வந்த சைத்தூனிடம் ஏன் என வினவ, "என் தலையை மூடும் துப்பட்டி உன் வீட்டிலிருக்கிறது" என்கிறாள்.

விபரமறிந்த ஷாபரி மகளைக் கடிந்து உடனே முகம்மதனிபை விடுதலை செய்கிறான். தவிர, அவரது கால் முறிவிற்குரிய மூலிகைகளையும் அறிவிக்கிறான். அவ்வண்ணமே சிகிச்சை செய்ய எலும்பு முறிவுகள்

மறைந்து முகம்மதனிபு மீட்சி பெறுகிறார். மீண்டும் இறம் ராஜனை வெல்வதற்காகப் பயணத்தைத் தொடருகிறார்.

போர் வழிப் பயணத்தில் திரும்பவும் சுஹர்பாது ராஜன், தேராஜன், மீஆது ராஜன் முதலிய முஸ்லிம் மன்னர்களைச் சந்தித்து மகிழ்ந்து பேசிவிட்டு முகம்ம தனிபு, சைத்தூன் கூட்டத்தினர் இறம்தேசம் நோக்கிச் செல்கிறார்கள். இரு பெரும் படைகளும் போர்க் களத்தில் வேகமாக மோதிக் கொள்கிறார்கள்.

**கையொருபக்கம் காலொருபக்கம்**
**காணக் குவிந்து போச்சு**
**தலையொருபக்கம் உடலொரு பக்கம்**
**தரையில் குவிந்து போச்சு!**

தம் படைகள் வீழத்தொடங்க, மனங் கலங்கிய அரசன், சூழ்ச்சியால் முஹம்மதனிபை வெல்ல முடிவெடுக் கிறான். இரவு நேரத்தில் முஸ்லிம் படைகள் உறங்கும் நேரத்தில் இறமின் படைகள் ரகசியமாக வந்து தாக்கத் தொடங்கின. முஸ்லிம் படைகள் அதிர்ச்சியில் சிதறின. முஹம்மதனிபு அகழியொன்றில் விழுந்துவிடுகிறார். இச்செய்தியை வானவர் ஒருவர் அலியாருக்கு அறிவிக்க அவர் காற்று வேகத்தில் விரைந்து வருகிறார். மீண்டும் போர் நடைபெறுகிறது. போரில் இறம் தோல்வியடைய, புறமுதுகு காட்டி ஓடி ஒளிகிறான்.

இறம் ராசன், தனது தம்பியான இம்லாக் அரசனின் மாளிகையில் சென்று மறைகிறான். தம்பி ஆறுதல் கூறிப் போருக்கு ஆயத்தமாகிறான். தேடி வரும் முஸ்லிம் படைகள் அங்குப் போரினைச் சந்திக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது.

**கத்திக் காரர்களும் ஈட்டிக் காரர்களும்**
**கடுக ஓடி வந்தார்**
**அம்புக் காரர்களும் தண்டக் காரர்களும்**
**அலறி ஓடி வந்தார்!**

திரண்டு வந்த படைகளை அசுகாபிகள் படை ஆவேசத்துடன் எதிர்க்கிறது. ஆத்திரங் கொண்ட இம்லாக் தன் அண்ணன் மகனைப் போருக்கு வர, சவால் விடுகிறான். இருவருக்குமிடையே நடக்கும் போராட்டத்தில் இம்லாக் இறந்து படுகிறான். காட்சி கண்ட இறம் பாதுஷா இரண்டாவது தம்பியின் நாட்டுக்குச் செல்கிறான். அங்கும் முஸ்லிம் படைகள் வந்து தம் திறம் காட்டி நிற்க அந் நாட்டரசன் அல்வழிவிட்டு நல்வழியில் வருகிறான். நிலைகண்டு பதறிய பாதுஷா மூன்றாம் தம்பியின் நாட்டிற்குச் சென்று தஞ்சமடைகிறான். அவனும் போரில் தோற்றுவிட நான்காவது தம்பியின் நாட்டை நோக்கி ஓடுகிறான் பாதுஷா.

முஸ்லிம் படைகளுடன் இறமின் இளைய தம்பியின் படைகள் எதிர்த்துப் போரிடுகின்றன. போரில் முகம்ம தனிபும், சைத்தூனும் விரைந்து செயலாற்றுகிறார்கள். அலிப்புலியாரும் ஆற்றலுடன் வெந்திறல் வீரங்காட்டத் தொடங்குகிறார்.

**மழையைப் போல பொழிந்தாரம்பு**
**விருது மிகப் பேசி**
**மின்னலைப் போல மின்னுது கத்திகள்**
**மேக இடி போல!**

போரின் இறுதியில் வழக்கம் போல் எதிர்ப்படைகள் தோல்வியைத் தழுவுகின்றன. தம்பியுடன் இறமும் இஸ்லாத்தில் இணைந்து கொடுங்கோலாட்சி விட்டு நல்லாட்சி செய்யத் துணிகிறார்கள். முன்னால் சிறை யிலகப்பட்ட முகம்மதனிபு தோழர்கள் நால்வரும் விடுதலை செய்யப்படுகிறார்கள். அனீபு - சைத்தூன் திருமணம் இன்மணமாக இனிது நடைபெறுகிறது. அலிப்புலியார் அண்ணல் முகமது நபியின் அடக்கத் தலத்திற்குச் சென்று தரிசித்துப் புகழ்ந்தேற்றி நிற்கிறார்கள். இவ்வாறு எல்லோரும் நல்லாராக, சைத்தூன் கிஸ்ஸா முடிவு பெறுகிறது.

சைத்தூன் கிஸ்ஸாவின் செய்யுட் பகுதிகளிலும் உரைநடையின் தாக்கம் மிகுந்து வாய்மொழியாப்பினை புலப்படுத்தியமைகின்றன. செய்யுட்பகுதிகளின் இடை இடையே அமைகின்ற உரைப்பகுதிகள் தவிர நெகிழ்ச்சி யாக அமைந்த பாடல் வரிகளிலும் உரைநிலையின் பாதிப்பு மிகுந்துள்ள நிலை மலிந்துள்ளதைக் காணலாம். அப்படியிருக்க, அந்த வேளையில், அந்த சொல்லை, என்ற சொல்லை போன்ற உரைத்தொடர்கள் பல இடங்களில் வரிமுதலில் நிகழ்நிலையுரைக்கும் உரைத் தொடர்களாக அமைகின்றன.

நாட்டார் இலக்கியத்தின் தன்னியல்புக்கேற்ப, பல வழக்குச் சொற்களும் நூலில் பயின்று வருவது நோக்கத்தக்கது. சகலோரும், பிசகிடாமல் கெலித்து, அஞ்சு, ஆங்காரம், நானாவிதம், தள்ளை, அமளி, முழித்து, நாம்பள், ஒற்ற, சீக்கிரம், அம்மாளு, பேச்சு, சாமி, ஆரபாரம், சஞ்சலம், சலுதி, சந்தோஷம், ஒளித்து, பாரச் சண்டை, கிட்டே, சிற்றப்பன், தெண்டம் - போன்றவை பாமர பேச்சு மொழியின் இயல்பை யுணர்த்துவன. சலாம், பீசபீல், சருதார், நகரா, அதபு, நவுபத்து, அசுஹாப், போன்ற அரபு - பார்சி வழக்கியலும் உள.

உவமைகளும் பழமொழிகளும் நாட்டுப்புற இலக்கிய வருணனைக்குச் சுவை பகரும் கூறுகளாகும். கற்பனைக் கதையுரைத்தலில் உவமைகள் கணிசமான பங்கு வகிப்பன. போர்க் கதைப் பாடல்களில் செயல் விளக்கவுரைகளுக்கு ஒப்புமை உயர்பேரின்பம் தரும். பசு புலியை மிரட்டுவது போல், கோழி நரியை மிரட்டுவது போல், எலி பூனையை மிரட்டுவது போலுள்ளது உனது மிரட்டல் என அடுக்குவமையால் சைத்தூனிடம் கூறி நிற்கிறார் முகம்மதனிபு. முகம்மதனிபு போர்க்களத்தில் விரைந்து வெந்திறல் வீரங் காட்டிய திறம் ஆட்டுக் குலத்துள் புலி பாய்ந்தது போல் அமைவதாகப் பல இடங் களில் கூறிச் செல்வதும் நினைக்கத்தக்கது.

பஞ்சு பஞ்சாய் பறக்கடிப்பேன்
பாருங்களெல்லோரும்

பூனை பூப்போல் பறக்கடிப்பேன்
பாருங்களெல்லோரும்!

என்று முஸ்லிம் படைகள் முன் மோதும் தேராஜன் உவமை நலன் உயர்வளிக்கக் கூறுவதும் உணரற்பாலது. அம்புகள் மழைபோல் பொழியப்படுகின்றன. கத்திகள் மேக இடி போல் மோதுகின்றன. பிணங்கள் மலைபோல் குவிகின்றன. மூளைகள் தயிர் போல் சிந்துகின்றன. உவமை அணிகலன்கள் அணிந்த களக்காட்சிகள் கருத்துக்கு விருந்தாவனவாகும்.

ஓசைநயமிக்க பாடல் வரிகள் இதயத்திற்கு இன்பம் ஊட்டுவன. கேட்போர் காதுகளில் இனிமை சுரப்பன. இந்நிலை சைத்தூன் கிஸ்ஸாவில் சற்றும் குறைவின்றி அமைகின்றன இதுபோல்.

செந்தூள் பறந்து போச்சுது யெங்கும்
சேனைகள் தெரியாமல்
கருந்தூள் பறந்து மூடிக் கொண்டது
கண்கள் தெரியாமல்!

எதுகை மோனை அமைந்து சிறக்கும் ஓசைத் தொடர்கள் சில இடங்களில் வந்து செல்கின்றன. பல இடங்களில் ஓசைத் தொடர்கள் இணையாக வந்து இசையுணர்வு ஊட்டுகின்றன. இறுதி இயைபுகள் பல இடங்களில் வந்து ஒலிநயத்தை மிகுவிக்கின்ற நிலையும் உண்டு. அலறி ஓடிவந்தார்; பதறி ஓடிவந்தார், ஆதிபுலியுல்லா; பார அலியுல்லா, சத்தமாகிப் போச்சு, அழுகை மிகுதியாச்சு, சூரர் நால்பேரும்; தீரர் நால்பேரும். பேசுகிறா யென்முன்னை; எதிர்த்தாயென் முன்னை - போன்ற இணைத்தொடர்கள் இறுதி இயைபுக்கு எடுத்துக் காட்டாக அமைவனவாகும்.

மீண்டும் மீண்டும் மடக்கிவரும் பாங்கு சைத்தூன் கிஸ்ஸாவில் பொருந்தியமைவது காணத்தக்கது. ஒருசொல் அல்லது எழுத்து வேறுபாட்டில் ஒரே மாதிரி அமையும் இவ்வரிகள் கதை விளக்கத்திற்கு உரமும் வளமுஞ் சேர்க்கின்றன.

**சேவக மார்களே எந்தன் சொல்லை**
**சீருடனே கேளும்**
**சிப்பாய் மார்களே எந்தன் சொல்லை**
**சிந்தாமலே கேளும்!**

என அமையும் பகுதிகள் ஒரே தொடர் இரு வரிகளில் அமையும் நாட்டாரியல்புக்கு நல்லுதாரணமாகும். தவிர சில இடங்களில் ஒரே ஓசையிலமைந்த மிகுந்த வேறு பாடில்லாத வரிகள் மடக்கி வருவதும் காணலாம்.

**ஏழை மனிதனே என்னுடை படைகளை**
**என்ன வேலை செய்தாய்**
**பஞ்ச மனிதனே என்னுடை படைகளை**
**பாழ்படுத்திப் போட்டாய்!**

என்பது மேற்கண்ட நிலைக்குரியனவாகும். "சிங்கங்கள் கதறி வெட்டிக் கெலித்திடும் சையித்தூனென் பேரு; யானைகள் கிழித்திட வெட்டிக்கெலித்திடும் சையித் தூனென் பேரு" என்று கதைத் தலைவி சைத்தூன் மாவீரர் முஹம்மதனிபுக்குத் தன்னிலையுரைக்கும் பகுதியும் மீண்டும் வரும் இசைத் தொடருக்கு இனிய எடுத்துக்காட்டாகும்.

மந்திர தந்திர நிகழ்ச்சிகள் நாட்டுப்புறக் கதைப் பாடலின் நாடியாக நிலை பெறுவதாகும். சைத்தூன் கிஸ்ஸாவில் இவை பெரும்பாலும் வசனக் கதையில் எடுத்தாளப்படுவதைக் காணலாம்.

சமுத்திர ராஜாவும் குதிரைகளின் அரசனுமான ஷாபரியின் மகள் கரியாபரி, மந்திர தந்திர ஆற்றல் மிக்கவளாக அறிமுகமாகின்றாள். செண்டூல ராஜனின் சோலையில் முகம்மதனிபு மெய் மறந்து தூங்க, காவல் படைகள் வந்து சூழ்ந்த செய்தியை அவள் உரைத்து மறைகிறாள். இம்ரானின் மாளிகையில் கட்டிலில் கால் கை முறிந்து கவலைப்பட்டுக் கொண்டிருந்த அனீபை, தன்னாட்டிற்குக் கட்டிலோடு தூக்கிச் செல்லும் காட்சி சுவை பயப்பதாகும். காட்டரசன் பீவிஅனீபாவை தாக்கிக் காயப்படுத்த வானவர் ஒருவர் வந்து அவரைக் காப்பாற்றி மதீனாவிற்கு அழைத்துச் செல்வதும் குறிக்கத் தக்கது.

சூனியக்காரி காணும் கனவு, இறைத் தூதர் எம்பெருமான் அலிப்புலியாருக்கு அனீபு இருக்கும் இடத்தை அறிவித்தல் போன்ற நிகழ்ச்சிகளும் மீமானிடச் செய்கைகளுக்குச் சான்றாக அமைபவையாகும்.

சமயசமூக மரபின் தாக்கம் நாட்டார் பாடல்களில் இடம் பெறுவது இயல்பு. கற்பனைக் கதைப் பாடலாயினும் சைத்தூன் கிஸ்ஸாவில் சமய மரபுகள் நெறி வழுவா அறநிலையில் குறிப்பிடப்படுவது குறிக்கத்தக்கது. அனீபா அம்மா இறைவனைத் தொழுது இறைஞ்சுதல், சூனியக்காரி கிழவி இறைவனிடம் இரந்து நிற்றல், சைத்தூன் இறைவனைப் புகழ்ந்தேற்றல், காவலர் எழுவர் அனீபிடம் சலாம் உரைத்தல் முதலியவை இஸ்லாமிய மார்க்க மரபுகளைச் சுட்டுவன.

“புவி நடுங்கும் அலிமகன்; ஆதி தூதரின் பேரன் நான்” என அனிபு சைத்தூனுக்குப் பதிலிறுத்தல் குலஉறவு மரபுச் சுட்டலைக் காட்டுகின்றது. அறநெறி காக்கும் போரில் உயிர்விடுவோர் உயர்சுவனத்திற்கு உரிமை யுடையவராவார் என்ற கருத்தும் சில இடங்களில் உணர்த்தப்படுவது காணலாம். இவையெல்லாம் இயல் பான நாட்டுப்புறப் பாவியமாக சைத்தூன் கிஸ்ஸாவை காட்டி நிற்பன.

போரிலக்கியங்களில் சினம் சிந்தும் வஞ்சினவுரைகள் விஞ்சி அமைவது இயல்பு. போர் எழுச்சிக்கு முன்னும் பின்னும் அமையும் இவை தன்மான வீரத்தைக் கிளறச் செய்யும் வகையில் அமையும். ஆக்திரவுணர்வில் அரும்பி வரும் வீரவுணர்வில் அழுந்தும் வெஞ்சின மொழிகள் விறுவிறுப்பையூட்டி நிற்கும். உதடுகளும் மீசையும் படபடக்க விழிகள் கோபக்கனல் சொரிய முகம்மதனிபா போர் ஆற்றி நிற்கும் காட்சிகளில் வஞ்சின வுணர்வு வெளிப்படுவது காணலாம்.

மீசை முளைத்த ஆண் பிள்ளையானால்
வரலாஞ் சண்டைக்கு
பேடிகளா யிருந்தால் திரும்பிப்
பேசாமல் போங்கள்!

விழிகள் சிவக்க, பல்லை நறநறவென்று கடித்து, தேரஜன் முஸ்லிம் படைகளை நோக்கி வீசும் வீர மொழிகள் இவை. நெருப்பைப் போல், முருக்கம் பூப்போல் கண்கள் சிவக்க வஞ்சின முரைக்கிறான் மன்னன் சுஹூர் பாத். இதுபோன்ற சினவுரைகள் பல இடங்களில் இடம் பெறுவது நோக்கத்தக்கது.

அரபுக் கதைகளின் அதீதக் கற்பனைச் சாயல் சைத்தூன் கிஸ்ஸாவில் மிகுந்துள்ளதால் வரலாற்றுப் பாத்திரங்கள்கூட கற்பனைப் பாத்திரங்கள் போல் சித்திரிக்கப்படுகின்றன. எனினும் அநீதியைத் தடுத்து, தர்மத்தை நிலைநாட்டும் பாவிகம் கதையுடன் இரண்டறக் கலந்துள்ளது நோக்கத்தக்கது.

கதைத் தலைவர், தலைவியர் கற்பனைப் பாத்திரங்களாயினும் போர்க்கதைப் பாடலின் லட்சியத்திற்குத் தோய்வின்றிப் போராற்றிச் செயல் திறனை வெளிப்படுத்தியமைகிறார்கள். தேங்காய்ப்பட்டினம் பெரும் புலவர் குஞ்சுமூசாவின் சல்கா, செய்யிதத்துப் படைப் போர் காப்பியங்களில் வரும் நாயகிகள் போல் சைத்தூனும் தந்தையைக் கூட எதிர்த்துப் போரிடத் துணிந்து பாசத்தை விஞ்சிய கொள்கைப் பற்றினை உறுதிப்படுத்துகிறாள்.

பெண்களுக்கு இஸ்லாத்தில் அளிக்கப்படும் சுதந்திரத்தின் மாதிரிப் பெண்ணாகவும் அமைகிறாள். மொத்தத்தில் சைத்தூன் கிஸ்ஸா, சிந்தனைக்கு விருந்தாகும் சத்தான ஒரு நாட்டுப்புற வீரக் கதைப் பாடலாக அமைவது காணலாம்.





# 6. தம்பிமார் கதை

வரலாற்றடிப்படையில் எழுந்த ஒரு நாட்டுப்புறப் போர்க்கதைப் பாடல் தம்பிமார்க்கதை. இது தென் திருவிதாங்கூரில் நடந்த ஒரு உள்நாட்டுப் போரினைக் கதைப்பொருளாகக் கொண்டமைவதாகும்.

திருவிதாங்கூர் தெக்கன்பாட்டு வகையைச் சார்ந்த இக்கதைப்பாடலின் இணை வடிவமாகக் கருதப்படுவது ஒட்டன்கதை எனும் கதைப்பாடலாகும். மலையாளத்தில் வழங்கப்படும் எட்டுக்கூட்டத்து தம்புரான் கதை, அனந்த பத்மநாபன் பாட்டு, கேரளவர்மா கதை, புதுவாதைப் பாட்டு, வலியதம்பி குஞ்சுதம்பி கதை, மார்த்தாண்ட வர்மா மகாத்மியம் ஆகிய கதைப்பாடல்களும் இதனோடு கதைத் தொடர்புடையனவாகும்.

நாஞ்சில் நாட்டினை உள்ளடக்கிய சேரநாட்டுப் பகுதியை வேணாடு என்பர். இப்பிரதேசத்தைப் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் (1731-1758) ஆட்சி செய்தவர் மார்த்தாண்டவர்மா. இவர் அரசிய லாற்றலும் வெந்திறல் வீரமுமிக்கவர். உள்நாட்டு வெளிநாட்டுப் படையெடுப்புகளை வெற்றித்திறத்துடன் எதிர்த்து நின்றவர்.

மன்னர் மார்த்தாண்டவர்மா மருமக்கள் தாய் உரிமை வழி தமது மாமனார் ராமவர்மாவிடமிருந்து அரசுரிமை பெற்றவர். உரிமை பாதிக்கப்பட்ட ராம வர்மாவின் மக்களான பத்மனாபன் தம்பியும் ராமன் தம்பியும் மன்னரைப் பலவாறு மறைமுகமாக எதிர்க்கத் தொடங்கினர்.

முன்னரே மார்த்தாண்ட வர்மாவின் எதிரிகளாகக் கருதப்பட்ட எட்டு வீட்டுப் பிள்ளைமார்களும், மாடம்பிகளும், யோகத்தாரும் தம்பிமார்க்குத் துணை நின்றனர். அரசியல் திறத்தாலும் போரியல் சூழ்ச்சியாலும்

தம்பிமார்களை மன்னர் வென்ற வரலாற்றினைத் தம்பிமார் கதைப்பாடல் சுவைப்படச் சித்தரிக்கின்றது.

தம்பிமார் கதை வில்லுப்பாட்டாகப் பாடுவதற்கேற்ற வடிவங் கொண்டது. ஒரே சீராகவன்றிப் பெரிய, சிறிய வரிகளால் நூல் யாக்கப்பட்டுள்ளது. மொத்தம் ஆயிரத்து எண்ணூற்று எழுபத்தைந்து வரிகள் உள்ளன. நூலின் இறுதியில் சில பாடல் வரிகள் விடுபட்டுள்ளனவாகத் தெரிகிறது. கந்தன் வணக்கத்துடன் கதை தொடங்கப் பெறுகிறது. இப்பகுதியில் கதைப்பாடல் பெயர் விளக்கம் பெறுகிறது.

> **தானென்று ஆண்டிருந்த**
> **தம்பிமார் கதையைப்பாட**
> **பொன்னெனும் கிருட்டிணத்தாளம்மை**
> **புகழ்பெற வளர்ந்த செல்வர்**
> **மன்னரால் கொலைகளப்பட்ட கதையை**
> **வளம்பெற கூறலுற்றேன்!**

இறுதியில் கயிலை மகாதேவர் தரிசனத்துடன் நூல் முடிவடைகிறது. தமிழும் மலையாளமும் ஒட்டுறவாடி கலந்த மணிப்பிரவாள நடை நாஞ்சில் நாட்டுக் கலப்பு மொழியின் மணம்நுகர ஏதுவாகின்றது. பாடல்மொழி பாமரர் மொழியாக இருமொழிக் கலப்புடன் அமைவது தெக்கன் பாட்டுகளை நினைவுறுத்துகிறது. ஆசிரியர் பெயரோ நூலெழுந்த காலமோ நூலெங்கணும் காணப் படவில்லை. நூலிறுவாயில் "புதன்கிழமை முடிந்தது" என்ற குறிப்பு மட்டும் உள்ளது. இதனை அரங்கேற்றப் பெற்ற காலத்தைப் பற்றிய குறிப்பின் சிதைந்தது போக எஞ்சிய பகுதியாகக் கருதலாம். பல்வேறு நபர்க்ளால் பாடப்பெற்ற மொழி வழக்கு, சிதைந்தும் மருவியும் காணப்படுகிறது. இந்நிலை நாட்டார் நினைவில், நாவில் நின்றுலாவும் வாய்மொழிக் கதைப்பாடலாக, தம்பிமார்க் கதையைக் காட்டி நிற்கின்றது.

தம்பிமார் கதையின் கதைத்திட்டம் திருவிதாங்கூர் அரசர் ராமவர்மாவின் வரலாற்றுடன் தொடக்கம்

பெறுகிறது. சுசீந்திரம் கோவிலில் மார்கழித் திருவிழா நடத்தும் பொருட்டு ராமவர்மா தம்பிரான் பெரும்படைச் சுற்றம் சூழச் சுசீந்திரத்தில் தங்கியிருக்கிறார். பஞ்சத்தின் கொடுமை காரணமாக வடநாட்டிலுள்ள அயோத்தி நகரிலிருந்து கிருட்டிணன், அபிராமி என்னும் அண்ணன் தங்கையர் சுசீந்திரம் வந்தடைகின்றனர்.

மன்னரைக் கண்டு வணங்கி நின்ற அண்ணன் தங்கையரில் மங்கை நல்லாள் அபிராமியின் அழகு அரசலரைப் பெரிதும் கவர்கின்றது. அரசரின் விருப்பத்திற் கிணங்க ராமவர்மா - அபிராமியின் திருமணம் நாகர்கோவிலில் நடந்தேறுகிறது. திருவிதாங்கூர் மரபு வழி அபிராமி, கிருட்டிணத்தாளம்மை தம்புராட்டி என்றும் கிருஷ்ணன், கொச்சுமாறப்பிள்ளை என்றும் திருநாமம் பெறுகின்றனர். இல்வாழ்வும் நல்வாழ்வாக இனிது நடைபெறுகிறது.

கிருட்டிணத்தாளம்மை மகாராணி ஆண்மக வொன்றினைப் பெற்றெடுக்கிறாள். மன்னரும் மகிழ்ச்சி யுற்று அரண்மனைச் சோதிடரை அழைத்து வாழ்வுப் பலன் கணிக்கச் சொல்லுகிறார்.

உத்திரத்தில் பிறந்த பிள்ளை
யோக முண்டு தம்பிரானே
பக்கமும் கிரகமும்
பழுதில்லை காண் தம்புரானே!

என்று கூறும் சோதிடன் மூன்றாவது பிறக்கப் போகும் பெண்மகவால் சகோதரர்க்கு அழிவு வரும் என்கிறான். அக்குழந்தைக்கு வலியதம்பி என்று பெயர் சூட்டப் பெறுகிறது. இரண்டாவதாக ஓர் ஆண் மகவினை அரசியார் பெற்றெடுக்கிறார். அக்குழந்தை குஞ்சு தம்பி என அழைக்கப்படுகிறது.

வலியதம்பிக்கு வயது மூன்றாகும் தருணத்தில் அம்மை தம்புரான் அழகான ஒரு பெண் மகவினைப் பெற்றெடுக்கிறார். மன்னரும் முறைப்படி சோதிடரை

அழைத்து ஜாதகப்பலன் கேட்கிறார். இப்பெண் மகவிற்கு வயது பதினாறையெட்டும்போது மன்னர் அம்மை வந்து இறப்பெய்துவார் என்றும், பின்னர் அரசுரிமை பெறும் இளவரசர் இவளைப் பெண் கேட்க, சகோதரர்கள் மறுத்துரைப்பார் என்றும், இதனால் அரசர், தம்பிகளின் உரிமையைப் பறிப்பார் என்றும் உரைக்கிறார். தொடர்ந்து வேற்று நாட்டவர் உதவியுடன் அரசரை எதிர்த்துப் போர் புரிய, அவர் தோற்க, சமாதான ஒப்பந்தம் நிகழுமென்றும், பிறகு அரசர் தம்பிமார்களைத் திருமுகங் காண அழைத்துத் திட்டமிட்டு கொலை செய்வார் என்றும் சோதிடர் பலனுரைத்துச் செல்கிறான். பெண் குழந்தைக்குக் கொச்சு மாடம்மை எனப் பெயரிடப் பெறுகிறது.

தம்பிமார் இருவரும் கல்வி, கேள்விகளில் பயிற்சி பெறத் தொடங்குகின்றனர். சிலம்பம், களரிப் பயிற்சி போன்ற வீர விளையாட்டுகளும் பயிற்றுவிக்கப்படு கின்றன.

மல்ப்போரும் கைப்போரும்
வளமொடு பூட்டுகள் பூட்டுற முறையும்
கைமுறைகள் பூட்டுற முறையும்
காலுகள் மாறி தட்டுற முறையும்

தம்பிமார்களுக்கு ஆசானால் கற்பிக்கப்படுகின்றன. கூடவே குதிரைப் பயிற்சியும் யானைப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. பல்கலைப் பயிற்சியும் அறிவும் பெற்ற தம்பிமார்களுக்குத் தந்தையால் சில அரச அதிகாரப் பொறுப்புகள் அளிக்கப்பட, திறமையுடன் அவர்களும் செயலாற்றத் தொடங்கினர்.

வழக்கம் போல ராமவர்மா ராஜா தை தீர்த்த மாட பெரும்படைச் சுற்றஞ் சூழ வாலியான்பாறைக்குச் சுற்றுலா செல்கிறார். மாமாங்கத் தீர்த்தமதில் மகிழ்ச்சி யுடன் நீராடித் திரும்பி வரும் வேளையில் இரணியல் சிங்கநல்லூரில் அம்மை நோயால் பீடிக்கப் பெறுகிறார்.

பதினொன்றில் கொல்லும் வித்தும்
பதினெட்டில் கொல்லும் வித்தும்
பன்னிரண்டில் கொல்லும் வித்தும்
பதினாறில் கொல்லும் வித்தும்!

அணல்வாரி மணல்வாரி அருச்சுவாரி தூத்துவாரி அரசரைத் தாக்க இறுதியையுணர்ந்த அரசர் ஆற்றிங் கலிலுள்ள மருகர் மார்த்தாண்ட வர்மாவை அழைத்து வரக் கூறுகிறார். அரசுரிமைக்குரிய செங்கோலையும் முத்திரையையும் மருமகனிடத்தில் அளித்து "எனது மக்களும் சுற்றத்தாரும் ஏதேனும் தவறிழைத்தாலும் மன்னித்து உறுதுணையாய் அமைதல் வேண்டும்" என்று இறுதிமொழியுரைத்து மரண மெய்துகிறார். ராமவர்மா வின் விருப்பப்படி மார்த்தாண்டவர்மா திருவிதாங்கூரைத் திறமுடன் ஆட்சி செய்யத் தொடங்கினார்.

ஒருநாள் மன்னர் தாம் நாடாளும் நாஞ்சில் நாட்டுப் பகுதிகளில் தமது படை பரிவாரங்களுடன் பயணஞ் சென்றார். அவ்வேளையில் வள்ளியாற்றில், அழகுமங்கையொருவள் எழில்கோலம் விளங்க நீராடி நின்றிருந்தாள். ஏவலரை ஏவி 'யார் அந்த தேவதை' என அறிந்து வரக் கட்டளையிட, அவர்கள் "தம்பிமார்களின் தங்கை கொச்சுமாடம்மையே அந்தக் கொடியிடையாள்" எனக்கூறி நிற்கின்றனர். காதலுணர்வு கரைகடந்த அரசர் பத்மனாபபுரம் அரண்மனைக்குச் சென்றதும் உடனே தம்பிமார்களை அழைத்து வர ஆள் அனுப்புகிறார். தம்பிமார்களை மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்த மன்னர், மாமன்மகளாக, முறைப் பெண்ணாகப் பிறந்த,

வரிசையுள்ள சிங்க நல்லூர் படைவீட்டில்
வந்துதித்த கொச்சுமணித் தங்கை
நிங்களோடு உடன் பிறந்த
நேசமுள்ள தங்கையரை
நேசமுடன் பரிவட்டங்கள் கொடுக்க
நிச்சயமாய் தரவேணுமென்று கல்பித்தார்!

துருவத்தில் பிறந்தோர்க்கு இல்லத்தில் பெண் கொடுப்பது வழக்கமில்லையெனத் தம்பிமார்கள் தம்புரானின் கட்டளையை மறுத்துரைக்கின்றனர். ஆத்திரமுற்ற அரசர் "இனி இங்கு நில்லாதீர்கள்; என் முகத்தில் முழிக்காதீர்கள்" என்று கூறித் தம்பிமார்களைத் துரத்திவிடுகிறார்.

நாட்கள் சில நகர்ந்தன. தம்பிமார்களை அவமானப் படுத்தத் திட்டமிட்ட மன்னர், காவலரை அழைத்துத் தனது மாமா ராமவர்மாவின் பள்ளியறைக் கட்டிலையும் மெத்தையையும் தம்பிமார் அரண்மனையிலிருந்து எடுத்துவர ஏவுகின்றார். ஏவலர்கள் பள்ளி மெத்தையை எடுத்துச் செல்லும் வேளையில் செய்தியறிந்த குஞ்சு தம்பி, ஆவேசத்துடன் சென்று அதைத் தடுத்து, கத்தியால் கண்டதுண்டமாய்க் கிழித்து எறிகிறார். செய்தியறிந்த மார்த்தாண்டவர்மா மேலும் கோபமுற்று, தம்பிமார்களை அரசு அதிகாரப் பொறுப்பிலிருந்து நீக்கி உத்தரவிடுகிறார்

கிருட்டினத்தாளம்மை தம்புராட்டிக்கும் கொச்சு மாடம்மைக்கும் வழங்கப்பட்ட சலுகைகளும் ரத்து செய்யப்படுகின்றன. மேலும் நாஞ்சில் நாட்டிலிருந்தால் மன்னர் ஆத்திரமுற்றுக் கொடுமை செய்ய முனைவார் என நினைந்த தம்பிமார்கள்,

மறுதுருவம் தனிலே
மாறிப்படை கொண்டுவந்து
மாறிப்படை கொண்டுவந்து
மன்னவரை துரத்திவெட்டி
படைபொருதி வெற்றிகொண்டு
பறித்த வகை எடுக்க வேணும்
பறிக்கவேணும் எடுத்தவகை
பாருலகை ஆளவேணும்
மூன்று நாள் ஆனாலும் இந்த
ராச்சியத்தை ஆளவேணும்!

என்று உறுதியுரைத்து, தாயார் தங்கையுடன் நாடு விட்டுச் செல்கின்றனர். சுசீந்திரத்தில் ராமகிருட்டிணக் குருக்

களிடத்தில் தாயார், தங்கையை அடைக்கலமாக ஒப்படைத்துவிட்டு இருவரும் தங்களது நம்பிக்கைக்குரிய தோழர்களுடன் தேவையான நிதிக்குவியல்களுடன் பாண்டிய நாட்டிற்கு, பிரயாணமாகின்றனர்.

பாண்டிய நாட்டில் படைத்தளபதி அழகப்ப முதலியாரைச் சந்தித்து, கொண்டு வந்த பரிசுக் குவியல்களை அளித்துத் தங்களுக்கு நேர்ந்த துன்ப வரலாற்றினை எடுத்துரைத்தனர் தம்பிமார்கள். பெரும் பேராசைக்காரரான அழகப்ப முதலியார் நாஞ்சில் நாட்டுச் செல்வக் களஞ்சியத்தில் ஆசை வைத்து, திருவிதாங்கூர் அரச பதவியை மீட்க உதவி புரிவதாகத் தம்பிமார்க்கு உறுதியளிக்கிறார். உடனே பெரும்படையும் திரட்டப் படுகிறது.

**கம்பளத்தார் ரெட்டியரும்**
**கனத்த பட்டாணியுமாய்**
**வன்னியரும் சென்னியரும்**
**வடநாட்டு தூதப்பனும்**
**கடல் வண்ணம் நிகரில்லா**
**காலாட்கள் சேனைபடையும்**

சேர்ந்து திரண்டு அழகப்ப முதலியார் தலைமையில் தம்பிமார்கள் முன்னிலையில் திருவிதாங்கூர் நோக்கிச் செல்கிறார்கள். கடுக்கரை, திட்டுவிளை, புத்தேரி, வடசேரி ஊர்கள் முதலியார் படைகளால் கொள்ளையிடப் படுகின்றன. போதாக்குறைக்கு, சுசீந்திரம் கோவிலிலும் கொள்ளையடிக்கிறார்கள். வழிநெடுகக் குண்டு முழக்கி இரணியலைத் தாண்டிப் படைகள் வந்து கொண்டிருக் கின்றன.

அந்நியர் ஆதரவுடன் ராமவர்மாவின் மக்கள் படையெடுத்து வருவதையறிந்த மார்த்தாண்ட வர்மா உடனே தளவாய் கொச்சு ரவிப்பிள்ளை, மந்திரி கிருஷ்ணன் கேசவன் முதலியவரை அழைத்து, படை யெழுச்சிக்கு ஏற்பாடு செய்யக் கூறுகிறார். திருவிதாங் கோட்டில் சந்தித்து

இரு படைகளும் எதிர்த்துப் பொருதுகின்றன. சிறிது நேரத்தில் திருவிதாங்கூர் படை எதிர்த்து நிற்கும் ஆற்றலிழந்து சிதறத் தொடங்கியது. அரசர், அவர்களைப் பத்மனாபுரம் கோட்டையில் ஒன்று திரட்டி மீண்டும் பாண்டியப் படைகளை எதிர்க்கச் செய்கிறார்.

கோட்டையிலிருந்து கோடையிடிபோல பீரங்கி குண்டுகள் பறந்து சென்று முதலியார் படைகளைத் தாக்க, அவர்கள் ஒவ்வொருவராக மடியத் தொடங்கினர். இவ்வேளையில் திருவிதாங்கூர் படையின் முன்னணித் தலைமை வகித்து நின்ற மாடம்பிமார்கள் வஞ்சகச் சூழ்ச்சியுடன் திடீரென்று பின்வாங்கத் தொடங்கினர். எதிர்ப்படைகள் கோட்டையை முற்றுகையிடத் தொடங்க, மன்னர் தமது காவலர் உதவியுடன் குதிரையில் தப்பி யோடத் தொடங்கினார்.

செய்தியறிந்த குஞ்சுதம்பி குதிரையில் ராஜாவைத் தொடர்ந்து சென்று தடுத்து வெட்டுவதற்கு முயலுகிறார். அங்கு வந்த அழகப்ப முதலியார், குஞ்சு தம்பியைத் தடுத்து நிறுத்துகிறார். அங்கு விரைந்து வந்து சேர்ந்த வலியதம்பி, அரசரை வெட்டாமல் விட்டது ஏன் என வினவ, அதுபற்றிய விவாதம் நடக்கிறது. இவ்வேளையில் மார்த்தாண்டவர்மா கோட்டையிலிருந்து பெரும் நிதிக் குவியலை வரவழைத்து முதலியாருக்குக் கொடுத்து, சமாதான ஒப்பந்தம் செய்து வைத்து, தம்மைக் காப்பாற்ற முறையிடுகிறார்.

இரு தரப்பினரையும் அழைத்து நீலகண்டர் கோயிலில் அழகப்ப முதலியார் சத்தியஞ் செய்யுமாறு கூறுகிறார். மன்னர் மார்த்தாண்டவர்மா தந்திரமாகக் கைவிரல்களுக்கிடையில் ஈயொன்றினை மறைத்து வைத்து,

**ஈயுயிர் உள்ளமட்டும்**
**இவர்க்கு ரண்டகஞ் செய்வதில்லை**

என்று சத்தியஞ் செய்து விட்டு மறுகணம் அந்த ஈயினை யாருமறியாமல் நசுக்கிக் கொன்றுவிடுகிறார். தம்பி

மார்களோ யாதுமறியாமல் கள்ளம் கபடமின்றி ஒப்பந்தத்தை ஏற்று, "உயிர் உள்ள வரையில் மன்னர்க்கு மாறு செய்வதில்லை" என உறுதியுரைக்கின்றனர். ஒப்பந்தப் படி தம்பிமார்களுக்குரிய அதிகாரங்களும் சலுகைகளும் திரும்ப வழங்கப்படுகின்றன. அழகப்ப முதலியாரும் அரசரிடத்தும் தம்பிமார்களிடத்தும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டுச் செல்கிறார்.

மாற்றாருடன் இணைந்து மலையாள நாட்டை எதிர்க்கவும் கொள்ளையிடவும் தம்மை வெட்டிக் கொலை செய்யவும் முயன்ற தம்பிமார் மீது மார்த்தாண்ட வர்மாவுக்கு ஆத்திரமும் கோபமும் அதிகரித்து வந்தன. தம்பிமார்களைத் தந்திரத்தில் அழைத்து அழித்துக் காட்டுவ தற்குரிய ஆலோசனையுடன் அரசர் நாகர்கோவில் அரண்மனைக்குப் பிரயாணமாகிறார். தம்பிமார்களுக்கு அன்பான அழைப்பும் விடுகிறார்.

**அரைதனிலே பொன்னரஞாண்**
**ஆளியிட்ட முடுவுகளும்**
**கச்சப்பிறம் கைமுடுவு**
**கச்சயிட்ட வேட்டிகளும்**
**பொன்னுருவி பொட்டுமிட்டு**
**புனுகு நன்றாய் ஒழுகப்பூசி**
**மணிமார்பில் சந்தனமும்**
**வாடையது கமகமென**

மணக்க, வலியதம்பியும் குஞ்சு தம்பியும் மன்னர் திருமுகங் காண இரணியல் வீட்டிலிருந்து புறப்பட்டுச் செல்கின்றனர். செல்கின்ற பாதையில் கடமையுணர்வு மிக்க குஞ்சு தம்பி, தாழக்குடியில் வருவாய் சேகரிப்பு சம்பந்தமாகச் செல்கிறார். வலியதம்பி அரசரைக் கண்டு அடிபணிந்து நிற்க, மகிழ்ச்சியுடனழைத்து அருகில் அமரச் செய்கிறார் அரசர். செயற்கையான புன்னகையுடன் வலியதம்பியிடமிருந்த வாளினை வியப்புடன் நோக்கி அதைத் தருமாறு கேட்கிறார். தம்பியும் மகிழ்ச்சியுடன்

வாளினைக் கொடுக்க, அரசர் அதைத் திடீரென ஆத்திரத்தில் தூக்கியெறிகிறார். மன்னர் சமிக்ஞை செய்ய வாயில்களும் அடைக்கப்படுகின்றன.

மன்னரின் அச்செயலைச் சற்றும் எதிர்பார்க்காத வலியதம்பி ஆவேசத்துடன் எழ, "மார்கழி நெருங்கி விட்டது; சுசீந்திரம் கோயில் திருவிழா நடத்தப்பெற வேண்டும். ஆதலின் அரை நாளிகைக்குள் கொள்ளை யிட்ட பொருட்களைக் கொண்டு சேர்க்க வேண்டும்" என்று கட்டளையிடுகிறார் மார்த்தாண்டவர்மா. பொருட்களையெல்லாம் அழகப்ப முதலியாரின் படைகள் கொண்டு சென்றதாகவும் தமக்கு அதில் பொறுப்பில்லை யென்றும் வலியதம்பி உறுதியாக உரைக்கிறார்.

அரசருக்கும் வலியதம்பிக்கும் வாக்குவாதங்கள் நடக்க, படைவீரர்கள் தம்பியைச் சூழ்ந்து கொள்கின்றனர். தம்பி தனித்து நின்று போராற்றித் தளர்வடைகிறார். இத்தருணத்தில் மன்னர் தம்பியைக் கோரமாக வாளால் வெட்டிக் கொலை செய்துவிடுகிறார். செய்தியறிந்த குஞ்சு தம்பி துடிதுடித்துக்கொண்டு விரைந்து வருகிறார். உறை வாளை உருவி வீறுகொண்டெழுந்து அரசரை வெட்ட முயல்கிறார். வாள் கோட்டைவாசலில் தட்டி முறிந்து விடுகின்றது. எனினும் எதிர்த்து வந்த வீரர்களை,

மல்போரும் வர்ணத் தட்டுகளும்
வாய்த்த பொறி தட்டுதட்டி மடக்கினார்
நாலாறு நாளிகையாகவே
நன்றியுடன் போராடி தட்டினார்

இறுதியில் தளர்வுற்றிருக்கும் நேரத்தில் மன்னர் குஞ்சு தம்பியையும் கோரமாக வெட்டிக் கொலை செய்துவிடுகிறார்.

தம்பிமார்கள் இறப்பெய்திய செய்தியை அறிந்த தாய், தங்கை, மாமன் மூவரும் நீங்காத துயரத்தால் ஏங்கித் துடிக்கின்றனர். அடுகளம் கண்ட ஆடவர்கள் படுகளந்

தன்னில் பரிதாபமாகக் கொலையுண்டு கிடக்கும் காட்சி கண்ட தாயார்,

**உண்டோதானிப்படி**
**கொல்வதும் முறைமையோ?**
**உடையவனார்க்கு**
**யேற்குமோ யிதுதான்?**
**பகைத்த பகைதான்**
**செய்தாலும் யிப்போ**
**பாராளும் மன்னர்**
**கொல்வதும் நீதியோ?**

என வினவி வேகமுடன் வேதனையுற் றழுகிறாள். இனி வாழ்வில் தஞ்சமில்லை என்பதை யுணர்ந்த மூவரும் ஒவ்வொருவராக, தன்மானத்துடன் உயிரை அக்களத்தில் மாய்த்துக் கொள்கின்றனர். இவ்வாறு முடிவு பெறுகிறது தம்பிமார் கதை.

தம்பிமார் கதை இயல்பான பேச்சுத் தமிழில் அமையும் வாய்மொழிப் பாட்டாகும். நாஞ்சில் நாட்டாரின் மலையாளங் கலந்த தமிழ் கலப்பு மொழியே கதைப்பாடலின் மொழியாக அமைகிறது. வட்டார வழக்கியலின் தன்மைக்கேற்பச் சொற்கள் சிதைந்தும் மருவியும் அமைவதும் நோக்கத்தக்கது. குலை (கொலை), குடுக்கல் (கொடுக்கல்), கேள்க்க (கேட்க), மகிள்ந்து (மகிழ்ந்து), களுவி (கழுவி), வளந்தாரே (வளர்ந்தாரே), ஏளான (ஏழான), அஞ்சு (ஐந்து), ஆயான் (ஆசான்), லெக்கம் (இலக்கம்), மலப்போர் (மற்போர்), ஆளி (ஆழி), சுத்தி (சுற்றி), வரவளைத்து (வரவழைத்து), வாள்க்கை (வாழ்க்கை), பீசாத்தி (பிச்சாத்தி), தற்கமிட்டு (தர்க்கமிட்டு), அவத்தம் (அபத்தம்), ஊளி (ஊழி). கோவித்து (கோபித்து), குதவளை (குரல்வளை), விளுந்தது (விழுந்தது), அளுதாளே (அழுதாளே), மோச்சம் (மோட்சம்), பளி (பழி), தொளுது (தொழுது), புகள் (புகழ்) போன்ற சொற்கள் எழுத்து மாறு பாட்டால் அமையும் வழக்கியல்பைக் காட்டுவனவாகும்.

குஞ்சு, கல்பித்த, கவணி, முண்டு, கெற்ப்பம், ஆயான், பாசை, பம்மி, கச்சப்பிறம், சேவித்து, ஏலா, குஞ்சுங்கள், பறஞ்ஞுது, கரயாளர், கைவசம், கூடிக் காழ்ச்சை, தற்கம், நமஸ்கரித்து, கல்ப்பனை, அவிடம், சதிவு - முதலிய சொற்கள் மலையாளக் கலப்பு நிலைக்குக் காட்டாக அமைவனவாகும். நாடான நாடதிலே, தேசமான தேசத்திலே, அந்த னேரம் சோதிரியை, அந்தத் தொழில் முறையானது, அங்கேயுள்ள பெரும்படையும், அந்தக் கோட்டை, என்று கடயாலதொட்டு, - போன்ற தொடர்கள் உரைநிலைத் தாக்கம் பெற்ற கதையுரைத் தொடர்களாகும்.

நாட்டார் பாடல்களில் ஓசைநயம் மிகுந்த ஓர் கதைப் பாடலாகத் தம்பிமார் கதை அமைவது குறிப்பிடத் தக்கது. எதுகை, மோனை, இயைபு, அந்தாதி, மீண்டும் மீண்டும் வரல் முதலிய இயல்புகள் கற்பார் நெஞ்சில் இசைநிலையை எழுப்பி நிற்பனவாகும்.

**அருமையாய் அவளை நோக்கி**
**அரச மன்னரேது சொல்வார்**
**உருமயாய் யிங்குவந்தாய்**
**ஊரேது பேர் தானென்ன?**

எனும் பகுதி எதுகை மோனையைத் துலக்கி நிற்பதாகும். பெரும்பாலான வரிகள் அந்தாதி அமைப்பில் பாடப் பெறுவது கதைப்பாடல் இன்பத்திற்கு வழிகோலுவதாகும். ஒரு வரியின் இறுதித் தொடரே அடுத்த வரியின் தொடக்க வரியாக அமைவது மலிந்து அந்தாதிச் சந்தத்தை மிகுவிப்பது காணலாம்.

வலங்கைக்கே வந்தபடை
தெக்குக் கோட்டை கீளக்கோட்டை
தெக்குக் கோட்டை கீளக்கோட்டை
தென்னவனார் தன்படையும்!

தம்பிமார் - மார்த்தாண்டவர்மா படைகளின் போர் நிலையுரைக்கும் இப்பகுதி ஒரே தொடரே மீண்டும் வந்து

நாட்டாரிலக்கிய இயல்பைச் சுட்டியமையும் நிலைக்கு உதாரணமாகும். வாலவாஞ்சி மார்த்தாண்டர், குஞ்சுதம்பி, வலியதம்பி பல்ப்பனாபுரமதிலும் பாறசாலைதனிலும், மாறிப் படை கொண்டு வந்து சிங்கநல்லூர் படை வீட்டில் போன்ற கதைத் தொடர்கள் பல இடங்களில் மீண்டும் வரும் இயல்புக்குச் சான்றாக அமைவனவாகும். ஒரே தொடரே அடுத்த வரியில் தொடர்ந்து வரும் இயல்பும் சில இடங்களில் உள்ளன. இவ்வியல்புகள் தம்பிமார் கதையைப் பாடுவதற்கேற்ற வாய்மொழிப் பாட்டாக உறுதிப்படுத்தியமைகின்றன எனலாம்.

உவமைகளும் பழமொழிகளும் பாமரர்க்குச் சுவை பயப்பதோடு கருத்து விளக்கக் கருவிகளாகவும் அமைவன. போர் வருணனைப் பாடல்களில் இவை இன்றியமையாத கூறுகளாக உள்ளன. தம்பிமார் கதையில் பல்வேறிடங்களில் உவமைகள் நயம்படக் கையாளப் படுவது காணலாம். தம்பிமார்கள் மதப் புலியாக, சினப்புலியாக, பல இடங்களில் ஒப்புமை செய்யப் படுகின்றனர். அரசரை எதிர்த்து நிற்கும் தம்பிமாரைப் பார்த்து, "ஆனையும் ஆனையும் உரசும்போது, அதிலிருந்த கொசுவுக்கு அழிவு வருவது போல் நாட்டாருக்கும் அழிவு வராதோ" என மக்கள் கவலையடைகின்றனர்.

அரசன் கடுவாய்களை எதிர்க்கும் புலிபோல தம்பிமாரை எதிர்த்து வெல்கிறான். ஈரச் சிலையில் எள் அப்பினாப் போல் காவலர்கள் வலியதம்பியைச் சுற்றி வளைத்துப் பிடிக்கின்றனர். அவர் பொன்னாங்குருவிகள் பாய்வது போல் பாய்ந்து மற்போர் செய்கிறார். இதே உவமைகளே குஞ்சு தம்பிக்கும் பயன்படுத்தப்படுகின்றன. ஆடறுத்த களம் போல தம்பிமார் கொலைசெய்யப்பட்ட களம் அமைவதாகக் கூறுவது காட்சி விளக்கத்தினைக் கண் முன்பு காட்டுவது போல் உள்ளது. பழமொழிகள் சிலவும் கருத்து விளக்கக் கூறுகளாக அமைவது நோக்கத்தக்கது.

தாலாட்டும் ஒப்பாரியும் நாட்டார் இலக்கிய வகைகளாகும். நெஞ்சை நெகிழ வைக்கும், உருக

வைக்கும் இவை தம்பிமார் கதைப்பாடலில் நாட்டுப்புற இலக்கிய இயல்புகளாகத் தடயம் பதிந்துள்ளன.

**பொன்னிலங்கும் மேனியனோ?**
**புவிதனையும் ஆளவென்று**
**மண்ணிலங்கவே யுதித்த**
**வலிய தம்பி ராராரோ!**

வலியதம்பி மகவினை ஒன்பது வரிகளில் தோழியர்களால் தாலாட்டுகின்றார் கதைப்பாடல் ஆசிரியர். இத்தாலாட்டுக்கு எதிர்ச்சுவையாக இறுதியில் ஒப்பாரி ஒலிக்கின்றது. படுகளத்தில் கொலை செய்யப்பட்டுக் கிடக்கும் தம்பிமார்களைக் கண்டு தங்கை, தாயார், மாமன் முதலியோர் முட்டி மோதி முகத்தோடறைந்து ஓலமிடுகின்றனர்.

**பெற்றவயிறு கொதிக்குதல்லோ**
**என் புத்திரரை காணாமல்**
**பற்றி வயிற்யெரியுதல்லோ**
**என் பாலகரை காணாமல்!**

எனத் தாயார் அழுது புலம்பி அரற்றி நிற்க, "என்னாலே பகையெடுத்து என் பிறப்பே யிறந்தீரே; பாவி நான் பிறந்தல்லவோ பழிகொடுத்தேன் அண்ணர்களை" என்று தங்கையும் ஏங்குவதை இதயம் உருக எடுத்துக்காட்டுகிறார் ஆசிரியர். தலையில் இடித்துத் தரையில் புரண்டு தாயார் அழ, வீரன் தங்கையுமே விழுந்தெழுந்து ஏங்கியழ, தன்னிலைதனை மறந்து தாய்மாமன் அழுது நிற்க, அன்ன சுற்றம் எல்லோரும் அயலாரும் அழுதுவிட, கற்போர் நாமும் சோகம் கசிந்திட ஏங்கி இரங்கி நிற்கிறோம்.

நாட்டுப்புறப் பாடல்களில் அடுக்கிச் சொல்லும் நிலை அமைவதுண்டு. ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிக் குறிப்பிடும் இந்நிலை கதைச்சுவைக்கு உரமூட்டி நிற்கும். தம்பிமார்களுடைய அணிநலன்களைக் குறிப்பிடும்போதும், மன்னருடைய நீராட்டு, புறப்பாடு, தம்பிமாருடைய

நெல்லை புறப்பாடு, தம்பிமார் ராஜாவின் திருமுகங் காணச் செல்லும் புறப்பாடு முதலிய பகுதிகளில் ஒன்றன்பின் ஒன்றாக அணிகலன்கள், ஊர்கள் முதலியன அடுக்கிச் சொல்லப்படுவது சுவை பயக்கின்றது.

சமூக நம்பிக்கைகளும் வழக்காறுகளும் நாட்டார் இலக்கியத்தில் கணிசமான அளவுக்கு எடுத்துக் கூறப்படுவது இயல்பாகும். வரலாற்று கால சமுதாயத்துடன் கதை யெழுந்த காலச் சமூகத்தின் மரபுகளும் கதைப் பாடல் களில் காட்டப் பெறுவதுண்டு. தம்பிமார் கதை இத்தகைய வழக்காறுகளை ஆங்காங்கே கதையுடன் ஒன்றித்துக் காட்சி யாக்குவது காணலாம். அரசர் உலா புறப்படுதல், பெண்கள் குரவையிடுதல், அரசரிடம் திருமுகங் காட்டுதல், திருவாக்கினை மறுத்துரைக்காமலிருத்தல் முதலியவை ராஜமரபுகளாகக் குறிக்கப்படுகின்றன.

குழந்தை பிறந்த இருபத்தெட்டாம் நாளில் அரைஞாண் கட்டிப் பெயரிடப் பெறுதல், ஏழாவது வயதில் எழுத்தறிவித்தல், அணிகலன்கள் பல பூணுதல் முதலியன வாழ்வு வழக்காறுகளாக வந்தமைகின்றன.

ராமவர்மா ராஜா தமக்கு மகன் பிறந்ததும் சோதிடனை அழைத்து வாழ்வுப் பலன் கணிக்கப் பணிக்கிறார். இது வருபொருளை எடுத்துரைக்கும் மரபினையொட்டியும் அமைந்து சிறக்கிறது. தம்பிமார்கள் தாயாரிடம் விடைபெற்று அரசரைத் திருமுகம் காணச் செல்லப் புறப்படும் நேரம் மொட்டைத் தலையும் தீச்சட்டியுமாய் ஒருவன் தெருவிலே வந்தெதிர் செல்கிறான். இது துர்ச் சகுனத்தைப் பற்றிய நாட்டார் நம்பிக்கையைக் குறிப்பதாகும். விதி, கெட்ட நேரம் பற்றிய குறிப்புகளும் உள்ளன. இவ்வாறு பல்வேறு நாட்டார் நம்பிக்கைகளும் மரபுகளும் தம்பிமார் கதையைத் தழுவிச் செல்வது உணரத்தக்கது.

தம்பிமார் கதையில் மன்னர் மார்த்தாண்டவர்மா முக்கியப் பாத்திரமாக அமைந்து தம்பிமார்களை எதிர்த்து

வெற்றியீட்டி நின்றாலும் தலைமைத் தகுதியைத் தம்பிமார்களே பெறுகின்றனர். கான்சாகிபினைப்போல், இரவிக்குட்டிப் பிள்ளையைப் போல் தம்பிமார்களும் சூழ்ச்சியால் வீழ்ச்சியடைகிறார்களே தவிர, நெறிவழிப் பட்ட போரில் தோல்வியைச் சந்திக்கவில்லை. ஆதலின் தோற்றோராயினும் தோற்காதவரே தம்பிகள். இதனால் கதைப்பாடல் 'தம்பிமார்கதை' என பெயர் பெற்றது பொருத்தமே எனலாம்.

தம்பிமார் கதையில் காதல் காரணமாகப் போர் எழுகிறது. மாமன் மகளை மணமுடிக்க மாமன்னர் விரும்ப மைத்துனர்களால் இது மறுக்கப்படுகிறது. இதனால் போர் எழுகிறது. இதனால் கதைப் போராட்டம் உள்வழியமைகின்றது. வெளிப்பகையாலன்றி உட்பகை யாலேயே போர் நிகழ்கிறது. ஐவர் ராசாக்கள் கதையிலும் இளவரசியின் காதல் காரணமாக அமையும் போராட்டம் சித்திரிக்கப் பெறுவது ஈங்கு நினைக்கத்தக்கது.

தம்பிமார் கொலையுண்ட செய்தி கேட்டுத் தாய், தங்கை அழுது புரண்டு அரற்றுவதும், "முறையோ நீதியோ?" என வினவி நிற்பதும் சிலப்பதிகார நாயகியை நமக்குக் காட்டுவது போல அமைவனவாகும். ராமவர்மா, மார்த்தாண்டவர்மா ராஜாக்கள் செல்கின்ற பயணங்களும் வருணனைகளும் உலா இலக்கியச் சுவடுகளாக நூலில் உலாவுகின்ற நிலையும் குறிப்பிடத்தக்கது.

வரலாற்றுக் கதைப் பாடல்களில் வரலாற்றுச் சிதைவுகளும் வீக்கங்களும் அமைவதுண்டு. இந்நிலை தம்பிமார் கதையிலும் காணப்படுகிறது. எட்டு வீட்டுப் பிள்ளைமார், மாடம்பிமார் முதலியோர் மார்த்தாண்ட வர்மாவை நேரடியாகவும் மறைமுகமாகவும் எதிர்த்துக் கொல்லத் திட்டமிட்டவர்கள் என்று வரலாறு எடுத் துரைக்கின்றது. தம்பிமாரும் இவர்களுக்கு உதவி செய்துள்ளதாகச் செய்திகள் கூறுகின்றன. ஆனால் கதைப் பாடலில் இவர்கள் மன்னர் ஆதரவாக நின்றதாகக் காட்டப்பெறுவது காணலாம்.

கொச்சு மாடம்மையைப் பெண் கேட்ட காரணமாக வன்றி மாடம்பிமார், எட்டுவீட்டார், கரயோகத்தாருடன் இணைந்து அரச வுரிமையை மீட்டுப்பெற பாண்டிய தளபதி துணையுடன் தம்பிமார், மன்னரை எதிர்த்துப் போர் மூட்டிவிட்டதாக வரலாறுகள் கூறுகின்றன. கதைப்பாடல் காட்டும் தளவாய் மந்திரிக்கு மாறாக, வரலாற்றில் ஆறுமுகம் பிள்ளை, ராமய்யன், நாராயணன் முதலியோர் இந்நிகழ்ச்சிக் காலத்தில் இப்பதவிகளில் உள்ளனர். எனினும் வரலாற்றிற்குப் பெரிதும் ஒத்துக் கதைக் கரு அமைவதும் நிகழ்ச்சிகள் சித்திரிக்கப் பெறு வதும் நோக்கத்தக்கது.

வரலாற்றிற்கும் நாட்டுப்புறவியலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதைத் தம்பிமார் கதை தெளிவாக்கி நிற்கின்றது. வரலாற்று மீட்டுருவாக்கத்திற்குத் துணை செய்யும் வகையில் இக்கதைப் பாடலில் குறிப்புகள் மிகுந்துள்ளன. அரசியல், மொழியியல், பண்பாட்டியல் துறைச் செய்திகளும் இக்கதைப் பாடலில் கலந்துள்ளது அறிவோம். இவ்வாறு மக்கள் மொழியிலெழுந்த எளிமை மிக்க ஒரு நாட்டுப்புற வரலாற்றுக் கதைப் பாடலாகத் தம்பிமார்க் கதை அமைகிறது எனலாம்.

சி.வி.ராமன் பிள்ளை எழுதிய மார்த்தாண்ட வர்மா நாவல், எம்.கிருஷ்ணகுமார் எழுதிய திருவிதாங்கூரின் ராஜசிம்கம் நாவல், உம்மிணித் தங்கை நாடகம் ஆகியவை தம்பிமார் கதைத் தொடர்பான மலையாள நூல்களாகும்.





# 7. சக்கன் படைப்போர்

நாட்டுப்புற வீரக் கதைப் பாடல்களுக்கென்று தனித்த ஓர் இலக்கிய வடிவம் எதுவுமில்லை. அவை அம்மானை, சிந்து, கும்மி, கதை, கிஸ்ஸா, போர், சண்டை, படைப்போர் வடிவங்களில் அமைவது காண லாம். இவற்றில் சண்டை, போர், படைப்போர் ஆகிய மூன்று வடிவங்களும் கதைப் பொருளை வெளிப்படை யாக உணர்த்தும் பாங்கில் அமைவன.

## கதை

கேரள வர்மா கதை, ஒட்டன் கதை, இத்ரிஸ் கதை, குருசேத்ரக் கதை, எட்டுக் கூட்டத் தம்புரான் கதை, சின்ன மருது பெரிய மருது கதை, கட்டபொம்மன் கதை, தேசிங்குராசன் கதை, வீணாதி வீணன் கதை, தம்பிமார் கதை, பஞ்ச பாண்டியர் கதை, ஐவர் ராசாக்கள் கதை, மதுரை வீரசுவாமி கதை, மலுக்கு முலுக்கு ராஜன் கதை, வெட்டும் பெருமாள் கதை, வெங்கள ராசன் கதை.

## அம்மானை

நபி அவதார அம்மானை, அலியார் அம்மானை, மகாபாரத அம்மானை, கர்பலா அம்மானை, தேசிங்கு ராசன் அம்மானை, ஓ சுவா அம்மானை. இராமப்ப அய்யன் அம்மானை, சிவகங்கை அம்மானை, மகா பாரத அம்மானை, குருசேத்ர அம்மானை, பப்பாரத்தியார் அம்மானை.

## மாலை

பத்ர் மாலை, முகம்மதனிபா மாலை.

## நாமா

அலியார் நாமா, பதுறு நாமா.

## வெற்றி

திவான் வெற்றி, துறாப் வெற்றி.

## சண்டை

கான்சாகிபு சண்டை, கர்ணமகாராசன் சண்டை, அபிமன்னன் சண்டை, துருக்கிச் சண்டை.

## படைப்போர்

காசீம் படைப்போர், சக்கூன் படைப்போர், மலுக்கு முலுக்கின் படைப்போர், இபுலீசு படைப்போர், இபுறாகீம் சகீது படைப்போர், அலியார் படைப்போர்.

## போர்

இரவிக்குட்டிப் பிள்ளை போர், கன்னடியன் போர்.

## கும்மி

கட்டப்பொம்மு கும்மி, சிவகங்கை கும்மி,
சின்னமலைக் கும்மி.

## சிந்து

பூலுத்தேவன் சிந்து, கட்டப்பொம்மன் சிந்து.

## கிஸ்ஸா

சைத்தூன் கிஸ்ஸா, முகம்மதனிபு கிஸ்ஸா,
அலியார் கிஸ்ஸா, [illegible] கிஸ்ஸா.

'படைப்போர்' எனும் பெயர் தூய தமிழில் கதைப் பொருளின் முழு விளக்கமாக அமையினும் இப்பெயரில் அமைந்த வடிவங்கள் யாவும் அரபு, பார்சி மூல நூல்களைத் தழுவி முஸ்லிம் புலவர்களால் தமிழில் படைக்கப்பட்டவையாகும். படைப்போர் வடிவங்களில் சில காப்பியங்களாகவும் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

தேங்காய்ப்பட்டினம் பெரும்புலவர் குஞ்சு மூசாவின் செய்யிதத்துப் படைப்போர், சல்காப் படைப்போர் ஆகிய இந்நிலைக்குச் சான்றுகளாகும். நாட்டுப்புறப்

படைப்போர் வடிவங்களில் சக்கூன் படைப்போர் செவ்வியும் சுவையும் மிக்கதோர் சீரிய படைப்பாகும்.

சக்கூன் படைப்போர் அம்மானைக் கண்ணிகளால் ஆனதாகும். காப்பு வெண்பா நீங்கலாக இதில் எண்ணூற்றுத் தொண்ணூறு வீர ஈரடிக் கண்ணிகள் உள்ளன. இடையிடையே சில வரிகள் விடுபட்ட நிலையும் காணக் கிடக்கிறது. சில வரிகள் குறுகியும் உள்ளன. அம்மானைக் கண்ணிகளால் நூல் அமைந்த நிலையை அறிவுறுத்தும் நோக்கில் பல இடங்களில் பாடல்கள் 'அம்மானை' என முடிகின்றன. தவிர ஆசிரியரே நேரடியாகக் கடவுள் துதிப் பகுதியில்,

மக்கா புரத்தார்
மகமதுற் றசூல் நயினார்
சக்கூனை வென்ற
சரித்திரத்தை யான்பாட
எக்கால முள்ள
ஏகனே காத்தருள்வாய்!

இக்காசினியில்
இனிய தமிழின் மொழியால்
அம்மானை யான்பாட
ஆணும் பெண்ணுமில்லா
பெம்மானே யெனக்கு
பேறுதவி தந்தருள்வாய்!

என்று எடுத்துரைக்கவுஞ் செய்கிறார்.

மதுரையைச் சார்ந்த வரிசை முஹியுத்தீன் புலவரால் வரி வடிவில் யாக்கப்பெற்ற இந்நூல் மீர்இசுமாயில் என்பவரின் கவிதையைத் தழுவிமைந்ததாக நூல் செய்தி உரைக்கின்றது. இன்றைக்குச் சுமார் முந்நூற்று முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னர், இஸ்லாமிய வருடம் ஹிஜ்ரி ஆயிரத்துத் தொண்ணூற்று எட்டில் (கி.பி. 1686-இல்) எழுந்த நூல் இது. நூலை அரங்கேற்றுவதற்கு உதவி புரிந்த புரவலராகக் கூடல் நயினார் மீரான் என்பவர்

குறிப்பிடப்படுகிறார். நூலின் முற்பகுதியில் இவை தவிர இறை வாழ்த்து, நபி வாழ்த்து, இறைநேசச் செல்வர்கள் வாழ்த்து, அவையடக்கம் ஆகியனவும் உள்ளன.

கடவுள் பகுதிக்குப் பிறகு நூல் பகுதியில் கதை தொடக்கம் பெறுகிறது. இடையிடையே சில இடங் களில் கொடை நாயகர் மீரான் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. அண்ணல் நபிகளின் ஆட்சிக் குறிப் புடன் தொடங்கும் கதை அவர்களது வெந்திறல் ஆற்றலைக் காட்டி இறுதியில் அவர்களது ஆட்சிச் சிறப்புடன் முடிவது குறிக்கத்தக்கது. பொதுவாக நபிகளார் படை யெழுச்சிக்குக் குரல் கொடுப்பதையும், தலைமை தாங்கிச் செல்வதையுந்தான் இலக்கியங்கள் சித்திரிக்கும். ஆனால் சக்கூன் படைப்போர் நீதியை நிலைநாட்டும் அறப்போரில் அண்ணலாரே நேரடியாகக் கலந்து வெற்றிக்கொடி நாட்டிய காட்சியை ஓவியமாக்குவது குறிப்பிடத்தக்கது.

நூலின் இறுதிப் பகுதியில் இறைநபி வாழ்த்துடன் நாட்டார் வாழ்த்தும் நயம்பட உரைக்கப்படுகிறது. மாதம் மும்மாரி மழைபொழிந்து நானிலமெங்கும் நல்வளம் பெருக இறைவனை வேண்டும் பகுதி ஆசிரியரின் பண்பட்ட நெஞ்சினைப் படம் பிடித்துக் காட்டுகின்றது.

சக்கூன் படைப்போரின் கதை, கற்பனை மிகுந்த தாயினும் அராபிய வரலாற்றுடன் மாதிரி தொடர்புடைய தாகும். அரேபியாவிலுள்ள ஈராக் எனும் நாட்டினை சக்கூன் என்பவன் ஆட்சி செய்து வருகிறான். இவனுக்கு [illegible]ராபீல் சுனாபீல் என்ற இரு அமைச்சர்களும், வீரமிக்க [illegible]ன் நால்வரும் கொடுங்கோலாட்சிக்குத் துணை [illegible]ன்றனர். சக்கூனை நல்லறவழிப்படுத்தி ஈராக்கில் நல்லாட்சி ஏற்படுத்திட இறைத்தூதருக்கு ஏகனின் கட்டளை வருகிறது. சக்கூனை நல்வழிப்படுத்த அரசக[illegible]தின் ஆட்சி யாளர் அண்ணல் நபிகள், ஹஸ்ரத் அபூபக்கர், உமர், உதுமான், அலியார்களுடைய பெரும்படையொன்று பயணமாகின்றது. பன்னாட்கள் பெருங்கட லில் பயணஞ் செய்து ஈராக்கை அடைந்த முஸ்லிம் படைகள் அங்கே

முகாமிடுகின்றன. "போராற்றாமலேயே சக்கூனை நல்வழிப் படுத்த நாதனே அருட்செய்திடுவாய்" என்றிறைஞ்சி, தூதுவன் ஒருவனைச் சக்கூனிடத்தில் சமாதானத்தூது விடுகிறார் சர்தார் நபி.

அல்லறம் விட்டு நல்லறம் காக்கச் சென்ற நபித் தூதரை மன்னன் சக்கூன் சினந்து பழி பல உரைத்துத் துரத்திவிடுகிறான். படையெடுத்து வெல்வதாகச் சவாலும் விடுகிறான்.

**எழிலாற் திறலுளரோ**
**என்னெதிரே போர்க்களத்தில்**
**உன்னிப் பொருதுவரோ**
**உற்றுத்தான் நிற்பாரோ?**

**என் படையின் உங்கள் படை**
**ஏற்றமோ என்றும்**
**வல்லமைகள் மிகப்பேசி**
**வாது மிகப்பேசலுற்றான்!**

தவிர்க்க முடியாத நிலையில் சக்கூன் படைகளும் நபி படைகளும் மோதுகின்றன. முஸ்லிம் படைத் தளபதிகளில் ஒருவரான உமறு போர் ஆற்றித் தளர, அலிப்புலியார் களத்திலிறங்கிச் சக்கூனின் அமைச்சர் சுனாபீலுடன் போரிடத் தொடங்குகிறார். அலியின் ஆற்றலைப் பழித்துரைத்துப் போர் செய்யும் அவனை, அலியார் குதிரையுடன் கீழே விழச் செய்கிறார். பரிதாப நிலைகண்டு இரங்கிய அலியார், சுனாபீலைக் கொல்வதற்கு மனமின்றி நபிகள் முன் கொண்டு வருகிறார். அண்ணல் நபி, அலிப்புலியார், முஸ்லிம் படைகளின் அறநெறி காக்கும் மாண்புகண்ட சுனாபீல் உடனே திரும்பி முன் நல்வழிப் பெறுகிறான். தொடர்ந்து சக்கூனை எதிர்த்து நல்வழிப்படுத்தப் போவதாகவும் உறுதியுரைக்கிறான்.

தன்னுடைய தலைமையமைச்சர் போரில் வீழ்ச்சி யுற்று எதிர்படையில் இணைந்த செய்தியறிந்த சக்கூன்

பெரிதும் கோபங் கொள்கிறான். சுனாபீலை எதிர்த்துப் போர் செய்து வீழ்த்துமாறு மற்றொரு அமைச்சரான மகாபீல் என்பவனுக்குக் கட்டளையிடுகிறான். சென்ற வேகத்தில் வெட்டுப்பட்டு மகாபீல் வீழ, சக்கூன் தனது மக்களில் ஒருவனை அழைத்து அனுப்பி வைக்கிறான்.

போட்டாரவன் சிரமேற்
புகலுமவன் சிரசு
நோட்டத்திற்கும் காணாமல்
நொறுங்கினதே நூறு துண்டாய்!

நீண்டதலை சிதறி நெடுமரம் போல் மகன் வீழ்ச்சியடையக் கண்ட சக்கூன், சோகத்தோடும் வேகத்தோடான சினத்துடனும், விரைந்து அடுத்த மகனை ஆர்ப்பரித்துக் கூவிக் களத்தினில் செலுத்துகிறான். களத்தில் அலிப்புலியார் அவனை எதிர்த்துப் போர் செய்கிறார். விண்ணதிர மண்ணதிர வெகுமலைகள் தானதிர நடக்கும் போரில் சக்கூன் படைகள் வெட்டுண்டுச் சிதறத்தொடங்க அரசன் அவர்களைப் பின்வாங்கக் கட்டளையிடுகிறான்.

மறுநாள் தொடங்கும் போரில் சுனாபீல் சுழன்று செயலாற்றத் தொடங்குகிறார். சக்கூன் படைவீரன் ஒருவன் வஞ்சினமுரைத்து வெந்திறல் ஆற்றி நிற்க அலிப்புலியாரும் அடர்க்களத்தில் குதிக்கிறார். வீர மொழிபேசிய வீரன் இறந்துபட சக்கூனின் இளைய மகன் வீறுகொண்டெழுந்து வருகிறான். அவனையெதிர்த்துப் போர் செய்ய சுனாபீல் ஆவேசத்துடன் எழ,

முன்னாலே நீர் பொருது
மொழியு முடம்பலுப்புற
தன்னோடிருக்கின்றீர்
சற்றே பொறுமெனவே!

பெருமான் நபி உரைத்து, அடல்திற மிக்க அலிப்புலியாரை அனுப்புகின்றார். வேந்தன் மகன் அலியாரைப் பழித்துரைத்து 'இழிமொழிகளை ஏவிட, வெம்போர்

விரைவாக நடைபெறுகின்றது. இறுதியில் தளர்ந்துபோன வேந்து மகன் "நாளையினி போர் தொடர்வோம்" என்று கூறித் திரும்புகிறான்.

ஏந்தல் நபி, படைத்தலைவர்கள், அபூபக்கர், அலியார், உதுமான், உமர் முதலியோர் மறுநாள் போர்க்களத்தில் அணிவகுக்கின்றனர். வேந்தன் சக்கூன், படைத்தலைவர்கள், வீரமக்கள் மூவரும் எண்ணிலடங்கா பெருஞ்சேனையுடன் போர் செய்யக் காத்து நிற்கின்றனர். மீண்டும் சக்கூனின் இளைய மகனும் அலிப்புலியும் அடர்திறம் காட்ட களத்தில் இறங்குகின்றனர். வடகடலும் தென்கடலும் வந்தங் கெதிர்த்தது போல் கரைநடுங்க, கடல்நடுங்கப் போர் நடைபெறுகின்றது.

மெய்யும் இமைக்காமல்
விழியிமைகள் மூடாமல்
இப்படியே மூன்றுநாள்
இவர்கள் பொருதார்கள்!

இறுதியில் இளைய மகன் தளர்வடைய, அலியாரின் அடி தாங்காமல் தரையில் விழுகிறான். அவன் நிலை கண்டு இரங்கிய அலியார் அவனைக் கொல்லாமல் சிறைப்பிடித்து இறைநபி திருமுன் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

இரண்டாவது மகன் இளையவனை எதிர்ப்படைகள் சிறைப்பிடித்த செய்தி கேட்ட சக்கூன் சினத்தில் மூழ்கி, மூத்தவன் மண்டலிகன் மாலிக்கினைப் போர் எழுச்சி யூட்டுகிறான். அதீத ஆற்றல் மிக்க அவன் கார்மேகஞ் சூழ்ந்த கருமலை போல் நின்று வீறாப்புடன் வெம்போர் ஆற்றுகிறான். அண்ணலெம்பெருமானார் அருமருகர் ஆற்றல்சான்ற ஹஸ்ரத் அலிப்புலியாரே அவனையும் எதிர்த்துப் பொருதத் தொடங்குகிறார். தொடர்ந்து போர் செய்தும் சளைக்காத அலியாரின் ஆற்றல் முன் மாலிக் அழுந்தி விடுகிறான். கருணை யுள்ளங்கொண்ட காசீம் நபியின் மருகர், அவனையும்

கொல்லாமல் சிறைப்பிடித்து இறைநபி முன் கொண்டு நிறுத்தி விடுகிறார்.

சிறிய அளவு கொண்ட சீர் நபி படைமுன், பேரளவு கொண்ட தன் படைகள் தடுமாறி நிற்பதைக் கண்ட சக்கூனின் கொடுமனம் இனியுங் கனியவில்லை. மூன்றாம் மகனையழைத்து முஸ்லிம் படைகளை வேகமாய் வேரறுத்து வரக் கூறுகிறான். சவால் விட்டு நின்ற வேந்தன் மகன் முன்னே அலிப்புலியாரின் இளைய மகன் வந்து,

**அறுபதினாயிரரை**
**அரை நொடியில் வெட்டிவென்றார்**
**மறுவில்லாதிங்கு வந்த**
**வள்ளலலி மைந்த னென்பேர்**
**ஆதி கிருபையுள்ள**
**அருமுகமதனிபா வென்பார்!**

என்று தன் திறமுரைத்து நிற்க, தாஹா நபி "இளையோர், நீசருடன் போர்புரிதல் தகாது" எனக் கூறித் தடுத்துவிடுகிறார். தொடர்ந்தும் அலியாரே அமர்க்களத்தில் அணிவகுக்கிறார். தட்டி முட்டி வெட்டிப் போர் செய்த சக்கூன் மகனும் சர்தார் நபிமருகரும் மற்போர் செய்யத் துணிகிறார்கள். இறுதியில் மன்னன் மகன் தோல்வியைத் தழுவிட அலியாரால் சிறைப் பிடிக்கப் படுகிறான்.

தொடர்ந்து நடந்த போர்களி லெல்லாம் தம் படைகள் தோல்வியைத் தழுவிட நெஞ்சங் கலங்கி நிலை தடுமாறிய மன்னன் சக்கூன், சிந்தை நொந்திட அறிஞோர்களை அழைத்து ஆலோசனை செய்கிறான். தந்திரத்தாலன்றித் தம் திறத்தால் பாயும் புலியலியை வெல்ல இயலாது எனவுரைக்கிறார்கள் அரசியல் விற்பன்னர்கள். வஞ்சகச் சூழ்ச்சியால் வாளலியை வெல்வதற்குரிய திட்டங்கள் தீட்டப்படுகின்றன. அலியை வீழ்த்துதற்கான அகழி போர்க்களத்தில் இரவோடு இரவாக விரைவாகத் தயார் செய்யப்படுகின்றது.

மறுநாள் போரில் அலியாரைச் சிறைபிடிக்க ஆயிர மாயிரம் கயிறுகள் வீசப்படுகின்றன. எனினும் சூழ்ச்சியை வென்று நிற்கிறார் அலியார். ஆனால் மாலை நேரப் பொழுதில் அவர் அகழியில் தடுமாறி வீழ்ந்துவிடுகிறார். தந்தை வீழ்ந்ததையறியாமல் அலியாரின் மக்கள், அரசனின் நான்காவது மகனுடன் போராற்றுகின்றனர். அவனைக் கீழே வீழ்த்திய வீர நபியுல்லா கொல்வதற்கு மனமின்றிச் சிறைப்பிடிக்கிறார். மாநபியின் பண்பும் அன்பும் கண்டு நாணமடைந்த அவன் நல்வழியில் இதயம் மகிழ இணைந்துவிடுகிறான்.

சக்கூனின் நான்காம் மகனும் பணிந்து நன்மார்க்கம் ஏற்ற காட்சியைக் கண்ட படைகள் வீரியமிழந்து புறமுதுகு காட்டி ஓடிவிடுகின்றன. அலியாரைக் காணாது அண்ணல் நபிகளும், ஆட்சியாளர் நால்வரும், அஸ்காபிகளும், அலியாரின் மக்களும் பெரிதும் கவலை கொள்கின்றனர். அலியாருடைய புத்திரர்கள் களத்தில் தந்தையைத் தேடிக் குரல் கொடுக்கின்றனர். இறுதியில் அலிப்புலியாரின் குரல் அகழியிலிருந்து கேட்கிறது. எல்லோரும் மகிழ்ச்சியுற்று மாநபி மருகரைக் காப்பாற்றுகின்றனர். அகழியிலிருந்து வெளிவந்த அலிப்புலியார் தன்னை மறந்து அண்ணல் நபிகளாரையும், ஆட்சித் தோழர்களையும் நலம் விசாரிப்பது நெஞ்சைத் தொடுமாறு அமைகிறது.

சக்கூனின் நான்காம் மகன் தந்தையை எதிர்த்துப் போர் செய்ய, களத்தில் இறங்குகிறான். அல்வழி ஆட்சியின் படைகளை வெல்ல அலிப்புலியாரும் அமர்களம் புகுகின்றார். எதிர்ப்படையில் சக்கூன் வீரங் காட்டுகிறான். பன்னாட்களாகப் படுகளத்தில் பிண மலைகள் குவியப் போர் தொடர்கிறது. அதர்மம் விட்டுத் தர்மங்காத்துத் தகைமை அடைய நான்காமன் தந்தைக்குக் களத்தில் அறிவுரை நல்க சக்கூனோ,

மீசையது துடிக்க
விழிகள் மிக சிவக்க
பூசல் மகனே
புத்தியில்லையோ வுனக்கு?

என்னோடே தீர்த்திடென
இறைந்து நின்றான்!

வெந்திறல் புலியலியார் சக்கூனை எதிர்த்துப் போராற்ற இடையிலேயே சமாதான அழைப்பும் விடுக்கிறார். சக்கூனும் சிந்தை கலங்கி உணர்ச்சிப் பொறி பொங்கிட, சிந்திக்கத் தலைப்படுகிறான். வெங்களத்தில் செங்களக் குருதியில் சிதறிக் கிடக்கும் போர் வீரர்கள் அவனது சிந்தையைக் கிளறுகின்றனர். இனியும் தயங்கி நிற்பது நன்றன்று என்பதை உணர்ந்த சக்கூன், அண்ணல் நபி முன் பணிந்து நிற்கிறான்.

மன்னன் சக்கூனும் மந்திரிகளும் படைத்தலைவர் களும் ஆட்சி அலுவலர்களும் அண்ணல் நபிகயின் ஆசிபெற்று நல்லாட்சி செய்யத் தொடங்குகின்றனர். படைத்தளபதி சுனாபீல் மன்னன் மகளை உவந்து மணமுடித்து இன்ப வாழ்வு வாழ்கிறான். சக்கூனின் மக்களும் இனிய குணங்களைத் தழுவி ஆட்சிக்குதவியாய் அமைகிறார்கள். அண்ணல் நபிகயும், தோழர்கள் அபூபக்கர், உமர், உதுமான், அலிப்புலியார், அசுகாபிகள் அனைவரும் மக்காவிற்கு மகிழ்ச்சியுடன் திரும்புகிறார்கள். இத்துடன் சத்தான சக்கூன் படைப் போரின் கதை முத்தாய்ப்பாய் முடிவு பெறுகிறது.

சந்தம் நாட்டுப்புற இலக்கியத்தை ஜனரஞ்சகமாக்கும் கூறுகளில் தலைமை மிக்கதாகும். எதுகை, மோனை, இயைபு ஒன்றி வரும் தொடர்கள் நாட்டமில்லாதவர் களையும் நாட்டாரிலக்கியத்தில் நாட்டமுறச் செய்யும். சக்கூன் படைப்போரில் சந்தத் தொடர்கள் ஆங்காங்கே ஆதிக்கம் செலுத்துகின்றன.

ஆரடா என்றங்கு
அரசன் மகன் கேட்டிடவே
பாரடா என்னை
பகர்ந்தார் அலிமகனார்!

என்பது நெஞ்சை அள்ளும் எதுகை மோனைக்கு எடுத்துக் காட்டாகும். இரட்டைக் கண்ணிகளின் இறுதியையும் சில இடங்களில் இடையிடையும் அமைந்து இதயத்தைக் கவர்கின்ற நிலைகளும் காணப்படுகின்றன. “வல்லயம் எதிர்வாரும் வாள் வீசி நிற்பாரும் பல்லைக் கடிப்பாரும் படையிலே போவாரும்” என அமைவன இடை இறுதி சந்த இயல்பைக் காட்டுவன.

திரும்பத் திரும்ப வரும் சந்தத் தொடர்களும், ஒரே தொடர் பல இடங்களில் மீண்டும் மீண்டும் அமையும் இயல்பும் பாமரர் பாட்டுகளில் பொதுவாகக் காணப்படும் இயல்புகளாகும். இத்தகையப் போக்கு சந்த அழுத்தத்தை உருவாக்குவதுடன் நேயர் நெஞ்சில் ஆர்வத்தையும் மூட்டுவன.

குச்சிக் குடையுடனே
கோலமணிக் குடையும்
பச்சை மரகதங்கள்
பதித்த மணிக் குடையும்
அந்தமது மிகுந்த
ஆரமணிக் குடையும்!

‘மணிக்குடை’கள் தொடர்ந்து வரும் இந்தச் சந்த அழகு, கதைப்பாடலை நினைவில் நிறுத்துவன. இவ் வியல்பு சக்கூன் படைப்போரில் சில இடங்களில் சுவடு பதித்துள்ளன. தான் சூழ, தான் போட்டார் போன்ற தொடர்கள் ஒரே இடத்தில் தொடர்ந்து வரும் நிலையும் காணப்படுகிறது. “வேலொடு வேலிடற வில்லோடு வில்லிடற காலோடு காலிடற கையோடு கையிடற” போன்ற பகுதிகள் ஒரே வரியில் ஒரு சொல் தொடர்வதைத் துலக்கி நிற்கின்றன. ஒரு வரியின் இறுவாய் அடுத்த வரியின் தோற்றுவாயாக அமையும் அந்தாதி இயல்பும் சில இடங்களில் உள்ளன. திகுதிகு, ஜெய ஜெய, துடிதுடி, ஜலஜல, தீன்தீன், வகைவகை போன்ற ஒலியடுக்கும் தக்க இடங்களில் வந்து செல் கின்றன.

நாட்டார் நாவில் நிதமும் பயிலப்பெறும் பாடல்களில் நாட்டார் மொழியின் தாக்கம் மிகுந்தமையும். சக்கூன் படைப்போரில் அரபு - தமிழ் வழக்குச் சொற்கள் பரவலாகக் காணப்படுகின்றன. மலக்கு, சைத்தான், ஜின், அறுசு, குறுசு, குபிர், அஸ்காபி, தீன் பயகாம்பர், சலாம், கலிமா, தாஹாநபி, சலவாத், தவ்பா, குதா, சுக்று, குத்பா, நிக்காஹ், பறுலு, சுன்னத், சக்காத், நோன்பு, ஹஜ், இஷா முதலிய சொற்கள் கதை வழங்கப்படும் முஸ்லிம் சமுதாயப் பேச்சு வழக்கிலமைந்த அரபுச் சொற்களாகும்.

விசளம், ரெண்டு, சமுத்திரம், கெர்ச்சித்து, சகாயம், தந்திரி, ராஜர், துவசம், துட்சணன், சந்தோஷம், சுருக்கில், பசியாறி, மரித்த, தொழுகை, உதாசீனம், பெலம், கிருபை, பாவா போன்ற சொற்கள் பொதுவான வழக்குச் சொற்களாக அமைவன. வாய்மொழித் தாக்கத்தின் விளைவாகக் கதைப்பாடலின் சில பகுதிகளில் உரைநிலை இயல்பும் அமைந்துள்ளது என்று சொல்லி, இப்படியே அந்த, என்று கேட்டார், அந்தவுரை கேட்டு - போன்ற உரைநிலைத் தொடர்களுடன் கதை தொடர்வது நெகிழ்ச்சியான யாப்பினை நினைவுறுத்துகின்றது.

கற்பனை நயம் மிகுந்த கதைப் பாடல்களில் வருணனை மிகுதியாகத் தடயம் பதிக்கின்ற நிலை உண்டு. கூடவே உவமைகளும் வந்தமையும். இந்நிலை சக்கூன் படைப்போரில் மிகுந்தமைவது கற்பார் எளிதில் உணருவர். உள்ளத்திற்கு உவகையும் எழுச்சியும் ஊட்டும் கற்பனை, வருணனை, உவமைகளைச் சளைக்காமல் சக்கூன் படைப் போர் வழங்குகிறது.

செப்புங் குளங்களிலே
திருமறைகள் தான் குவிய
படிவமுறும் அல்லிமலர்
பண்பாகத் தான் விரிய
வடிவுங் குணமுமுள்ள

முகமதுற் றசூல் முகம் போல்
கெடியுடனே சோமனது
கிழக்கே யெழுந்ததுவே!

மாலை மங்கி இரவு எழும் நேரம், இயல்பாக சந்திரன் எழுந்த காட்சியை முகமது நபிகளின் முகமதியத்திற்கு ஒப்புமை செய்து நிற்கும் ஒப்பிலாக் காட்சி இது. இத்தகைய நயமிக்க நலமுட்டும் கற்பனைக் காட்சிகள் பல இடங்களில் இயல்பாக வந்தமைந்து கதைப்பாடலின் சுவையை மிகுவித்துச் செல்வது காணலாம்.

கற்பனை, வருணனைக்கு உரமூட்டும் ஒப்பற்ற அணிகள் உவமைகளாகும். உவமைகளை அணிகலனாகச் சூடும் கதைப்பாடல்கள் பாமரர் நாவில் பாங்குடன் பன்முறை பயிலப்படுவது இயல்பு. சக்கூன் படைப் போரில் உவமை அணிகள் ஆங்காங்கே அழகூட்டு கின்றன. போரில் உடைந்த சிரசுகள் தயிர்க்குடம் போல் சிதறுகின்றன. களத்தில் அலியெழுப்பிய கர்ச்சனை இடி இடித்ததுபோல் ஒலி முழக்குகின்றது. யானைகள் பெருங் கரிமலைகள் போலவும், குதிரைகள் புள்ளினங்கள் போலவும் அமைகின்றன. நம் தலையிலே நாமே தீக் கொள்ளி வாரி இறைத்தது போன்று வெகு தொலை விலுள்ள நபிபடையை இங்கு வரவழைத்தோமே என வருந்துகிறான் சக்கூன்.

சுனாபீலும் சக்கூன் மகளும் வாழ்ந்த பிணை வாழ்வினை இணைவாழ்வாகக் காட்ட ஆசிரியர் அடுக்கிச் செல்லும் உவமைத் தொடர் காண்க.

நகவுஞ் சதையும் போல்
நாடோறும் வாழ்ந்திருந்தார்.
வகை யன்றில் பேடுடனே
வாழ்ந்தது போல் வாழ்ந்திருந்தார்.
பாலும் பழமும் போல்
பகையாது வாழ்ந்திருந்தார்!

எலி, பூனை முன்னே எதிர்க்குமோ? சர்ப்பமது கீரி தன்னொடு எதிர்க்குமோ? செல்லும் வழியில் நாய் குலைத்தால் கையில் தடி இருக்க, கரிபரியுந் தேடுவரோ? போன்ற பழமொழிச் சுவைமிகு மரபுத் தொடர்களும் வழங்கப்படுவது நெஞ்சைப் பிணிக்குமாறு அமைகின்றன.

மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட அதீத நிகழ்வுகளில் பெரும் நாட்டங்கொண்ட பாமரமக்களின் இலக்கியத்தில் அவை அமைவது வியக்கத்தக்கதன்று. கதை மாந்தர்களின் பண்பு நலன் விளக்கத்திற்கும், வருபொருள் உரைப்ப தற்கும் இன்னபிற இயல்புகளை யுணர்த்தவும் இவை துணை புரிவன. அண்ணலெம்பெருமான் அவர்களின் இயல்பும், வாழ்வு நிகழ்ச்சிகளும் சக்கூன் படைப்போரில் மீமானிட நிகழ்ச்சிகளாக அமைகின்றன. அமாவாசை யன்று பூரணச் சந்திரனை வரவழைத்தது, விண் பிரயாணம் செய்தது, தசைக் கட்டியிலிருந்து கன்னிப் பெண்ணை உருவாக்கியது. வெட்டுப்பட்ட வீரர்களை வேகமாகக் குணம்பெறச் செய்தது, முதலிய நிகழ்ச்சிகள் இறை தூதரின் பண்பு விளக்க மாண்பிற்கு உதவி புரிவன.

நபி நடந்து செல்லும்போது மேகங் குடையிட்டு வரல், காதவழி தூரம் கஸ்த்தூரி மணம் வீசுதல், தரிசு நிலம் தழைத்து வளர்தல் போன்ற செய்திகளும் குறிக்கப் பெறுவது காணலாம்.

கதைத் தோற்றுவாயிலும், இறுவாயிலும் வானவர் ஜிபுரீல் வந்து செல்வதும் இந்நிலைக்குரியதாகும். இத்தகு குறிப்புகள் இறைத் தூதரின் இயல்புக்குச் சான்றாவதோடு கற்போர் நெஞ்சில் களிபேருவுவகையையும் எழுப்புவன என்றால் மிகையாகாது.

சக்கூன் படைப்போரில் நாட்டார் நம்பிக்கைகளின் வெளிப்பாடுகளாக இஸ்லாமிய மார்க்க மரபியல்கள் சுட்டப்படுகின்றன. ஏனைய சில பொது வழக்காறுகளும் குறிக்கப்பெறுவது காணலாம்.

அலியார் தனை யழைத்த
அகுமதுற் றசூல் நபிதாம்
மெலியா அவூதோதி
பிசுமிலோ டம்தோதி
ஆன யாசீனும்
அழகாகவே ஓதி!

பாதுகாவலும் நலமும் தரும் சில திருக்குர்ஆன் வசனங்களை ஓதி, போர்க்களத்திற்கு அலியாரை அனுப்பி வைக்கிறார் அண்ணல் நபிகள். சக்கூன் நாட்டை நோக்கிச் செல்லும் நபிகளார் இறைவனிடம் இறைஞ்சுதல், போர்க்களத்தில் இறை வணக்கத்தை நிறைவேற்றுதல், இறைவனைப் புகழ்ந்தேற்றல் முதலியன சமய மரபியலின் சத்தான சான்றுகளாகும். அலியார் இறைவனைப் புகழ்தல், நபி சிறப்புரைத்தல், இறைத் தூதரிடம் போருக்குச் செல்லு முன் விடைபெறல், பணிதல் ஆகியவை பண்பின் மரபு களாக அமைபவை. பாதம் பணிவதாக வரும் குறிப்புக்கள் இந்து சமய மரபின் தாக்கத்தில் எழுந்தவை எனலாம். போரில் வீரமரணமடைபவர்கள் சுவர்க்கப்பேறு பெறுவர் என்ற செய்தியும், தீயோர் நரகில் புகுவர் என்ற செய்தியும் வீர இலக்கியத்தின் மரபுச் செய்திகளாகச் சிறப்பிடம் பெறுவன.

சக்கூன் படைப் போர் போர்க்கதைப் பாடலாதலின் போர் எழுச்சி, படைவழிப் பயணம், தூது, சூழ்ச்சி, வஞ்சினவுரை, களநிலை ஆகியவை நூலில் சித்திரிக்கப் பெறுகின்றன. போர் விளைவின் காரணமாக ஒப்பாரியும் அமைகிறது.

கையை நெறிப்பாரும்
கலங்கி யழுவாரும்
மைவிழியி னீரோடே
வாயல் வந்து நிற்பாரும்
கூந்தலவிழக்
குழறிய முவாரும்!

என அவலம் விஞ்சும் களக்காட்சியை ஓவியமாக்கும் போது சோகம் நம்மையும் விட்டு வைக்காமல் தொட்டுச் செல்வதை உணரலாம். போராற்றும்போது இரு அணிகளிலுள்ள வீரர்கள் வஞ்சினம் உரைப்பது, வினவி விடைபெறுதல், மாற்றான் வலியை மதித்துரைத்தல் முதலியன தறுகண் நிறைநெஞ்சின் தானை மறத்தினை உணர்த்துவனவாகும்.

சக்கூன் படைப்போரின் பாவிகம் தீமையை அழித்து நீதியை நிலைநாட்டுதல் என்பதாகும். அல்லறத்தை நல்லறமாக மாற்றும் முயற்சியில் அழிவு தவிர்க்க முடியாததாகின்றது. தீயவரை அழிக்காமல் நல்லவராக மாற்றவும் முடியும் என்பதற்கு சக்கூன் படைப் போர் செய்திகள் சான்றாகின்றன. சமாதான அழைப்பும், தூதும் பயனற்றபோதும் தற்காப்பிற்காகவே போர் எடுக்கின்றார் பெருமானார்.

போர்க்களத்தில் கூட வீழ்ச்சியுறும் எதிரிகளைக் கொல்லாமல் காப்பாற்றுவது உயர் பண்பாட்டின் உள்ளங்கவர் காட்சிகளாகும். இறுதியில் தோற்றவரே வென்றவராகிறார்; நாடும் குடியும் பெற்று நீடுபுகழ ஆட்சி செய்யவும் செய்கிறார். இவையெல்லாம் நபிப் பண்பாட்டின் நல்லுதாரணங்களாக நயமாக உணர்த்தப் பெறுகின்றன.

சக்கூன் படைப்போரின் காட்சிகள் பல சைத்தூன் கிஸ்ஸா, அலியார் படைப்போர் காட்சிகளை நினை வுறுத்துபவையாகும். சைத்தூன் கிஸ்ஸாவில் முகம்ம தனிபர்வை நேரடியாகப் போரில் வெல்ல முடியாத ராஜன் அகழி வெட்டி, சூழ்ச்சியால் வெல்ல முயலுவது போல் சக்கூன் படைப்போரிலும் அமைந்துள்ளது. ஐந்து படைப் போரிலும் சக்கூன் படைப் போரைப் போல் ஜிபுரீல் வந்து மன்னனை நன்னெறிப்படுத்துவதற்கான இறைக் கட்டளையை எடுத்துரைத்துச் செல்கிறார்.

சைத்தூன் கிஸ்ஸாவில் சைத்தூன், ஐந்து படைப் போரில் பனிமதி போன்று சக்கூன் படைப்போரில்

சக்கூன் மகளின் திருமணம் நடைபெறுகிறது. ஐந்து படைப் போர், செய்யிதத்துப் படைப் போர், சல்காப் படைப் போர்களில் பெண்மக்கள் தந்தைக்கு எதிராகப் போர் செய்ய சக்கூன் படைப்போரில் மகன் தந்தையை எதிர்த்து நிற்கிறான். வீசுகடல் வங்கத்திலேறி மன்சக்கூனை முகமது நபிகள் வென்ற செய்தியைக் காசீம் மாலையும் குறிப்பிட்டுச் செல்கின்றது.

சக்கூன் படைப்போர் பல சிறப்பியல்புகளுக்கும் உரிமையுடைய ஓர் உயர் தமிழ்க் கதைப் பாடலாகும். நாட்டுப்புற இலக்கியங்களுக்குரிய இயல்பான வழக்குச் சொற்களுடன் செவ்விய பொருளைக் கொண்ட சீரிய சொற்களும் இரண்டறக் கலந்த இனிய நடை சக்கூன் படைப்போர் சிந்தைக்கு விருந்தாக அமைத்துள்ளது. கதைப் பாடலாயினும் காப்பிய நலமிகு கற்பனைக் காட்சிகள் பல இந்நூலில் ஓவியமாகின்றன. இயற்கையான பல நிகழ்வுகள் கதை நிகழ்ச்சிகளிடையே ஏற்றிடுரைக்கப் படும்போது ஆசிரியரின் படைப்புத்திறன் வியந்து போற்றற்குரியதாகின்றது.

நாற்பெரும் தோழர்களுடன் நபிபெருமான் படை நடத்திச் சென்று களத்தில் செயலாற்றும் வினை மறவராகவும் காட்டப் பெறுவது கருத்திற்குரியதாகின்றது. களத்தில் அலிப்புலியார் வீரத்தை எதிரியும் ஒப்பிடக் காட்டுவதும் நோக்கத்தக்கது.

சைத்தூன் கிஸ்ஸா நாயகர் முகம்மதனிபாவை மட்டும் அலியார் மக்களில் பெயர் குறிப்பிட்டுக், கள வீரராகக் காட்டப் பெறுவதும் கவனிக்கத்தக்கது.

மொத்தத்தில் பாமரர் நெஞ்சினைப் பல்லாற்றானும் கவரும் அணிநலன்மிகு நாட்டார் பாவியம் சக்கூன் படைப் போர் என்பது தகும்.





# 8. இராமப்ப அய்யன் அம்மானை

நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் பெரும்பாலான வடிவங்கள் வரலாற்றுக் களஞ்சியங்களாக அமைபவை. அரசியல் நிகழ்வுகளையும் சமுதாயப் பண்பாட்டுச் செய்திகளையும் வழக்காறுகளையும் எடுத்து உரைப்பவை. ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி யினைக் கதைப் பொருளாகக் கொண்டெழுந்த கதைப் பாடல்கள் அந்தக் காலகட்டத்தின் மக்கள் வாழ்க்கைப் போக்கினையும் அரசியல் நிலையினையும் கற்பனை கலந்தாகவும் காட்டும் காலக் கண்ணாடியாகிறது.

காசீம் படைப் போர், கன்னடியன் போர், கட்டப் பொம்மன் கதை, ஒட்டன் கதை, திவான் வெற்றி, கான் சாகிபு சண்டை, சிவகங்கை அம்மானை, ஐவர் ராசாக்கள் கதை, தேசிங்குராசன் கதை, தம்பிமார்கள் கதை, இராமப்ப அய்யன் அம்மானை ஆகிய வீரக்கதைப் பாடல்கள் இத்தகைய நிலையில் எழுந்தவையாகும். இவற்றில் அம்மானையாக அமைந்த இராமப்பய்யன் அம்மானை என்ற இராமப்ப அய்யன் அம்மானை வரலாற்று மெய் யுணர்வு மிக்க ஒரு நாட்டுப்புறப் போர்க்கதைப் பாட லாகத் திகழ்கிறது.

நாயக்கருக்கும் மறவருக்கும் இடையே நடைபெற்ற ஒரு வரலாற்றுப் போரைக் கதைப் பொருளாகக் கொண்டது இராமப்பஅய்யன் அம்மானை. கி.பி 1623 - 59 காலக் கட்டத்தில் மதுரைப் பகுதியை ஆட்சி செய்து வந்தவர் திருமலை நாயக்கர். இதே காலக்கட்டத்தில் மறவர் நாட்டினை அரசு புரிந்தவர் தளவாய் சேதுபதி என்ற இரண்டாம் சடைக்கத் தேவர். இவர் நாயக்க ஆட்சியை மதிக்காமலும், திறையளிக்காமலும் அலட்சியம் செய் கிறார். இதே நேரத்தில் சேதுபதியின் இரண்டாம்

மனைவிக்குப் பிறந்த மகன் தம்பி, மறவர் நாட்டில் உட்பூசலைத் தூண்டுகிறான்.

தக்க தருணத்தினை எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாயக்கர், தமது படைத் தளபதி இராமப்ப அய்யனின் தலைமையில் பெரும் படையொன்றினை மறவர் நாட்டிற்கு அனுப்பி வைக்கிறார். மறவர் படைக்கு சேதுபதியின் மருமகன் வன்னியத் தேவர் தலைமை வகிக்க, 1623-இல் பெரும்போர் பல நாட்களாக நடை பெறுகிறது. வஞ்சனைச் சூழ்ச்சியால் இறுதியில் நாயக்கர் வெற்றி பெறுகின்றனர். எனினும் சேதுபதி ஆட்சிபீடம் மீண்டும் பெறுகிறான். இவ்வரலாற்றினைச் சுவைபடச் சித்திரிக்கின்றது இராமப்பஅய்யன் அம்மானை.

இராமப்ப அய்யன் அம்மானை மிகவும் நீட்சியுடைய ஒரு நாட்டுப்புறப் பாட்டாகும். வில்லுப் பாட்டாக பாடுவதற்கேற்ற பொழுதுபோக்கு வடிவத்தில் நூல் யாக்கப் பெற்றுள்ளது. பெயர் குறிப்புகளும் தகவல் களும் மிகுந்து கற்பனை வருணனைப் பகுதிகள் சில கலந்து கதை செல்கிறது. கதைத் தொடக்கத்தில் கடவுளர் வாழ்த்தும் அமைந்துள்ளது. தொடர்ந்து நேரடியாகக் கதைத் தோற்றுவாய் செய்யப்படுகிறது. நூலிறுதியில் கேட்போர், படித்தோர் வாழ்த்தும் கூறப்படுகிறது. போர்க் கதைப் பாடலுக்குரிய எல்லா இலக்கியக் கூறுகளும் இதில் பொருந்தி யமைந்துள்ளதைக் கற்பார் உணரலாம்.

இராமப்பஅய்யன் அம்மானையின் கதை தட்டுத் தடுமாற்றமின்றி ஒரே சீராகச் செல்கின்றது. வரலாற்று வரன்முறையும் காலநேர அளவுக் குறிப்பும் இயைந் தமைகின்றன. தளவாய் ராமப்பா, மன்னன் திருமலை நாயக்கனிடம் பன்முறை மறவர் படையெழுப்பினைப் பற்றி அறிவுறுத்தவும் அரசன் மறுத்துவிடுகிறான். "சேதுக் கரையினில் சென்றவர்கள் மீண்டதில்லை: மதுரைப் படையென்றால் மதியான் மறவன்" என்று மறவர் தானை மறத்தையும் நினைவூட்டுகிறார். தொடர்ந்து,

முன்னமே தானிறந்த
முனை வடுகர் பற்றாதோ?
மறவனுட பூமியிலே
மாள்வையென்று கற்பினையோ?

என்று கடிந்துரைக்கவுஞ் செய்கிறார். "வலிமைமிக்க பலரையும் வாள்முனையில் கதறவைத்த எனக்கு இந்த மறவர் எம்மாத்திரம். எவ்வாறேனும் எட்டு நாட்களில் வேட்டுமுழக்கி வென்றிடுவேன்" என வீர மொழியுரைத்துக் கெஞ்சி நிற்கிறான் இராமப்ப அய்யன். இறுதியில் வேந்தனும் இசைவளிக்கிறான்.

மன்னன் திருமலை நாயக்கன், அண்ணன் வயித்தியப்பன் முதலியோரிடம் விடைபெற்றுத் தளவாய் இராமப்ப அய்யன் மறவர் நாட்டை நோக்கிப் படைப் பயணம் தொடங்குகிறான். யானை குதிரைகள் மேல் பல்வகை முரசுகளும் மேளங்களும் முழங்க, தளவாய்ப் படை பவனி வருகிறது.

சின்னராவுத்தர் பாளையங்கடந்து வண்டியூர் வந்த படைகளுக்கு நாயக்கர் மக்கள் வாழ்த்துரைத்து மறவர் படைத்திறன் சாற்றி எச்சரிக்கையுஞ் செய்கின்றனர். ஆயிரக் கணக்கான யானை பரி ஒட்டகங்கள் அணிவகுக்க வைகைக் கரைவழிச் செல்லும் நாயக்கர் படை மானா மதுரையில் வந்து முகாமிடுகிறது.

மறவன் சேதுபதிக்கு தூதுவன் வந்து வடுகப் படையின் வருகையை அறிவிக்கிறான். காட்டாற்று வெள்ளம்போல் கட்டவிழ்த்து வந்த சேனைபற்றி வியப்புரைக்கிறான். செங்கமலக் கண்கள் சிவக்க விழிநீர் ததும்ப சேதுபதி வீரவுரை பகர்ந்து நிற்கிறான். ஆற்றல்மிகு தானை மறவர் மருகன் வன்னியத்தேவர், வீசு கொண்டைத் தேவர், அடல் திறமிகு அழகன், பொறுப்பு மிகு பொத்தை யுடையான், கருத்துமிகு கறுத்தவுடையான், அஞ்சா நெஞ்சத்து இராவுத்தக் கர்த்தன், கொள்கைக் குன்று குமாரஅழகன் முதலிய படைவீரர்களையும்

தலைவர்களையும் பிற அவைப் பெருமக்களையும் அழைத்து சேதுபதி ஆலோசனை செய்கிறான். "வேங்கைப் புலிகளே! வீரப்பரிவா ரங்களே! முன்னாளில் வந்த வினை முடிய வெட்டி நின்றீர்களே" என முழக்கி,

ராமப்பய்யன் என்றொருவன்
நம் பதியைத் தானோக்கி
மானா மதுரையிலே
வந்தே யிறங்கினானாம்!

என்று எடுத்துரைக்கிறார். அருந்திறல் மிக்க படைச் செம்மல்கள் உடனே வீரச் செருக்குற்றுச் சூளுரைத்து நிற்கின்றனர். சேது சேவகன், மதபுலி மக்கத்திலான் செம்பிச்சிங்கம், குறும்படித் தலைவர், மங்கலத் தலைவன், தீர ராவுத்தர் படைகளுக்கு அழைப்பு விடுக்கப்படுகின்றன. மானமிகு தானை மறவர்படை ஆர்ப்பரித்து அலை கடல் போல் விரைவாகத் திரண்டெழுத் தொடங்குகிறது.

செம்மல் சேது வேந்தனைப் பணிந்து வணங்கி விடைபெற்று வன்னியத்தேவர் படை நடத்தத் தொடங்குகிறார். ஆனைத்திரளும் அடல்பரியும் முன் நடக்க சேனை பல நெருங்க, செந்தூள் மிகப் பறக்க வானத்தின் மீன்போல் மன்னர் குடை நெருங்க வன்னியின் படை, வீர நடை நடந்து அரியாண்டிபுரம் அடைகிறது. மறவர் கோட்டைகளைத் திறமிகு தலைவர்கள் பலர் படைகளுடன் காக்கின்றனர். திடீரென மறவர் படைகள் விரைந்து தாக்கத் தொடங்குகின்றன. பீரங்கிக் குண்டுகள், எறிவாணங்கள் நாயக்கரை நடுங்கச் செய்கின்றன. முதல் நாள் போரில் வன்னியன் வெற்றித் திறமீட்டி நிற்கிறான்.

நாயக்கர் படையில் பாளையக்காரர்களும் வன்னியர் களும், முஸ்லிம்களும், நாஞ்சில் துரை, கொழும்பு ராஜா முதலியோரும் இடம் பெற்றிருந்தனர், எண்ணிலடங்கா இந்தப் பெருஞ்சேனை பதினெட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கப்பெற்று ஆரவாரத்துடன் அணிவகுத்து நின்றன.

இரண்டாம் நாள் இருபடைகளும் வீறு கொண்டெழுந்து மோதத் தொடங்கின. வாளோடு வாளதிர, வேலோடு வேலதிர, வேகக் குண்டுகள் பல இடிபோல் முழக்கமிட, வெம்போர் நடைபெறுகிறது. மறவர் படையை இராமப்ப அய்யன் ஊடுருவித் தாக்க வன்னியன் வீரியத்துடன் விரைந்து நாயக்கரை நலிவடையச் செய்கிறான். இவ்வாறு இரண்டாம் நாளும் மறவர்படையே வெற்றிமுகத்தில் சென்று நின்றது. "இந்த வெற்றி போதாதோ என மருகா வன்னியரே" என்று சேதுபதி மகிழ்ந்து நிற்கிறான்.

வெற்றிப் பெருமிதத்தில் திளைக்கும் தளவாய்ச் சேதுபதி வஞ்சினச் சூளுரை எழுதிய ஓலையைத் தூதுவனிடம் கொடுத்து இராமப்பய்யனிடம் அளிக்கக் கூறுகிறார். தளவாய் அதனைப் பொங்கும் சினத்துடன் கண்ணுறுகிறான்.

நாளைப் பகல் பொழுதில்
நாழியலுக் குள்ளாக
அம்மானைப் பந்தாடி
அலைக்கழிவு பண்ணாட்டால்
என் பேரோ சடைக்கன்
எடுத்ததுவும் ஆயுதமோ?

என்ற சேதுபதி சூளுரை, நாயக்கத் தளபதியின் நாடி நரம்புகளில் ஆத்திரத்தை விரைவாகப் பாய்ச்சி நிற்க, "சதுரகிரி பர்வதத்தைப் பார்த்து நாய் குலைப்பதோ? சடைக்கனுடை பெண்டின் தாலிதனை அறுப்பேன்" எனச் சினமொழியுரைத்து நிற்கிறான் இராமப்பன்.

வன்னியின் போர்வீரர்கள் வெந்திறல் தலைவர்கள் அறுவர்கள் தலைமையில் ஆறு பிரிவுகளாக அணிவகுக்கின்றனர். இரு தரப்பினரும் கருத்துடன் களத்தில் வினையாற்றத் தொடங்கினர். நாயக்கப் படைகள் போகலூர் வெளியைக் குருதிக்களமாக மாற்றத் தொடங்க, மறவர் படைகள் பதறி நின்றன. நிலையுணர்ந்த வன்னியன் கண்களில் சின நெருப்பு கொப்பளிக்க உடலெல்லாம்

வீரவுரந் தழைக்கப் "புலியை நரி புறமுதுகு காட்டுமோ" என்று கூறி, ஊக்கமது கைவிடாமல் சீறிப் பாய்ந்துச் செயல்படப் பணிக்கிறான். இழந்த வீரியம் வேகத்துடன் திரும்ப மறவர்கள் எகிறிக் குதிக்கின்றனர். வாளும் வேலும் அம்பும் வாணமும் பாயத் தொடங்குகின்றன. "வேலவனே; இது விதிவசமோ?" என முணுமுணுக்க நாயக்கப் படை வீரர்கள் சாயத் தொடங்குகின்றனர்.

**எண்ணா எக்கடா**
**என்றே ஒளிப்பாரும்**
**அக்கடா யெச்சையென்று**
**அரண்டு தாம் ஓடுவாரும்!**

நாயக்கர் படையில் மிகுந்தமைகின்றனர். ஆறு பாளையத்தார் தலைஅறுபட்டு வீழ்கிறது. நாயக்கர் மூவாயிரர் மூவா உலகில் சென்றடைகின்றனர். இவ்வாறு மூன்றாம் தடவை நடந்த போரிலும் திறமிக்க மறவரே வெற்றியீட்டுகின்றனர்.

சேதுபதி வாஞ்சையுடன் மருமகனையும் படைத் தலைவர்களையும் தழுவிப் பரிசுகள் பல வழங்கிச் சிறப்பிக்கின்றான்.

படை இழப்பிலும் தோல்வியிலும் ஆத்திரமுற்ற இராமப்ப அய்யன் நாயக்கப் படைகளை இரைந்து விரட்டுகிறான்; இழிமொழிகள் பல இறைக்கிறான். ஆவேசங்கொண்ட படைகள் திடீரென்று மறவரின் அரியாண்டிபுரக் கோட்டையை முற்றுகையிடுகின்றனர். அங்கிருந்த மறவர்கள் தப்பி ஓட அவர்களைத் தொடர்ந்து விரட்டிச் சென்று வைகை நதிக்கரையில் முகாமிடுகின்றனர். செய்தியறிந்த வன்னியன் விரைந்தங்கே வந்து எதிரிகளை வெட்டிக் கருவறுக்கத் தொடங்குகிறான். சேதுபதி தங்கியிருந்த அத்தியுத்திக்கோட்டையில் படை அதிர விண்ணதிர வேகமுடன் வீரப்போர் நடைபெறுகிறது.

இதனிடையே சற்றும் எதிர்பாராமல் நாயக்கர்கள் வேந்தன் சேதுபதி சடைக்கத் தேவனைச் சூழ்ந்துகொண்டு

தாக்கினர். வெட்டுப்பட்ட வேந்தன், மருகனை உதவிக் கழைக்கவே வன்னியன் பாய்ந்து வந்து நாயக்கரை வீழ்த்தி வேந்தனைக் காப்பாற்றுகிறான். வேந்தனை வெட்டிய ஈனவீரனை எமலோகத்திற்கும் அனுப்புகிறான். ஆனை குதிரை படைவீரர்கள் பலர் கழுகு பருந்து காகத்திற்கு விருந்தாக, இத்தடவையும் இராமப்பன் நம்பிக்கையிழந்து நலிவடைந்து நிற்கிறான்.

**ஊழி முடிந்தாலும்**
**உகாந்தமாய்ப் போனாலும்**
**விருது சடைக்கானுக்கு**
**வேதனையுந் தான் வருமோ?**

என்று வெட்டுக்காயம் பட்ட வேந்தன் மாமன் முன்னிலையில் வெற்றிக் களிப்பில் வீரம் உரைத்து நிற்கிறான் வன்னியன்.

அத்தி யுத்திக் கோட்டையில் ஆத்திர முற்றிருந்த இராமப்பனுக்கு உடனே மதுரைக்குச் செல்லுமாறு திருமலையின் ஓலை வருகிறது. வெங்களூரில் வெங்கடபதி ராயரின் பகுதியைப் பிஜப்பூர் சுல்தானின் படைகள் நெருங்கித் தாக்கிட வேந்தன், திருமலை நாயக்கரின் உதவி வேண்டுகிறான். ஆனைபரி வீரர்கள் ஆயிரக்கணக் கானவருடன் இராமப்பன் திருச்சி, வேலூர் தாண்டி வெங்களூர் செல்கிறான். அங்கு வெந்திறலுடன் வீரப் போர் நடத்தி வெற்றியும் பெறுகிறான். வெங்கடபதிராயர் நாயக்கர் தளபதிக்குத் தக்க பரிசுகள் அளித்து சிறப் பிக்கிறார். மொகலாயரை வென்ற வெற்றிக் களிப்புடன் தெற்கே திரும்பிய இராமப்பனுக்குக் கனக தானமளிக்க, திருமலை மன்னர் முடிவெடுக்கிறார்.

"சேதுமறவனைச் சிறைப்பிடித்து வென்று வந்த பின்னரே விருது பெறுவதற்குரிய தகுதியுடையேன்" என்று வீரமொழி பகர்ந்து விரைந்து, மீண்டும் களத்திற்குப் பயணமாகிறான் இராமப்ப அய்யன்.

போகலூர் கோட்டையைக் காத்துவந்த மறவர் படைகளை நாயக்கர் பெரும்படை தாக்கத் தொடங்கு

கிறது. கோட்டை முற்றிலும் தகர்க்கப்பட்டு படைத் தலைவர்களான குமார அழகனும் மதியழகனும் சிறைப் பிடிக்கப்படுகின்றனர். மறப்படைத் தலைவர்கள் இருவரும் அவர்கள்தம் பெண்கள் முன்னிலையில் சித்திரவதைச் செய்யப்பட்டு இறப்பெய்துகின்றனர். தேவியரை, நீசர் களை ஏவி மானபங்கம் செய்ய கட்டளையிட அவர்கள் தாமாகவே உயிரை மாய்க்கின்றனர்.

இராமேசுவரத்திலிருக்கும் மறவர் படைகளை மாய்த் தெறிய அணையொன்று கட்டுமாறு அளவிறந்த தன் படைகளுக்கு அவசரக் கட்டளையிடுகிறான் ராமப்பன். நாட்டாரும் நாயக்கரும் பலவாறு முனைந்து அணையை விரைவாகக் கட்டி முடிக்கின்றனர்.

இராமேசுவரத்தைப் படையெடுத்து இராமப்பஅய்யன் வருவதையறிந்த வீரமறவன் வன்னியத் தேவன் வாணமும் குழலும் பொருத்திய கப்பலொன்றில் விரைவாகச் செல் கிறான். திருவணையில் இரு அணிகளும் எதிர்க்கின்றன. பறக்கும் பீரங்கிக் குண்டுகள் முன்னே பாளையத்தாரும் வன்னியரும் பதறி நிற்கின்றனர். நாயக்கர் பெரும்படை நாலாபக்கமும் சிதறி ஓடுகின்றன. வழக்கம் போல் வெற்றி வன்னியனைத் தழுவி மகிழ்கிறது. எதிரியைச் சிதறடிக்க இனி என்ன செய்யலாம் என்று சிந்திக்கத் தொடங்கிய இராமப்பன், இலங்கையிலுள்ள டச்சுக் காரர்களுக்கும் கொச்சியிலுள்ள போர்த்துகீசியருக்கும் பிற வெளிநாட்டு வேந்தர்க்கும் படையுதவி கேட்டுக் கடிதம் அனுப்புகிறான்.

வாய் மதங்கள் பேசி
வன்னியே வெற்றி கொண்டான்
இன்றைக்கு என் வலுவு
எல்லோரும் பாருமென்று!

வலிமைச் செருக்கு கொண்டு வீர மொழி யுரைத்துப் பரங் கியர் பெரும் படையுடன் நாயக்கர் பெரும் படையைக் களத்தில் அணிவகுக்கச் செய்கிறான் இராமப்பன்.

நாயக்கப் படைகளை மாப்பிள்ளை கொண்டன், வெங்கிட கிருஷ்ணன், சத்துருக்கையன், பொன்னமராயன் முதலியோர் நடத்துகின்றனர். மறவர் படை பெருங் கப்பல்களிலும் பட குகளிலுமாகச் செல்கின்றது. வன்னியத் தேவன் கடலலை நடுங்க ககனமே நடுங்க வீரமுடன் ஆர்ப்பரித்துப் போரைத் தொடங்குகிறான். பரங்கியர் படைகள் மறவரின் மானமிகு வீரங்கண்டு வியந்து நிற்கின்றன. இராமேசுவரமே அதிரப் பெரும்போர் நடை பெறுகின்றது. களங்கண்ட வீரன் வன்னியத்தேவனின் வாய் வீரமும் வாள்வீரமும் நாயக்கர்களை நடுங்கச் செய்கிறது. தளபதி இராமப்பன் பாளையக்காரர்களையும் பிற குறுநில மன்னர்களையும் அழைத்து உணர்ச்சியைத் தூண்டுமாறு இழிமொழிகள் பலவற்றை எடுத்துரைக் கிறான். நாளை பகற்பொழுதிற்குள் சேது மறவனைச் சிறைப்பிடிக்காவிடில் உயிர் பிடிப்பேன் எனப் பயமுறுத் தவும் செய்கிறான். படை வீரர்கள் எல்லோரும் நடை தடுமாறிக் கதிகலங்கிவிடுகின்றனர்.

நாயக்கர் நாவாய்களுடன் பரங்கியர் படைக் கப்பல்கள் பல நூறும் இராமேசுவரத்தில் நங்கூரமிடு கின்றன. வெளிநாட்டுப் படைக்கலன்களும் பீரங்கிகளும் தமிழ்நாட்டுக் கடற்கரையில் சீறிப் பாய்ந்து விளை யாடுகின்றன. "அழகர்களைக் கொன்ற பழியை இன்று பாங்காக வாங்க வேண்டும்" என்று கூறி வன்னியன் வனப்புமிக இனமறவர்களுடன் விரைந்து செயலாற்றத் தொடங்குகிறான். விளைவு,

காலற்று வீழ்வாரும்
கையற்று வீழ்வாரும்
துண்ட துண்டமாகத்
துணிபட்டு வீழ்வாரும்!

நாயக்கர் படையில் மிகுகின்றனர். எழுபது குறுநிலத் தலைவர்கள் அறுபட்டு வீழ்கின்றனர். பரங்கியர்கள் தலைகிறங்கிக் கதி கலங்கி இறங்கி ஓடுகின்றனர். மறவர்

தானை மறவன் மாசில்லாவீரன் வன்னியன் வாகைசூட விண்ணும் மண்ணும் வியந்து நிற்கிறது.

தோல்வி மேல் தோல்வி தொடர வந்த பேரிடிகளாக நாயக்கத் தளபதியைத் தாக்க அவன் ஆத்திரமும் கோபமும் கொள்கிறான். நெஞ்சங்கலங்கி, சிந்தை தடுமாறி நின்ற அவன் எல்லா வகுப்பாரையும் அழைத்துச் சீறி நிற்கிறான். "மறவர்களை வெட்டிக் கருவறுத்து வீரத்துடன் தீவை வளைத்துப் பிடிக்கவில்லையெனில் எல்லோரையும் வாளால் வெட்டி வெயிலில் காயப் போடுவேன்" என்று இறுதி எச்சரிக்கையும் செய்கிறான்.

இதனிடையே வெற்றி மேல் வெற்றி பெற்ற நற்றிறத் தளபதி வன்னியன் நாயக்கர் சூழ்ச்சியால் நோய் வாய்ப் படுகிறான். அம்மை நோய் வந்து அவை, பிளவைகளாகப் பெரும் வடிவங்கொண்டு வாள் வீரனை வருத்தி நிற்கின்றது. எனினும் வடுகர் படை முன்னிலும் வேகமாக விரைந்து தாக்க திட்டமிட்ட செய்தி கேட்டு ஆவேசங் கொள்கிறான். தானே சென்று தகுபடை நடத்துவதாகக் கூறுகிறான். சேதுபதி சடைக்கத் தேவன், தீவிரமான நோயுடன் போர்க்களஞ் செல்லத் தகாது எனத் தடுக்கவும் வீறு கொண்டெழுந்து மறுத்துரைக்கிறான் வன்னியன். அவனது அறிவுரைக்கேற்ப, குதிரையில் தூக்கியிருத்தப் பெற்று, கயிற்றால் கட்டப்பெறுகிறான். கையில் வாளையும் வேலையும் தாங்கி விரைவாகப் போர்க்களம் நோக்கிப் பறக்கத் தொடங்குகிறான் வன்னி.

**ஆனைத் திரளில்**
**ஆளிச்சிங்கம் பாய்ந்தது போல்**
**ஊடுருவச் சென்றான்**
**உலகங் கிடு கிடென!**

வீரியங்கள் பலபேசி வீரமுடன் ஆர்ப்பரித்து தீரனவன் வன்னியன் திறமாகப் போராற்ற எதிரிப் படைகள் ஏங்கித் துடிக்கின்றன. விருப்பாச்சி, பொம்மணன், தொட்டயன்

முதலியோர் வெட்டுப்பட்டு மண்ணில் சாய்கின்றனர். ஆறாயிரம் நாயக்கர் அமர்க்களத்தில் இறக்கின்றனர். படைமுகாம் முழுவதும் பறிபோய் விடுகிறது. இதயம் புழுங்க எண்ணங் கலங்க ஏங்கி நிற்கிறான் இராமப்பன்.

பிளவை நோயின் அளவிலாக் கொடுமையும் பன்முறைத் தொடர்ந்து பெரும்படையை எதிர்த்து செயலாற்றிய பணியின் தளர்ச்சியும் வன்னியனை இறுதித் தறுவாய்க்கு இழுத்துச் செல்கின்றது. மரணப் படுக்கையில் மன்னன் மாமன் சேதுபதியை அருகிலழைத்து, "இனி நாயக்கர் பெரும் படையை எதிர்த்து செயலாற்றிட யாருமில்லை, படைத்தலைவர்களை நம்பிப்பயனில்லை. ஆதலின் தமையன் வயித்தியை ஆணை நிறுத்தி, இராமப்பனுக்குத் தூதெழுதி, நம்பிக்கையோலை பெற்று, பரிசுப் பொருட்களுடன் சென்று பாங்காகச் சரணடைவீராக" என்று இறுதியுரைத்து இறக்கிறான் வன்னியத் தேவன். உறுதி கொண்டு நின்று இறுதிவரைக் காத்த மறமருமகனை இழந்து, தாங்கவியலாத் துயரத்தில் ஏங்கி அழுகிறான் வேந்தன் சேதுபதி.

மறவர் தானைப் பெருந் தலைவன் இறந்துபட்ட செய்தி இராமப்பனுக்கு இனிப்பாக அமைகிறது. ஈனத் தனமான இயல்புடன் குலுங்க நகைக்கிறான் அவன். வன்னியன் சொன்ன நெறியில் சேதுபதி சரணடைகிறான். அந்நேரமும் நெறி தடுமாறிட இராமப்பன் இழிமொழி யுரைத்து ஏளனம் செய்யத் தொடங்குகிறான்.

என் மருகன் வன்னி
இருந்தானே யாமாகில்
தேவரீர் பாதந்
தெரிசிக்க மாட்டேன் யான்!

எனத் தன்மானம் தலைநிமிர வீரமுரைத்து நிற்கிறான் சேதுபதி. சினத்தால் கிளர்ந்தெழுந்த இராமப்பய்யன் மறவனைச் சிறையிலடைக்கக் கட்டளை யிடுகிறான். இராமப்பய்யனின் வெற்றி நிலைக் காட்சி கண்டு

மன்னன் திருமலை நாயக்கன் இறும்பூதெய்தி நிற்கிறான். இதனிடையே சிறையிலிருந்த சேதுபதியின் கால் விலங்குகள் கடவுளர் அருளால் கழன்று விழுகிறது. செய்தி யறிந்த திருமலை விரைந்து வந்து அவனை விடுதலை செய்கிறான். விருதுகள் பல கொடுத்து மீண்டும் மறவர் நாட்டின் ஆட்சியுரிமையும் அளிக்கிறான். சேதுபதியும் அறநெறி காத்து செங்கோல் செலுத்துகிறான். இவ்வாறு இராமப்பஅய்யன் அம்மானை கதை முடிவு பெறுகிறது.

எதுகை மோனை ஒலி நய அமைப்புகள் பாமரர் பாட்டில் பதிந்து வருவது இயல்பு. இக்கூறுகள் பாடுவதற்குரிய ஆர்வத்தினை ஊட்டுவன; செவிக்கு தேனின்பத்தை சொரிவன. இராமப்பஅய்யன் அம்மானை யில் சந்தத்தாக்கம் சில இடங்களில் வந்து செல்கின்றன.

காவேரி யாறுமல்ல
கை வாய்க்கால் தானுமல்ல
பூவேரி தானுமல்ல
புன்னீர் மடுவுமல்ல

என்று வரும் பகுதிகள் எதுகை மோனை இயைபினை இசைப்பன. பெற்றார்; உற்றார்; பிச்சைக்கு; அப்பச்சி; குற்றம்; முற்றும்; தருமாயிரம்; திருமாதவம்; பஞ்சவர்; வஞ்சவினை போன்ற இணைச் சொற்கள் தொடர் வரிகளில் எதுகை மோனையாய் வந்தமைவது காணலாம். சில வரிகள், சில தொடர்கள் தொடர்ந்து வந்து செல்கின்ற நாட்டார் இலக்கிய இயல்பு பல இடங்களில் சுவடு பதிந்துள்ளது.

சென்று பொருதான்
சேனை வெள்ளத்துக்கு முன்னே
மூட்டிப் பெருதான்
மூவுலகுந் தானதிர
வளைந்து பொருதான்
வாள் வீரன் வன்னியுந்தான்!

என வரும் பகுதியில் ஒரே சொல் தொடக்கத்தில் தொடர்ந்து மீண்டும் வருதலைக் குறிப்பன. வீழ்வாரும், முன்னடக்க, முழங்கி வர, போன்ற தொடர்கள் தொடர்ந்தும் தொடர்பின்றியும் சில இடங்களில் மீண்டும் வந்தமைகின்றன. வாய்மொழிப் பாட்டு நிலையைக் காட்டி நிற்கும் இத்தகு நிலை ஏனைய நாட்டார் பாடல் களைவிடக் குறைந்தே அமைவது குறிப்பிடத்தக்கது.

வழக்குச் சொற்களும் உரைநடைத் தாக்கமும் நாட்டுப்புறப் பாடலின் வாய்மொழியியல்பை வலியுறுத்து மாறு அமையும் கூறுகளாகும். வட்டார வழக்குச் சொற்களும் கொச்சையும் மருவியும் சிதைந்தும் அமைவ தென்பது பாமரர் பாட்டியலில் தவிர்க்க முடியாததோர் பண்பாகும். இராமப்பஅய்யன் அம்மானையில் வழக்கும் கொச்சையும் பல இடங்களில் வந்து செல்கின்றன.

நிர்த்தூளி, ஒருமிச்சு, சஞ்சலம், தெத்து, தாட்டிமை, ஏலேலம், கடவு, தெறிப்பட்ட, சதிமானம், காயிதம், எக்கடா, வடுகர், விசனம், பொக்கிஷம், மலங்க, பாசை, சணம், பைய, அப்பச்சி, அவுதா, நிருபம் போன்ற பேச்சுமொழிச் சொற்கள் இக்கதைப் பாடலில் வழங்கப் பட்டு வருகின்றன. இப்படியே, என்று, இந்த, போன்ற சொற்கள் வரிமுதலில் அமைந்து வாய்மொழி உரைநடைத் தாக்கத்தினை உணர்த்திச் செல்லும் இடங்களும் உண்டு.

நாட்டுப்புறத்தார் நாவில் நித்தமும் நின்றாடும் இயல்பின உவமை, பழமொழிகள் முதலியன. இவை அவர்களது வாழ்வுச் சூழலில் பேச்சு வழக்கில் ஒன்றி விட்டனவாகும். இராமப்பஅய்யன் அம்மானையில் உவமைகள் பல வந்து செல்கின்றன. எண்ணைக்குடத்தை எறும்பு வந்து சூழ்ந்தாப்போல் நாயக்கர் படை சின்ன ராவுத்தர் பாளையத்தைச் சூழ்வது சுவை தருவதாகும். மறவர் படை அணிவகுப்பில் குடைகள் பல வண்ணத்தில் நெருங்கிச் செல்வது வானத்தில் விண்மீன் கூட்டமாய்ச் செல்வது போலிருந்தது எனக் கூறுகிறார் ஆசிரியர்.

ஆனைத்திரளில் ஆளிச்சிங்கம் பாய்வது போல் வாள் மறவன் வன்னி பாய்ந்து போராற்றுகிறான். பெருஞ் சேனை, வெள்ளமாய்க் களத்தில் பரந்தமைகிறது. வலையில் அகப்பட்ட மான் பல இடங்களில் ஒப்புமைக்கு உதவி நிற்கிறது. சில உவமைகள் மீண்டும் மீண்டும் பயன் படுத்தப் பெறுவதும் நோக்கத்தக்கது.

நாட்டார் கதைப் பாடல்களில் பாமர மக்களின் நம்பிக்கைகள் தவறாது தடம் பதித்துச் செல்லும். மக்கள் வாழ்வினைப் பிரதிபலிக்கும் எதார்த்த இலக்கியங்களில் இந்நிலை தவிர்க்க முடியாதது. இந் நம்பிக்கைகள் அவர்களது சமயக் கலாச்சார உணர்வினை வெளிப் படுத்தும் வகையில் அமைவனவாகும்.

இராமப்பன் போருக்குச் செல்லுமுன் அங்கயற் கண்ணியை வழிபட்டு அண்ணனிடம் வாழ்த்தும் விடையும் பெறுகிறான். மறவர் வேந்தன் போர்ப் படை யெழுச்சிக்கு முன் அவையைக் கூட்டி ஆலோசனை செய்கிறான். இந்நிலை மரபு வழிப்பட்ட வழக்காறுகளைக் கூறுவன. போரில் வெற்றி பெற்று வரும் வன்னியனைப் பெண்கள் ஆலாத்தி எடுத்தல், போர் வெற்றிக்காகப் பலிகொடுத்தல், கனகதானம் அளிப்பதாகக் கூறல் முதலியவை அக்கால வழக்காற்றியலை எடுத்துரைப்பன.

கூகைகள் குழறல், ஓரிகள் ஓலம், காகம் கதறிடல், இடது தோள் துடித்தல், இருநாசி மூடிடுதல், வானத்தில் கருடன் வட்டமிடுதல், கண்படுதல் முதலியவை சகுனப்பழமரபு நம்பிக்கைகளை உணர்த்தி நிற்பனவாகும்.

ஒப்பாரியும் ஏலோலோவும் நாட்டுப்புறப்பாட்டாக அமைபவையாகும். இப்பாட்டுக்கள் இராமப்பஅய்யன் அம்மானையில் நாட்டாரிலக்கியக் கூறுகளாக வருகின்றன. ஓயாது உழைக்கும்போது உழைப்பின் துயரம் உடலை வருத்தாமலிருக்க உள்ளம் உவகை கொள்ளுமாறு பலவகை ஒலியெழுப்பிப் பாட்டு பாடுதலென்பது பாமரர் மரபாகும். இச்செய்தி இராமப்பஅய்யனம்மானையில் பாம்பனாற்றில் இராமேசுவரத்தை இணைக்கும் அணை

கட்டும் நிலையைச் சித்திரிக்கும்போது எடுத்துரைக்கப் பெறுகிறது.

வேசையர், ஆண்டியர், பரதேசியர் படைசூழ கல் சுமந்து, கவலை தீர ஏலேலோ பாடிச் செல்கின்றனர்.

மருமகன் வன்னியத்தேவனின் இழப்பில் வருந்தும் சேதுபதி

**என் மருகா வன்னியனே**
**என்னைக் கெடுத்தாயே!**
**வீதிவரக் காண்பேனே**
**வேந்தனே யென் மருகா!**
**என் மருகா வன்னியனே**
**இந்த விதி வந்ததென்ன?**

என்று அழுது ஓலமிடுவதைக் காணலாம்.

இறுதி வரையிலும் உறுதிகாத்து நின்ற தன் மருகன் தானைமறவன் பெரும்படைத் தலைவன் வன்னியன் இறந்து பட்டபோது சேதுபதி தேவி, பலவாறு புலம்பி யழும் காட்சி இது. சோகம் ததும்ப அவலம் சிந்த அமையும் இப்பகுதி போர்ப்பாடல்களில் பொதுவாக வந்தமைவதாகும்.

வருபொருள் உரைத்து நிற்கும் கனவுக் காட்சியும் இராமப்பஅய்யனம்மானையில் இடம் பெற்றுள்ளது. இராமப்பனின் படைகள் மறவர் படையினால் அழிந்து படும் நிலையைக் குறிப்பால் உணர்த்தும் சில காட்சிகளை நாயக்கர் படையினர் கனவில் காண்கின்றனர். சேதுபதி சிறைப்பட்டிருக்கும் வேளையில் கால் விலங்குகள் திடீரென்று கழன்று விழுகின்றன. மாயன் காட்சியால் விளைந்த அற்புத நிகழ்ச்சியிது என ஆசிரியர் கூறுவர். இத்தகைய கனவு, அற்புதக் காட்சிகள் மீமானிட ஆற்றலை யுணர்த்தும் இலக்கியக் கூறுகளாக இடம் பெறுகின்றன. இக்கூறுகள் பொதுவாகப், பாமரர் பாட்டினைச் சுவைப் படச் செய்யும் சிறப்புக் கூறுகளாகும்.

புராண இதிகாசக் கதைகள் நாட்டார் நாவில் நாளும் பழகப்படுவது இயல்பு. இவை நாட்டுப்புற இலக்கியங்களிலும் சுவடு பதித்துச் செல்லும். மகாபாரத, இராமாயணச் செய்திகள் சில இராமப்ப அய்யன் அம்மானையில் வந்து செல்கின்றன. தூது, கடிதம், வஞ்சினம் முதலியவை போருக்கு முன்னெழுந்த நிலையைச் சுட்டுவன. போரெழுச்சி, ஒலி, படைப் பயணம் முதலியன போர்ச் செயற்பாட்டைச் சித்தரிப்பன.

போருக்குப் பின்னமைந்த களநிலையும் காட்சி யாகின்றது. இவை நாட்டார் போர்க்கதைப் பாடலின் கூறுகளாக அமைபவை. போர்ப் பயணத்தின்போது தாண்டிச் செல்லும் ஊர்ப்பெயர்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து குறிக்கப்படுகின்றன.

இது போன்று கோட்டைகள், படைகள் பெயர் களும் தொடர்ந்துரைக்கப் பெறுகின்றன. இவை எண் பெயர் குறிக்கும் நாட்டாரியல்பைக் காட்டி நிற்கின்றன.

மொத்தத்தில் நாட்டார் பாடல்களில் வரலாற்று வீக்கம் குறைந்த ஒரு போர்க் கதைப் பாடலாக எழிலுடன் ஏற்றமும் பெற்றமைகிறது இராமப்ப அய்யன் அம்மானை எனலாம்.





# 9. மலுக்கு முலுக்கு ராஜன் கதை

கி.பி. 15-19ஆம் நூற்றாண்டுக் காலம் தமிழகத்தின் இரண்டாவது இருண்ட காலம் எனலாம். இக்கால கட்டத்தில் தமிழகம் வேற்று மொழியாளர்களால் ஆளப்பட்டது. நாயக்க, பாளைய, நவாபு, மராத்திய, வெளிநாட்டார் ஆதிக்கத்தின்போது தமிழ் இலக்கியம் நிலை தளர்ந்து வாடிக் கிடந்தது. நிலையற்ற ஆட்சியும் போர்ச் சூழலும் புலவர்கள் ஆர்வத்தை மிகுவிக்கவில்லை. அணைத்து ஆதரவு நல்கும் வகையில் அரசர்களும் அமையவில்லை. குறுநில மன்னர்கள், ஜமீன்தார்கள் சிலரின் விருப்பத்திற்கிணங்க, சில சமய தர்க்க நூல்களும், கோவை, உலா, மடல், தூது போன்ற சிற்றின்ப நூல்களும் மட்டுமே எழுந்தன.

மருட்சியான இந்தக் காலகட்டத்திலும் இயல்பான தமிழுணர்வுடன் ஒழுக்கத்துடனும் தக்க புரவலர்கள் துணையுடன் சளைக்காது பேரின்பக் காப்பியங்களையும் சிற்றிலக்கியங்களையும் யாத்தவர்கள் முஸ்லிம் புலவர்கள். அவர்கள் பொதுவான தமிழ் வடிவங்களுடன் கிஸ்ஸா, நாமா, மாலை, மசலா, முனாஜாத், படைப் போர் போன்ற புதிய வடிவங்களிலும் இலக்கியங்களை வழங்கி நின்றது குறிப்பிடத்தக்கது. இக்காலத்தை முஸ்லிம் இலக்கிய காலம் என்பர்.

அராபிய பாரசீக நூல்களைத் தழுவிப் பலவகை வீர தீரச் சாகசக் கதைப் பாடல்கள் அரபுத் தமிழில் முஸ்லிம் புலவர்களால் இயற்றப் பெற்றன. தமிழ் மொழியினை அரபு வரிவடிவத்தில் எழுதும் அரபுத் தமிழிலமைந்த இக்கதைப் பாடல்கள் பிற்காலத்தில் தமிழ் வரிவடிவில் பதிப்பிக்கப் பெற்றன. அப்போது இவற்றில் சில பொதுவாகக் 'கதை' எனவும் பெயர் பெற்றமைந்தன. இவ்வகையிலமைந்த ஒரு வீரதீரக் கதைப்பாடலாகும் மலுக்கு முலுக்கு ராஜன் கதை. ஒரே கதைப் பொருளில்

பல இலக்கிய வடிவங்கள் சிலபோது அமைவதுண்டு. கட்டபொம்முவின் வரலாறு கும்மியாகவும் கதையாகவும் சிந்துவாகவும் வழங்கப்படுகிறது. காசீம் படைப்போர் மாலையாகவும் காணப்படுகிறது.

சிவகங்கை வீர நிகழ்ச்சி அம்மானையாகவும் கும்மியாகவும் அமைகிறது.

ஹஸ்ரத் அலிப்புலியார் வாழ்வு நாமாகவும் கிஸ்ஸா வாகவும் படைப்போராகவும் உள்ளது. அபூஷஹ்மா கதை கிஸ்ஸா வாகவும் மாலையாகவும் எழுதப் பெற்றுள்ளது. சைத்தூன் கிஸ்ஸா என்ற பெயரில் இரு வடிவங்கள் உள்ளதும் நினைக்கத்தக்கது.

ஐந்து பாண்டிய மன்னர்களின் போரினைப் பற்றி போர், கதை என ஆறு வடிவங்கள் வழக்கிலுள்ளன. இத்தன்மைத்த நிலையில் மலுக்கு முலுக்கு ராசன் கதை, படைப்போர் வடிவிலும் வழங்கப் பட்டு வருவது நோக்கத் தக்கது.

மலுக்கு முலுக்கு ராஜன் கதை பாமரர் மத்தியில் பாடுவதற்கேற்ற நாட்டுப்புறவியல் அமைப்பினைக் கொண்டது. வாய்மொழி யாப்பின் புனை திறமும் இசை நலமும் வாய்ந்தது. காப்பு வெண்பாவும் வாழ்த்து விருத்தங்களும் நீங்கலாக ஏனைய நூற்பகுதி முழுவதும் அலங்காரக் கண்ணிகளால் ஆனதாகும். காப்பு வெண்பா இறைக் காப்புடன் கதைப் பாடலின் பெயரையும் எடுத் துரைக்கிறது.

ஒன்பது வாழ்த்து விருத்தங்களில் எட்டில் இறை வாழ்த்து, நபி வாழ்த்து, கலீபாக்கள் வாழ்த்து, இறைநேசச் செல்வர்கள் வாழ்த்து ஆகியன அமைகின்றன. ஒன்பதாவது விருத்தப்பா பொருத்தமுடன் நூல் யாத்தவர் பெயரைக் கூறி நிற்கின்றது.

**தேன்கனி பழுத்துச் சிந்தும், செழுநகர் ஆம்பூர் வாழும்,**
**பான்மொழி வாலை பாவா சாயுபு புதல்வ ரானோர்,**
**தீன்முறை தவறா அப்துல்காதிர்**

என்பவர் ஆசிரியராக உரைக்கப்படுவர்.

நூல் முகப்பில் "வாலை அப்துல் காதிர் சாகிபு அவர்களால் பாடி, பன்முறை பலரால் அச்சிட்டு விளங்கி வந்ததைச் சீர்திருத்தி" என அமையும் குறிப்பு, கதைப்பாடலின் நாட்டாரியல்பினைக் கோட்டமின்றிக் கோடிட்டுக் காட்டுகின்றது.

வாழ்த்துப் பகுதியில் மலுக்கு முலுக்கு ராஜனை அறிமுகப்படுத்தும் ஆசிரியர் அவனது நிலை, இயல்பு, முடிவு பற்றித் தெள்ளத் தெளிவாகக் குறிப்பால் உணர்த்தும் பாங்கு சிறந்தமைகிறது.

நெட்டுடலாய் வளர்ந்த நீள்முடி மலுக்கு ராஜன், பாதக மலுக்கு ராஜன், மலிபவ மலுக்கு ராஜன், மலையென உடல் வளர்த்த மலுக்கின் படைத் தொழிலதனைக் கூற, வரலாறு தன்னைப் பாட எனக் கூறும் ஆசிரியர் பின்னர்,

**நிலமிசை கீர்த்தி பொங்க**
**நால்வகைப் படைகள் சூழ**
**வலிபல மொழிந்திறந்த**
**மலுக்கினின் வரலாறோத!**

என மீண்டும் மீண்டும் கதைத்தலைவனியல்பை எடுத் துரைப்பது பாடலின் உயிர்நிலைக் கருத்தை உணர்த்தி நிற்கின்றது. பாதகத்தைப் பாதையாகக் கொண்டவன், மலிபவங்களை வலியாகக் கொண்டவன், மலையென உடலொடு உலை வைக்கும் குணக்கேடினை வளர்த்தவன் முடிவு எவ்வாறமையும் என்பதை முன்னேயே உணர்த்தும் பாங்கு போற்றத்தக்கது.

கதைத் தோற்றுவாய் காதை இதப்படுத்தும் நெறியில் துவங்குகிறது. எதுகை, மோனை, இறுதி இயைபு சந்தத் தால் முந்தி நிற்க வேதநபியின் ஆட்சித் திறத்தின் மாட்சி காட்சியாகிறது. மானும் புலியும் மையல் கொண்டு ஒரு சுனையில் நீரருந்த, பருந்தும் கிளியும் பாசமுடன் ஒரு கூண்டில் கூடி விளையாட சொர்க்கபுரியாக மக்காபுரி திகழ்கிறது.

வணங்கா ராஜர்களெல்லாம் வந்து வரிசையுடன் நற்கலிமா ஓதுகிறார்கள். கெட்ட நடப்புகளெல்லாம் நீங்கி இறையிட்ட கட்டளைகள் இலங்கிச் சிறக்க, ஏந்தல் நபியவர் வேந்தராக வெற்றிக் களிப்புடன் நற்றிற மாற்றுகிறார்கள்.

"அந்த நாளின் சங்கதி தன்னைச் சிந்தை குளிர, காதுகள் குளிர சொல்லக் கேளுங்கள்" என முத்தாய்ப் பாய் முகவுரை தருகின்ற ஆசிரியரின் திறம் வியக்கத்தக்கது. ஆனால் இறுதியில் எவ்விதமான வாழ்த்தோ, முடிவுரையோ, இன்றித் திடீரென முடிந்து விடுகின்ற நிலையும் நோக்கத் தக்கது.

மலுக்கு முலுக்கு ராஜன் கதைப்பாடலின் கதைத் திட்டம் கற்பனையுணர்வு மிகுந்தமைவதாகும். அண்ணல் நபிகளார் ஆட்சிக்காலத்தில் அல்லறம் அழித்து நல்லறம் காத்த கதைக்கருவினையே இக்கதைப் பாடல் பொழுது போக்கு சுவைமிக்கு விளக்கிச் செல்கிறது.

கற்பனை மிகுதி யாயினும் போர்க்கதைப் பாடலுக்குரிய மரபும் நெறியும் கண்போல் பேணிக் கதையுரைக்கப்படுவது காணலாம்.

அரபகத்தின் ஆட்சியாளர் அண்ணல் நபி, கலீபாக்கள் நால்வர் சூழ மக்காவில் வீற்றிருக்கும் நாளதில் அலிப்புலியாரின் அன்பு மகன் இமாம் ஹசனவர்கள் பெருங்கவலையுடன் பெருமானார் பக்கம் வருகிறார். "ஈரல் கொழுந்தே எந்தன் மகனே மதிபோலான உன் முகம் வாடி கிடப்பதென் காரணம் என்ன" எனப் பெருமானார் பேரனிடம் வினவுகிறார், "எனது நண்பர் மன்சூர் எட்டு நாட்களாக வாட்டும் சுரத்தால் துடித்துக் கிடக்கிறார். அண்ணல் தங்களைக் காண ஆர்வங் கொள்கிறார்" என்கிறார் அசனார்.

வாடா மலரை வண்டுகள் சுற்றுவது போல், வேந்தர் நபிகளார் ஏந்தும் தோழர்கள் சூழ்ந்திட மன்சூரைக் காண

மனமுவந்து பயணமாகிறார். ஏக இறைவனிடம் தாகா நபி இரந்து இறைஞ்சி நிற்க மன்சூரின் சுரம் மறைகிறது.

சஞ்சல மெல்லாம் நீங்கிப் போச்சுது
தங்கள் வரவாலே
சூரியன் முன்னே பனி போலெனக்கு
சுத்த மிகவாச்சு
பொழுது புறப்பட இருள்களோடிப்
புகுந்த வாறாக
தங்களைக் கண்டவுடனே யெனக்கு
சுரமும் நீங்கிப் போச்சு!

என்று மாநபியினைக் கண்ட மகிழ்ச்சியில் ஆனந்தம் கொள் கிறார் மன்சூர். சுரதாகமும் தளர்ச்சியும் நீங்க அவருக்கு மாதுளமும் முந்திரியும் கொண்டு வர, தோட்டக்காரர் தஹீயத்து கல்விக்கு கட்டளையிடுகிறார் சுத்தன் நபிகள்.

அவரும் தயங்கிப் பணிந்து, "இறைத் தூதரே! நான்கு மாதமாய் நாளும் விளையுங் கனிகளெல்லாம் களவு போகிறது. இரவு பகலாக முயன்றும் கள்வனைப் பிடிக்க முடியவில்லை" என்று கூறுகிறார்.

செய்தி கேட்ட சர்தார் நபிகள் சிந்தனைமிகவாகி மன்சூருக்கு மருந்துகள் நல்கி, பின்னர் விடைபெற்று மக்கா மஸ்ஜிதுக்குச் செல்கிறார்.

இறைத்தூதர் ஏவ ஒருநூறு தோழர்கள் படைக் கலனேந்தித் தோட்டத்தில் கள்வனைப் பிடிக்கச் செல் கிறார்கள். இரவு நெருங்க ராட்சச மலைபோன்ற கறுத்த உருவம் ஒன்று தோப்பினுள் விரைவாகப் புகத் தொடங்கு கிறது.

நீண்ட பனைமரம் போலுடலும்
நெடிய பல்லுகளும்
சாலை போல் வயிறுமாக
சல்லடை போல் கண்களும்!

கொண்ட அந்த ராட்சச ஜின்னைப் பிடிக்க நபித் தோழர்கள் நெருங்க, அவர்களை அது துரத்திச் சுற்றி வளைத்துப் பிடிக்கத் தொடங்குகிறது. உடனே அமறுமதியர் தனது வலியெல்லாம் திரட்டி ஜின்னை ஓங்கிக் குத்தினார். உடனே பூதம் அஷ்காபுகளை விட்டுவிட்டு அவரைப் பற்றிக் கொண்டது.

வானவர் ஒருவர் விரைவாக வந்து ஜின்னைத் தாக்கிட அது வலுவிழந்து சாய்கிறது. எல்லோருமாக ஜின்னை வரிந்துகட்டி நபிகளார் முன் கொண்டு வருகிறார்கள். அண்ணலாரிடம் அந்த ஜின் தனது கதையினை உரைக்கத் தொடங்குகிறது.

"நான் மகரிபு நாட்டைச் சார்ந்தவன். அந்த நாட்டை மலுக்கு மகாராசன் ஆண்டு வருகிறான். அவன் ஆணவ மிக்கவன்; அஞ்சா நெஞ்சன்; அடங்கா மன்னவன்." எனப் ஜின் கூற, வேந்தர் நபி ஜின்னை நல்வழி நாடிட வேண்டுகிறார். ஜின்னோ பயந்து கதிகலங்கி, மலுக்கு முலுக்கு ராசன் அறிந்தால் என்னையும் உங்களையும் பஞ்சுபஞ்சாக பறத்திடுவான்" என்கிறது.

"அவனை வென்றிட அலிப்புலியார் ஒருவரே போதும்; அஞ்சாமல் நீ நின்றிடு" என நபி உறுதி யளிக்க ஜின்னும் மகிழ்ச்சியுடன் இறை நம்பிக்கை கொள்கிறது. நபித் தோழர் இபுறாகீம் என்பவருடன் சைது என்ற அந்த ஜின் மலுக்கு ராசனிடம் நல்வழித் தூதும் செல்கிறது.

நபித்தூதர் இபுறாகீம், மன்னர் மலுக்கு முலுக்கினை அடிபணியாது நின்ற நிலைகண்ட ராசன் "நீயார்" என பெருஞ்சினத்துடன் வினவுகிறான். சற்றேனும் அஞ்சாது இறை நபித்தூதர் பதிலுரைக்கின்றார்.

பொல்லாக் குபுறைக் களைந்து கடந்த
பெரிய நபியுல்லா
கலிமாப் பயிரை உலகினில் விதைத்த
ஹபீபு நபியுல்லா!

தூதர், "மக்கத்திலிருந்து வருகிறேன்" என்கிறார். கூடவே நான்கு ஆட்சியாளர்கள் திறமையையும் எடுத்துரைக்கிறார். ஜின்னும் நபியின் அன்பினையும் ஆற்றலையும் ராசனுக்கு அறிவிக்கின்றது. எனினும் தன் முன்னிலையில் வேறொருவர் திறம் வியந்துரைத்த சைதையும் இபுறாகீமையும் சினந்து, "நபியையும் தோழர்களையும் அலியாரையும் விரைந்து சென்று வெற்றி கொள்வேன்" என வீரமொழி உரைக்கிறான் மலுக்கு ராசன். அவையிலிருந்து சிறிய பல ராஜர்கள் மலுக்கு முலுக்கினைப் பணிந்து, "நாங்கள் சென்று நபி படையை வெல்வோம்" என்று வீறு கொள்கின்றனர்.

"நபியின் நாடு தேசங்களை நொடிக்குள் அழித்து அலியார் தலையைக் கொண்டு வருவேன்" என்று பூதராசன் ஆற்றல் மொழி கிளத்தி நிற்கிறான். "விரைந்து சென்று வீறுகொண்டு வெற்றி பெற்று வா" என வாழ்த்துகிறான் வேந்தன் மலுக்கு. கருந்தூளெழுந்து விண்ணை மறைத்திட வெங்கலத் தேரேறி விரைந்து மக்கா நோக்கிச் செல்கிறான் ராசன். பூதசேனைகளுடன் ஜின் மகா சேனையும் மக்கா விலுள்ள மாநபியின் சோலையில் புகுந்து காய்கனிகளை உண்டு மலர்களைச் சூடி மகிழ்ந்தாடத் தொடங்குகின்றன. காவல்காரர் வழி செய்தியறிந்த சர்தார் நபி உடனே படையெதிர்க்கக் கட்டளையிடுகின்றனர்.

அலிப்புலியார் சில நாட்களாகத் தீராத சுரத்தால் படுத்த படுக்கையாகி விட்டதால் அபூபக்கர், உமறுல் கத்தாபு, உதுமான் ஆகிய ஆட்சியாளர் மூவரும் அடுகளத்தில் ஆற்றல் காட்ட அண்ணலாரிடம் விடை வேண்டி நிற்கின்றனர். அப்போது மூசா எனும் நபித்தோழர், "ஆதியின் தூதே அஹ்மது நபியே! ஏழுகடல் சேனை வரினும் எதிர்த்து தூள் தூளாக்குவேன். அனுமதி தருக!" எனப் பணித்து நிற்கிறார். ஆயிரம் அஸ்காபுகளுடன் மூசா, குதிரையில் படைப் பயணத்தைத் தொடங்குகிறார்.

மூசாவும் பூதராஜனும் வெகுண்டெழுந்து போர் செய்யத் தொடங்குகின்றனர். நூற்றிப் பதினாறு முழம் நீளமுடைய பூதராசன், அவனது கைகளில் இருபது பார வாளும் இருபது பார தண்டமும். மூசாவை நோக்கி ஆவேசத்துடன் வினவுகிறான் பூதராசன்.

**புலிமுன் ஆடுபோலென் முன்னாகப்**
**போரிட வந்தீர்கள்**
**பூனை முன் எலி போலென் முன்னாகப்**
**போரிட வந்தீர்கள்!**

நீவிர் யார்? "நானிலமே அஞ்சிட வெட்டிடும் அலிப்புலி நான்" எனப் பதிலிறுக்கிறார் மூசா.

கையை மூக்கின்மேல் வைத்துக், கலகலவெனக் குலுங்கிச் சிரித்த பூதராசன், "என்னை நீயோ வெற்றி கொள்வாய்" எனக் கூறுகிறான். அவனது தண்டாயுத அடிகளால் அஸ்காபுகள் பலர் இறப்பெய்துகின்றனர். இந்நிலையில் திடீரென்று மூசா கிலுகிலுவெனச் சிரித்திட, ராசன் ஏன் என வினவ, "இன்று எங்களை இவ்வாறு அடிக்கிறாய். நாளை அலிப்புலியே வரும்போது நீ என்ன ஆவாய்" என்பதை நினைத்துச் சிரித்தேன் என்கிறார்.

உடனே "அலியை வெட்டிய பிறகே உன்னை வெட்டுவேன்" எனக்கூறி எல்லோரையும் சிறைப்பிடித்து அபூபக்கர் தோப்பிலிருந்து உமறுகத்தாபின் தோப்பினுள் நுழைகிறான். அங்கிருந்து நபித் தோழர் ஒருவரை விடுவித்து, வீரவுரை பேசி அலிக்குச் சவாலுரைத்து, தூதனுப்பி வைக்கவும் செய்கிறான் பூதராசன்.

உமர், உதுமான், அலியார் தோப்புகளில் தொடர்ந்து ஷம்சுதீன், அப்துல் அசீசு, உமர்மஹறி தலைமையில் நபிபடைகள் பூதராசனை எதிர்க்கின்றன. இந்த இரண்டாவது, மூன்றாவது நான்காவதுப் போர்களிலும் முதல் போரில் நடந்தது போல் நிகழ்வுகள் நடக்கின்றன. நான்காவது தடவையும் அசுகாபிகள் பலர் இறக்க,

நபித்தோழர் தூது வந்து விபரஞ் சொல்ல எல்லோரும் கலக்கமடைகின்றனர். ஹஸ்ரத் அலிப்புலியாரோ கடுமையான சுரத்தில் படுத்த படுக்கையாகக் கிடக்கிறார்.

இறுதியில் இறைதூதர் முகமது நபிகயும், ஆட்சி யாளர்கள் அபூபக்கர் சித்தீக், உமறுல் கத்தாபு, உதுமான் ஆகியோர்களும் பெருந்திரளாக நபித்தோழர்களைத் திரட்டிக் கொண்டு படையெடுக்க முடிவெடுக்கின்றனர். இச்செய்தியை இமாம் ஹசன், ஹுசைனார்கள் தந்தையார் அலியாரிடத்தில் அறிவிக்கின்றனர். தளர்ந்த நேரத்திலும் அவர் வீராவேசங்கொண்டு கிளர்ந்தெழுகிறார். வீறுகொண்டெழுந்து வேகமாக வேதர்நபியை நோக்கி விரைகிறார். "அடியேன் இருக்கையில் தாங்கள் போவது அழகோ நன்னபியே? பூதப்படைக்கு என்னை அனுப்பிட விடை தாருங்கள் நபியே" என வேண்டி நிற்கிறார். நபி விடை கொடுக்க அலி படை எடுக்கிறார்.

புலிகளும் நடுங்கின நரிகளும் நடுங்கின
பூமிதனிலுள்ள
சிங்கமும் நடுங்கின யாளியும் நடுங்கின
தேவும் நடுங்கினவாம்!

ஏழு வானமும் ஒரு பூமியும் ஏழு கடல்களும் மலையும் எங்கும் அதிர்ந்திட அலிப்புலியார் தனது குதிரையில் பூதராசனை எதிர்க்கச் செல்கிறார்.

பூதராசனுக்கும் அலியாருக்கும் நடந்த போரில் ராசன் வீழ்ந்து படுகிறான். நபித்தோழர் விடுவிக்கப் படுகின்றனர். பூதமொன்றினை மலுக்கு முலுக்கிடம் நல்வழித் தூதனுப்புகிறார் அலியார். சினமடைந்த கொடுமன வேந்தன், அலியார் தலையை அறுத்து வர சங்கிராசன் தலைமையில் பெரும் படைகளை அனுப்பி வைக்கிறான். களத்தில் ஹஸ்ரத் அலியார் வாளேந்தி நிற்கின்றார். அலியாரை விழுங்கிடத் தனது ராட்சசப் பறவைக்குக் கட்டளையிடுகிறான் சங்கி. ஆனால் கண்

இமைக்குமுன் அலியாரின் வாளால் அது வெட்டுப் பட்டு வீழ்கிறது.

கோபமடைந்த சங்கிராசன், "என்னை ஜெயித்திடவா வந்தாய் ஏழை மானிடனே" என ஏளனம் செய்கிறான். எண்பது பார கத்தியை எடுத்து ஏந்தல் அலியார் மீது விரைவாக வீசி எறிகிறான். அது இரண்டு துண்டாய் வீணாய் முறிந்து விழுகிறது. அலியாருடன் ஆவேசங் கொண்டு மற்போரும் செய்கிறான்.

**முட்டிமோதியே கீழே விழுந்தான்**
**முரட்டு சங்கிராசன்**
**நீண்ட மரம்போல் கீழே விழுந்தான்**
**நீள சங்கிராசன்!**

சங்கிராசன் தோல்வியைத் தழுவ எஞ்சிய பூதமும் ஜின்களும் புறமுதுகு காட்டி ஓடுகின்றன; வேந்தன் மலுக்கு முலுக்கிடம் விபரம் அறிவிக்கின்றன.

இரு விழிகளும் எரிதழலாய் மாறிடப் பல்லை நறநறவெனக் கடித்த மலுக்குராசன் உடனே படைபுறப் பாட்டிற்குக் கட்டளையிடுகிறான். ஜின் படைகளும், சங்கிப் படைகளும், றூமிப் படைகளும், துருக்கிப் படைகளும் கடல்போல் எழத் தொடங்குகின்றனர். எட்டுத் திக்கும் வானிடிபோல் ஓசை முழங்க, ஹஸ்ரத் பிலால் மினாராவின் மேல் ஏறிச் சென்று பெரும்படை அளவினைக் கண்டு, வியந்து கலங்கி வேதநபிகளிடம் செய்தியுரைக்கிறார். வழக்கம் போலவே நபிமருகர் நல்வீரர் அலிப்புலியார் படையெதிர்த்துச் செல்கிறார்.

சிறிய அளவினதான முஸ்லிம் படைகளுக்கு இறை நம்பிக்கையும் நெஞ்சுறுதியுமே கைமுதலாய் அமைந்தது. மினுமினுவெனக் கத்திகள் மின்னுகின்றன. தகதகவென வாள்கள் ஒளிர்கின்றன. மலுக்கின் படைகள் மண்ணைக் கவ்வத் தொடங்குகின்றன. இறுதியில் அவர்கள் தோல்வியைத் தழுவுகின்றனர். எஞ்சிய படைகளை

நல்வழிப்படுத்தி விடுதலை செய்கின்றார் வீரஅலிப்புலியார். இவ்வாறு இறுதிப் பகுதியில் விளக்கமின்றித் திடீரென முடிவடைகிறது மலுக்கு முலுக்கு ராஜன் கதை.

நாட்டுப்புறவியல் கூறுகள் மிகுந்தமையும் ஒரு கதைப் பாடலாக மலுக்கு முலுக்கு ராஜன் கதை திகழ்கிறது. பாடுவதற்கேற்ற பண்பில் சந்தமும் ஓசைநயமும் நூல் முழுவதும் மலிந்து காணப்படுகிறது.

எதுகை மோனை இயைபுகளும் ஒலி அடுக்குகளும் ஆங்காங்கே வந்து இதயத்திற்கு இன்பமூட்டி நிற்கின்றன.

**ஏழு வானமுங் கிடுகிடுவென்று**
**எங்கு மதிர்ந்து போச்சு**
**ஏழு பூமியுங் கிடுகிடுவென்று**
**எங்கு மதிர்ந்து போச்சு!**

போன்ற வரிகளில் எதுகை மோனையும் இறுதியியைபும் பொருந்தியமைகின்றன. பல்வேறிடங்களில் இது போன்ற சந்தத் தொடர்கள் தொடர்ந்து பல வரிகளில் வந்தமையும் நிலை காணக்கிடக்கின்றது.

முதல் வரியிலிருந்து ஒரு சில சொற்கள் மாறு பாடடையத் தொடர்ந்து வந்தமையும் இந்நிலை ஓசை மிகுவிப்பதோடு கதை நீட்சிக்கும் கருத்து அழுத்தத்திற்கும் துணைபுரியுமாறு அமைவனவாகும்.

நீண்ட வரிகளில் ஒரே தொடர்களே மீண்டும் மீண்டும் வரும் இத்தகைய இயல்பு நாட்டுப்புற இலக்கியத் திற்கே யுரிய தனித்துவமிக்க நிலையாகும்.

நாநவில் வாய்ப்பாட்டின் தாக்கம் மலுக்கு முலுக்கு ராஜன் கதையில் மிகுந்தமைவதால் உரைநிலைத் தொடர் களும் ஆங்காங்கே இடம்பெற்றுச் செல்கின்றன. கதையை நேயர்களுக்கு எடுத்துரைக்கும் பாணியில் அமையும் உரைநிலைத் தொடர்கள் கதைப் பாடல் நடையை நெகிழ்ச்சிபெறச் செய்வதோடு நாட்டாரியல்பையும் நினைவூட்டியமைகின்றன.

இந்த விதமாய், என்று, ஆகையால், அந்த, அந்நேர வேளையில், அப்படி, இப்படி போன்ற உரைநிலைகள் இடையிடையே இடம்பெறுகின்றன. தாண்டித்தாண்டி, கிடுகிடு, கிறுகிறு, பொடிப்பொடி, கலகல, கிலுகிலு, ஓங்கிஓங்கி, மடமட, நின்றிடும் நின்றிடும், நெற நெற, துண்டு துண்டு, கண்டங்கண்டம், பளபள, சிதறிச்சிதறி, படபட, தடதட, குமுகுமு போன்ற அடுக்குச் சொற்களும் ஆங்காங்கே வந்து செல்கின்றன.

இவை கதைப் பாடல்களைக் களைகட்டும் விதத்தில் நடத்திச் செல்லத் துணைபுரியும் வார்த்தை ஜாலங்களாக அமைவனவாகும்.

பாமரர் பாட்டுக்களில் அவர்கள் பேச்சு வழக்கியல் தாக்கம் பெறுவது இயல்பு. வழக்குச் சொற்களும் கொச்சைகளும் நாட்டார் கதைப்பாடல்களை எதார்த்த நிலைக்கு இழுத்துச் செல்வனவாகும். மலுக்கு முலுக்கு ராஜன் கதையிலும் அரபு, தமிழ் சொற்களின் வழக்கியல் அமைந்துள்ளதைக் காணலாம்.

இஷ்டர், அன்னம், விசனம், கிருபை, வயணம், நாலு, பாத்திபர், சந்தோஷம், பள்ளி, பாவா, அசந்து, பாரச்சண்டை, துஷ்ட, பந்தங்கள், ஏகன், தேசம், பசியாறு, உடுமானங்கள், ஓதிட, சேதி; வரிசைகள், வருஷம், கெலித்திட, பிராணநாதா, வஸ்த்து, ஆங்காரம், குந்தி, தைரியம், சயம், சேவகப்பாடி, ராசாதிபதி. சனங்கள், சாமி, முனிவு, அன்பது தொழுது, வலசை, தினகரன், சகம், பெலம், சங்கை, சங்கதி, வாகா, கெம்பீர, தண்டம், குஸ்த்தி போன்ற சொற்கள் தமிழ் வழக்கியலைக் காட்டுவன.

மக்கா, நபி, கல்பு, ஒலி, தீன், மகரிபு, ஜின், துவா, பஜறு, ஷஹீது, நசியத்து, பாத்திஹா, சலாம், கலிமா, அஸ்காபு, யார், பற்கத், றஹ்மத் போன்ற அரபுச் சொற்களும் பல இடங்களில் பயின்று வருவது காணலாம். பசறு, ஒலி, யார், சகிது, அசுகாபு போன்ற அரபுச்

சொற்கள் தமிழ் ஒலியமைப்புப் பெற்று வரும்போது சுவை சிறக்கின்றது. பெரிய நபியுல்லா, வேத நபியுல்லா, வல்ல நபியுல்லா, தூய நபியுல்லா, போன்ற அடைபுணர் பெயர்கள், நபியை தமிழ்மயப்படுத்தும் பாங்கில் அமைவதும் கற்று இன்புறத்தக்கதாகும்.

வரலாற்றுணர்வு குறைந்தமையும் கதைப்பாடல்களில் கற்பனையின் தாக்கம் மிகுந்தமைவது மரபு. கற்பனையும் வருணனையும் கற்பார் நெஞ்சைப் பிணிப்பனவாகும்.

கதைப் பொருளைக் கற்பனைத் தேனில் குழைத்து ஊட்டும் ஆசிரியர் திறம் வியக்கத்தக்கது. மலுக்கு முலுக்கு ராசனில் பாத்திரங்களும், நிகழ்வுகளும் கற்பனைச் சுவையும் சாயமும் பூசப்பட்டமைகின்றன.

ஜின், பூதம், சங்கி ஆகியவை இயற்கைக்கு அப்பாற் பட்ட கற்பனை வண்ணம் பெற்ற பாத்திரங்களாகும்.

பூதராசன், சங்கிராசன், மலுக்கு முலுக்கு முதலியோர் அதீதக் கற்பனையாற்றல் மிக்கவர்களாகவே காட்டப் பெறுகின்றனர். கற்பனை, வருணனை நிகழ்வுகளுக்கு தனித்தனியாகவும் தொடர்ந்தும் வரும் உவமைகள் சுவை யூட்டுகின்றன.

புலிவாய் மீண்டஆடது போல...
நரிவாய் மீண்ட கோழியைப் போல...
பாம்பிடம் மீண்ட தேரையைப் போல...
தீயினிலிட்ட மெழுகது போல...
தயிரின் குடம் போல...
மணலில் போட்ட மீனது போல...

போன்ற உவமைகள் தொடர்ந்து வந்து கதையை, கருத்தை விளக்கிச் சுவை சுரக்கச் செய்கின்றன. ஜின் பெருத்த மலைபோல் காட்சியளிக்கின்றது. அம்புகள் மழைபோல் பெய்கின்றன. புலியும் புலியும், சிங்கமும் சிங்கமும், மலையும் மலையும் எதிர்த்தாற் போல் உமர் மஹறியும் பூதராசனும் போர் செய்கின்றனர். பல்வேறு

இடங்களில் இத்தகைய பொருள் விளக்க உவமைகள் பயன்படுத்தப்பெறுவது சுவையூட்டி அமைகின்றன.

மலுக்கு முலுக்கு ராஜன் கதையில் சமய நம்பிக்கைகளும் மரபுகளும் மிகுந்து காணப்படுகின்றன. போர்க் கதைப் பாடல்களில் அறிவுறுத்தப்படும் வீரச்சுவர்க்கம் பற்றிய கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன. இறைவனிடம் இறைஞ்சுதல், இறைவனை வாழ்த்திப் போற்றுதல், சலாம் எனும் முகமன் உரைத்தல், இறை நம்பிக்கை ஈமான் கொள்ளுதல், மூலமந்திரக் கலிமா உரைத்தல், இறை வணக்கம் செய்தல், இறைநாமம் பிஸ்மி மொழிந்து தொடங்குதல் முதலிய சமயமரபுகள் சுட்டிச் செல்லப் படுவது காணலாம். அதீதக் கற்பனையில் எழுந்த கதைப் பாடலாயினும் இஸ்லாமிய சமய நம்பிக்கையின் நாடியான அடிப்படை மரபுகள் வழுவாது பாடலை அமைத்துச் செல்லும் ஆசிரியர் திறம் வியந்து போற்றற் குரியது.

இயற்கைவியலுக்கு அப்பாற்பட்ட செயற்கைக் காட்சிகள் கதைப்பாடலில் ஆர்வத்தையும் சுவையையும் மிகுவிக்கும் கூறுகளாக அமைவன. இயற்கையை விஞ்சும் இத்தகைத்த மீமானிட ஆற்றல்மிகு காட்சிகள் பல மலுக்கு முலுக்கு ராஜன் கதையில் இடம்பெற்றுள்ளன. ஜின், பூதம், சங்கிப்படைகள் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட தோற்றமும் ஆற்றலும் பெற்றவர்களாகச் சித்திரிக்கப் படுவது காணலாம்.

நூற்றுப் பதினாறு முழம் நீளமுடைய பூதராசன் நூறுகல கோதுமையுணவும் முப்பது ஒட்டக இறைச்சி யையும் சேர்த்துப் புசிப்பது வியத்தகு விந்தையாகிறது. வானவர் ஜிபுரயீல் இறைவனிடமிருந்து செய்தியை இறைத்தூதரிடம் எடுத்துரைக்கும் குறிப்புக்களும் உள்ளன.

சேவகப்பாடி யொருவன் குதிரைமேல்
சிங்கம் போலேறி
உருவிய கத்தியை கையிலே பிடித்து
ஊருக்குள்ளே வந்தான்

ஆலமரத்தையவன் வெட்டிப் போட்டான்
ஆங்காரங் கொண்டு
தழைத்த மரத்தையவன் வெட்டியே போட்டான்
தடையுமில்லாமல்!

மலுக்கு முலுக்கின் மனைவி கண்ட இந்தக் கனவு இயற்கை இகந்த செயற்கையாற்றலைக் குறிப்பதோடு வருபொருளையும் குறிப்பால் உணர்த்தி நிற்கின்றது.

நபி நாயகம் படைத்தலைமை பூண்டு பூதராசனை எதிர்க்கப் புறப்பட வானவர்கள் வாழ்த்தி நிற்கின்றனர். சொர்க்கலோகத்துப் பெண்கள் பூமாரி பொழிகின்றனர். நபிகளார் சந்திரனை அழைத்துப் பேசியது, மேகம் அவர்கள் செல்லுமிடமெல்லாம் குடையிட்டது. நாகப் பாம்பொடு நயமாகப் பேசியது, வெம்புலியுடன் நன்மொழி யுரைத்தது போன்ற அதிசயச் செய்திகளும் மீமானிட வியலைச் சுட்டி அமைகின்றன.

நல்வழித் தூது நயம்பட எடுத்துரைக்கப்பெறும் இடங்களும் உண்டு. எனினும் கொடுமன ராஜன் முன்னே அது நிராகரிக்கப்படுகிறது. பதிலாக வலிந்து தாக்கும் போருக்கான தூது பாதகனிடமிருந்து செல்வ தையும் காணலாம். வீறுகொண்டெழுந்து வஞ்சின வுரைகள் வழங்கப்படுவதும் பல இடங்களில் காட்சி யாகிறது. போர் எழுச்சியின்போதும் படைப்புறப் பாட்டின்போதும் பல்வகைக் கருவிகளின் ஒலி முழக்கம் விண்ணைமுட்டும் வகையிலமைவது சுவை நல்குவதாகும்.

படைவழிப் பயணங்கள் பல, கோலாகலங்களு டனும் ஆரவாரத்துடனும் அமைகின்றறன. படைகள் அளவு பற்றிய எண் குறிப்புக்களும் இடம் பெற்றுள்ளன. இவையெல்லாம் போர்க்கதைப் பாடலுக்குரிய இயல் பினைச் சுட்டியமைவனவாகும்.

முஸ்லிம் வரலாற்றுப் பிரசித்தி பெற்ற சில போர்களை மாதிரியாகக் கொண்டு கற்பனையில் எழுந்த

ஒரு கதைப்பாடலாக மலுக்கு முலுக்கு ராஜன் கதை திகழ்கிறது. இக்கதைப் பாடலிலும் வழக்கம் போல் தற்காப்புக் காரணமாகவே போர் நிகழ்கிறது. அநீதி யுடையவர்களை அழிப்பதற்கின்றி, நீதியின்பாற்படுத்தவும் நல்வழிப்படுத்தவுமாகப் போர் அமைகிறது.

நபி நாயகத்துடன் ஆட்சியாளர் நால்வரான ஹஸ்ரத் அபூபக்கர், உமர், உதுமான், அலியார் ஆகியோர் முக்கியப் பாத்திரங்களாகின்றனர். எனினும் கதைத் தலைமை அலிப்புலியாருக்கே உரியதாகும்.

தலைமைப் பாத்திரமாக, தாகா நபி அமைகிறார். இமாம் ஹசன், ஹுசைன், ஹஸ்ரத் பிலால், பாத்திமா நாயகி முதலியோர் கிளைப்பாத்திரங்களாகக் காட்சி தருகின்றனர். ராட்சசப் பாத்திரங்களுடன் சாதாரண மனிதர்கள் போர்ப் பொருதுவது கற்பனை நலம் விளை விப்பதாகும்.

கதைப் பாடல், அமைப்பிலும் போக்கிலும் தேசிங்குராஜன் கதைப் பாடலை நினைவூட்டியமைகிறது. நாட்டார் நாவில் நின்றாடும், நினைவில் நித்யமாகத் தவழும் இசை நலனும் அணியழகும் மிக்கதோர் கதைப் பாடலாக மலுக்கு முலுக்கு ராஜன் கதைப் பாடல் திகழ்கிறது என்றால் மிகையாகாது.



## உடனுதவியவை

### மூலநூற்கள்

1. அப்துல் காதிர் ராவுத்தர், காசிம் படைப்போர் (1925)
2. அப்துல் காதிர் சாகிபு, வாலை, சைத்தூன் கிஸ்ஸா (1958)
3. அப்துல் காதிர் சாகிபு, வாலை, மலுக்கு முலுக்கு ராஜன் கதை (1949)
4. அசனலிப்புலவர், ஐந்து படைப்போர் (1894)
5. நடராசன் .தி & சர்வேஸ்வரன் .ப (பதிப்பர்), தம்பிமார் கதை (1977)
6. முகியித்தீன் புலவர், வரிசை, சக்கூன் படைப்போர் (1900)
7. வானமாமலை .நா (பதிப்பர்), கான்சாகிபு சண்டை (1972)
8. வையாபுரிப் பிள்ளை .எஸ் (பதிப்பர்), இராமப்ப அய்யன் அம்மானை (1951)
9. வையாபுரிப்பிள்ளை .எஸ் (பதிப்பர்), இரவிக்குட்டிப்பிள்ளை போர் (1951)

### தமிழ் ஆய்வு நூற்கள்

1. கமலய்யா .க.சி., இராமப்ப அய்யன் அம்மானை ஆராய்ச்சி (1980)
2. கைலாசபதி .க., ஒப்பியல் இலக்கியம் (1969)
3. கோமதி நாயகம் .தி.சி., தமிழ் வில்லுப்பாட்டுகள் (1979)
4. சஞ்சீவி .ந., கும்மந்தான் கான்சாகிபு (1960)
5. சண்முகசுந்தரம் .சு., நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு (1976)
6. சுப்பிரமணியன் .ச.வே., நாட்டுப்புற இயல் ஆய்வு
7. சுவாமி .எஸ்.கே., கான்சாகிபு கம்மந்தான் (1960)
8. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு (1978)
9. மகாதேவன் .கதிர்., ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம் (1975)
10. மகாதேவன் .கதிர்., பழந்தமிழர் வீரப் பண்பாடு (1980)
11. மஹறதி, மாவீரர் கான்சாகிபு (1961)

12. லூர்து .தே, நாட்டார் வழக்காற்றியல் (1976)
13. லூர்து .தே, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் (1981)
14. ஜான் சாமுவேல், இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள் (1978)

## ஆங்கில ஆய்வு நூற்கள்

1. Alan Dundes, The Study of Folklore (1965)
2. Arunachalam .M, Ballad Poetry (1976)
3. Bowra .C.M, Heroic Poetry (1952)
4. Hameed K.P.S., Folklore in Tamil Nadu
5. Kailasapathy .K, Tamil Heroic Poetry (1968 )
6. Vanamamalai .N, Interpretation of Tamil Folk Creations (1981)

## மலையாள ஆய்வு நூற்கள்

1. சங்குண்ணி மேனோன் .பி., திருவிதாங்கூர் சரித்திரம் (1973)
2. வசந்தன .எஸ்.கே., கேரள சரித்திர நிகண்டு (1983)

## தமிழ்க் கட்டுரைகள்

1. உவைஸ் .எம்.எம், சக்கூன் படைப்போர் (1976)
2. உவைஸ் .எம்.எம், சைத்தூன் கிஸ்ஸா (1976)
3. சண்முக சுந்தரம் .சு, அம்மானை ஓர் ஆய்வு (1981)
4. பெருமாள் .ஏ.என், கதைப் பாடல்கள் (1983)
5. மீரான்பிள்ளை .எம்.எம். திருமலர், மக்கள் இலக்கியம் (1975)
6. மீரான்பிள்ளை .எம்.எம். திருமலர், இஸ்லாமியத் தமிழ் வீரப்பாடல்கள் (1978)
7. மீரான்பிள்ளை .எம்.எம். திருமலர், இஸ்லாமியத் தமிழில் நாட்டுப்புறவியல் கூறுகள் (1980)
8. மீரான்பிள்ளை .எம்.எம். திருமலர், படைப்போர் இலக்கியம் ஆய்வு (1981)
9. மீரான்பிள்ளை .எம்.எம். திருமலர், கதைத் தொடர் ஐந்து படைப் போர் (1982)
10. வானமாமலை .நா., கதைப் பாடல்களில் சோக முடிவு (1981)

□□□

**தமிழின் முதல் அறிவியல்**
**உளவியல் உள்ளொப்பியல் ஆய்வு நூல்**

# காப்பிய உளவியல் பார்வை

*ஆசிரியர்:*

**பேரா. முனைவர் திருமலர். எம்.எம்.மீறான்பிள்ளை**

குயிற்பாட்டு, குடும்ப விளக்கு, மருமக்கள் வழி மான்மியம் ஆகிய மூன்று குறுங்காப்பியங்கள் பற்றிய ஆய்வுகளை 'காப்பிய உளவியல் பார்வை' என்ற நூலில் வெளியிடுகிறார் ஆசிரியர் திருமலர் எம்.எம்.மீறான். கவிஞரின் வாழ்க்கை வரலாற்றை வைத்து அவனது படைப்பைப் புரிந்துகொள்ளும் உளவியல் ஆய்வு இந் நூலுள் மேற்கொள்ளப்பட்டுள்ளது. மொத்தத்தில் இது மூன்று காப்பியங்களைப் பற்றிய முழுமையான ஆய்வை வெளியிடுகின்ற முதன்மையான நூல் என்பதில் ஐயமில்லை.

**தினமலர்**
*7-10-77*

பாரதியாரின் குயில் பாட்டு, பாரதிதாசனின் குடும்ப விளக்கு, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் மருமக்கள் வழி மான்மியம் எனும் மூன்று காப்பியப் பாடல் நூல்களின் ஆய்வுரை இந் நூலாக வெளி வந்துள்ளது. கவியுளங் கண்டு அதனைத் திறம்பட எடுத்துரைப்பதில் ஆசிரியர் வெற்றி பெற்றுள்ளார். நாற்பத்திரண்டு திறனாய்வு நூற்களின் துணைகொண்டு தக்க மேற்கோள்கள் தந்து மேனாட்டவர் பின்பற்றும் முறையைத் தழுவி ஆசிரியர் ஆராய்ச்சி வழி அமைந் துள்ளது. இலக்கியத் திறனாய்வுத் துறையில் ஆர்வமுடைய மாணவர்கள் இந்நூலால் நல்ல பயனை அடையலாம்.

**தினமணி**
*19-2-78*

**பக்கங்கள்: 176. விலை : ரூ. 110.00**

**வெளியீடு: அருள் பதிப்பகம், எம்.ஜி.ஆர். நகர், சென்னை - 78.**

## நூலாசிரியர் தகவல் குறிப்பு



தமிழின் முதல் அறிவியல் உளவியல், ஒப்பியல் நூலான 'காப்பிய உளவியல் பார்வை', முஸ்லிம் தமிழ் படைப்போர் வகை காப்பியங்கள், கதைப்பாடல்கள் ஆய்வு பற்றிய 'முஸ்லிம் தமிழ் வீரக்கவிதை' நூல்களின் ஆசிரியர். மீண்டும் வெளிவருகின்ற இந்நூல் 'வீரக்கதைப் பாடல்கள் விளக்கவியல்' தமிழின் முதல் கதைப்பாடல் ஆய்வு நூல் என்பது குறிப்பிடத்தக்கது.

முதுகலையில் பதிப்பாசிரியராக ஆய்வுத் தொகுப்புகளை வெளியிட்டமைக்காக உலகின் மிகப் பெரிய, புகழ்பெற்ற அமெரிக்க காங்கிரஸ் நூலகத்தின் நூலாசிரியர் தகவல் தொகையில் இடம் பெற்றவர். தொடர்ந்து மத்திய சாகித்ய அக்காதமி, புதுதில்லி உலக எழுத்தாளர் மன்றம், மத்திய மொழிகள் நிறுவனம், உலகத் தமிழ் ஆய்வு நிறுவனம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்ட எழுத்தாளர் களஞ்சியங்களில் இடம் பெற்றவர்.

அறிஞர்கள் இலக்குவனார், மு.வ., வ.சுப.மா., அ.மு.ப., வ.அய்.சு., சி.பா., ச.வே.சு., சி.ஜெ., எஸ்.எஸ். போன்றவர்களால் பாராட்டி ஊக்குவிக்கப்பட்டவர். 'குயில்' இதழில் 'பாவேந்தர் பரம்பரை' பகுதியில் அறிமுகப்படுத்தப்பட்டவர். இந்தியப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் மன்ற சிறந்த ஆய்வுக்கட்டுரை விருதுகள், சைவத் தமிழ் கட்டுரைகளுக்காக வாரணாசி மட உழவாரப் பரிசு, சிறந்த நூலுக்கான இலக்கியச் சுடர் விருது, தமிழ்ப் பணிக்காகத் தமிழ்மாமணி விருது போன்றவை பெற்றவர்.

திருவிதாங்கூர் அரசின் முன்னாள் திவானும் பிரதான அமைச்சருமாகிய ராஜா கேசவதாஸ் இளமையில் நின்று வளர்த்த தேங்காய்ப்பட்டினம் பண்டகசாலை புத்தன் வீட்டில் பிறந்தவர். தமிழில் இரு பெரும் வீராங்கனைக் காப்பியங்கள், இரு கதைப் பாடல்கள், பதினான்கிற்கும் மேற்பட்ட சிற்றிலக்கியங்கள் படைத்தளித்த குஞ்ஞு மூஸா கவிராசர், நிமிட அற இசைக்கவியான பக்கீர் மீறான் பிள்ளை பரம்பரையில் பிறந்தவர்.

பல்வேறு உலக, தேசிய மாநாடுகளில் வழங்கிய இருநூற்றிற்கும் மேற்பட்ட கட்டுரைகள் பல ஆய்வுக் கோவைகளில் வெளிவந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

